MANGAYAR MALAR

செப்டம்பர் '95 ரூ. 9/-

# மங்கையர் மலர்



நவராத்திரி சிறப்பிதழ்

+

'வீட்டிலேயே செய்து சுவைக்கலாமே!' இணைப்பு

# 50 வயதில் தாயாவதா?

சமீபத்தில் ஒரு மருத்துவருடன் பேசிக் கொண்டிருந்தேன். அவர் சொன்ன ஒரு நிகழ்ச்சி... கிட்டத்தட்ட ஐம்பது வயதைத் தொட்ட ஒரு பெண்மணிக்குச் சமீபத்தில் அவருடைய நர்ஸிங்ஹோமில் டெலிவரி பார்த்தாராம். அந்தப் பெண் மணி பாவம், தனக்கு மாதவிடாய் நின்று விட்டது என்ற நினைப்பில் கவலைப் படாமல் இருந்து விட்டிருக்கிறார். ஐந்து மாதங்கள் கழித்துச் சந்தேகம் பிறாண்ட இவரிடம் வந்தபோது... நிலைமை முற்றிப் போயிருக்கிறது.

"பாவம் அவர். அதற்கு மேல் கருக்கலைப்பு சாத்தியமேயில்லை. அவர் கூனிக் குறுகிப் போய் விட்டார். அவரைத் தேற்றி மற்ற குடும்ப அங்கத்தினர்களிடமும் பேசினேன். 'என் பேத்தியா'ன்னு கேட்பாங்களேன்னு' அந்த அம்மாள் அழுததை என்னால் மறக்கவே முடியாது."

சங்கடமான வருத்தம் தோய்ந்த சிரிப்போடு அந்தத் தோழி சொன்ன போது கஷ்டமாக இருந்தது. மகனோ, மருமகனோ, மற்றவர்தான் ஆகட்டும் அவரையோ, அவர் கணவரையோ எப்படி இகழ்ச்சியாகப் பார்த்திருப் பார்கள்! வாய்விட்டுச் சொல்லக் கூடிய நிலையில் மூத்தவர்கள் இருந்தால் கண்டிப்பாகச் சாடியிருப்பார்கள், ஏதோ இவர்கள் எல்லாம் தாய் தந்தையே இல்லாமல் பிறந்து, புத்தபிரானைப் போல ஆசையே இல்லாமல் வாழ்வது போல....

நம் குடும்ப அமைப்புகளில் மிகவும் உறுத் தக்கூடிய விஷயம் இது. தாய்மை நிலை வரை போவானேன், வயதான தம்பதியர் ஒருவருக்கொருவர் நெருங்கி வாழ்ந்தால் கூட அதைப் பற்றிக் கேலியும் கிண்டலுமாகப் பேசாதவர்களே இல்லை.

"கிழவியப் பாரு, இப்பதான் புதுப் பொண்ணு மாதிரி எப்பவும் அலங்காரமும், புருஷனோட இழைசலும்...." என் பார்கள்.

"இந்த வயசுல கூட தனி ரூம் வேணுமா என்ன. எல்லாம் கூடத்தில் இருக்கட்டும்..."

என்று சொல் அம்பு வீசுவார்கள். கணவன், மனைவி என்றாலே அவர்கள் உடல்ரீதியாக வாழத்தான் தனிமை கேட்கிறார்கள் என நினைப்பது எத்தனை கேவலம். அப்படியே இருந்தாலும் அதிலே தவறு கண்டு பிடிக்க இவர்கள் யார்?

நம் பழைய காலத்தில் ஒரு குறிப்பிட்ட வயதிற்குப் பிறகு 'வானப்ரஸ்தம்' என சந்நியாச வாழ்க்கையை வைத்திருந்தார்கள். அதுவும் தவிர பெரிய கூட்டுக் குடும்பங்களாக வாழ்வார்கள். குடும்பம் விரிந்து குழந்தைகள் பெரிதாகும் போது பொறுப்புக்களும் பெருகும். கணவருக்கும், மனைவிக்கும் ஓயாத வேலை. அதன் நடுவிலும் கூட கண்களின் மூலமே கேள்விபதிலாக அன்பில் இழைந்து வாழ்ந்து வந்தார்கள்.

இன்றைய வாழ்க்கை அப்படி இல்லை. குடும்பம் என்றால் நால்வர், ஐவருக்கு மேல் இல்லை. அவரவர் தனித்தீவாகத் தான் வாழ்கிறார்கள். திருமணமே இருபத்தைந்து, முப்பது வயதிற்குத்தான் ஆகிறது. இன்றைய சத்தான உணவு, நவீன உணவுகள் காரணமாக ஆரோக்கியமும்,

**மஞ்சுளா ரமேஷ்**



தேங்காய்ப் பால் பிழிந்து, மீதமுள்ள தேங்காய்ச் சக்கைகளை, வெயிலில் உலர்த்தி, ஒரு டப்பாவில் எடுத்து வைத்துக் கொண்டால், கலர்க் கோலம் போட உதவும். நவராத்திரி வருவதால் கொலுவுக்கு முன்பு, தேங்காய்ச் சக்கையில் வண்ணப் பொடி கலந்து, கோலம் போட்டால், கொலுவிற்கு அழகு கூடும்.

— சித்ரா ஸ்ரீதரன்

ஆயுளும் பெருகியுள்ளது. குடும்பப் பிரச்னைகள் அதிகமாகியுள்ள அதே நேரத்தில் விழிப்புணர்வின் காரணமாக ஒருவருக்கொருவர் நல்ல தோழமையும் வளர்ந்துதான் உள்ளது.

ஆனால் வயதானவர்கள் என்றால் மட்டும் அவர்கள் முற்றும் துறந்த முனிவர்களாக ஆகிவிட வேண்டும் என நடுத்தர வயதினரும், இளம் வயதினரும் நினைப்பது என்ன நியாயம்? குறிப்பாக அந்தப் பெண் மணியைத்தான் அனைவரும் பார்வையாலேயே கிண்டிக் கிளறி விடுவார்கள். இது எத்தனை நேர்மையற்றதனம்?

பரபரப்பான வாழ்க்கை, குழந்தை வளர்ப்பு, கடனோ, உடனோ வாங்கி கல்யாணம் கார்த்தி என ஐம்பது வருடங்கள் சலிப்பில்லாமல் உழைத்திருப்பார்கள். இப்போது பிள்ளைகள் எல்லாம் பெரியவர்கள் ஆகி விட்டிருப்பார்கள். அவரவர் கூடு அவரவர் குழந்தைகள். எங்கேயோ ஒரு பிள்ளையிடத்தில் 'அக்கடா' என நிம்மதியாகக் கணவனும், மனைவியுமாக சேர்ந்து வாழவே வயதான தம்பதிகள் விரும்புவார்கள்.

எத்தனையோ வீடுகளில் அப்பா இங்கே ஆறுமாதம், அங்கே அம்மா ஆறு மாதம் எனப் பிரித்து வைக்கும் கொடுமையெல்லாம் நடப்பதுண்டு. நம்மைப் போன்ற வாழ்க்கையை வாழ்ந்து அதைக் கடந்துதான் இப்போது இவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் சேர்ந்து வாழவே விரும்புவார்கள் என மற்றவர்கள் உணர்வதே இல்லை.

மேலை நாடுகளைப் பார்த்து எதை எதையோ கற்கிறோம், அவர்களிடமிருந்து முக்கியமாக நாம் கற்க வேண்டிய பாடமிது. மனிதரின் ஒவ்வொருவரின் தனித் தன்மை யையும் அவர்கள் மதிக்கிறார்கள். கணவன் மனைவியின் தனிமையை மதிக்கிறார்கள். அது இயல்பான ஒன்றாகவே அவர்கள் வாழ்க்கையில் உள்ளது. நாம் மட்டுமே அவர்கள் ஏதோ செய்யக் கூடாத ஒன்றைச் செய்து விட்டது போலவும், கேட்கக் கூடாத ஒன்றைக் கேட்டுவிட்டது போலவும் இகழ் கிறோம், கேலி செய்கிறோம்.

குடும்ப அமைப்பிலேயும் கூட ஒருவரை ஒருவர் மதிப்பது எனும் நாகரிகக் காலக் கட்டத்திற்கு நாம் வருவது தான் சிறப்பு. மாமியார் மாமனார் என்றால் பயப்பட வேண்டியவர்கள், வருபவள் இரண்டாம் பட்சம், பெண்ணைக் கொடுத்தவர்கள் கிள்ளுக் கீரைக்குச் சமமானவர்கள், மாமனாரை மாப்பிள்ளை மதிக்காமல்தான் நடத்த வேண்டும், இப்படி எத்தனை 'கோணலான' வழக்கங்கள் நம்மிடம் பதிந்து விட்டன.

நிறைய படிக்கிறோம், பார்க்கிறோம், தெரிந்து கொள்கிறோம். மத்திய அரசுக் கொள்கைகள் வரை அறிவுபூர்வமாக விவாதிக்கிறோம், எல்லாந்தான் இருக்கிறது. வீட்டு வாசற்படியோடு எல்லாவற்றையும் கழற்றிவைத்து விட்டு அதே பழைய 'மடிசஞ்சி' மகான்களாகத்தான் உள்ளே போகிறோம். உறவு முறைகளுக்குள் கிண்டல், இகழ்ச்சி, சொல் அம்பு, பழித் தூற்றல் எதுவும் குறைந்தபாடில்லை. ஏனிப்படி?

மற்றவர்கள் கிடக்கட்டும். நம் வரைக்குமாவது இதை மாற்றிக் கொள்ளலாமே. ஒருவருக்கொருவர் தோழமையை வளர்த்துக் கொள்ளலாமே! வெளியிலே போய் நண்பர்களைத் தேடுவானேன்? வீட்டுக்குள்ளேயே ஒவ்வொரு மனித மனமும் நமக்குத் தோழனாகட்டும். அப்போது பாருங்கள், எத்தனை விந்தை மாற்றங்கள் நம் வீடுகளில் நிகழ்கின்றன என்று!

ம்... சொல்ல ஆரம்பித்ததையும் மறக்கவில்லை. வயதானவர்களின் உணர்வுகளைப் புரிந்து கொள்ளுங்கள். அவர்களும் உங்களைப் போன்ற மனிதர்கள்தான் என்பதை மறந்துவிட வேண்டாம்.

மங்கையரின் பலவித மனோபாவங்களுக்கு-மீனாட்சி சேலைகள்




Option

# அன்னையின் அருள்



நவராத்திரி என்றாலே கொலுவும், சுண்டலும் நினைவுக்கு வருவதோடு லலிதா ஸஹஸ்ரநாமம், தேவிபாகவதம், தேவி மஹாத்மிய புராணக் கதைகளும் நமக்கு ஞாபகத்துக்கு வர வேண்டும். பரிக்ஷித் மஹா ராஜாவிற்கு சுக முனிவர் சொன்ன "ஸப்தாகம்" என்ற ஏழு நாள் பாகவதமும் தேவிபாகவதத்தில் இடம் பெறும் முக்கிய கட்டம்.

இதை போன வருடம் எங்கள் வீட்டுக் கொலுவில் பொம்மைகள் வடிவில் செய்து வைத்தோம். இது நமக்குத் தெரிந்த கதையாக இருந்தாலும் பல தெரியாத கருத்துக்களும் உள்ளன.

பாண்டவர்கள் எல்லோரும் மறைந்த பிறகு, அபிமன்யுவிற்கும் உத்தரைக்கும் மகனாய்ப் பிறந்த பரிட்க்ஷித் மகாராஜா பட்டம் பெற்ற தினத்தில்தான் துவாபரயுகம் முடிந்து கலியுகம் பிறந்தது. துவாபரயுகம் முடிவில் பரிட்க்ஷித் மகாராஜா கலிபுருஷனை காண்கிறார். ஒரு பசுவின் கால்களை தன் வாளினால் வெட்டிக் கொண்டிருக்கும் கலியை ராஜா கோபித்துக் கொண்டு.

"நில் நீ யார்! ஏன் இந்தக் கொடிய தொழிலை செய்கிறாய்? உன்னை வெட்டி விடுகிறேன் பார்" என்று அதட்டுகிறார். பயந்து, துடித்துக் கொண்டிருக்கும் பசுவைப் பார்த்து கருணையுடன் விவரம் கேட்கிறார் அரசன். அதைக் காப்பாற்ற முயற்சி செய்யும் போது கீழ்கண்ட சம்பாஷணை நடக்கிறது.

**பசு** : "தர்ம நெறியில் வாழும் அரசே எனக்கு ஏன் இந்தத் துயரம் வந்தது என்று என்னைக் கேட்கிறீர்கள். அதன் மர்மம் எனக்கே புரிவதில்லை. சிலர் அறிவின்மையால் (அவிவேகம்) வந்ததென்கிறார்கள். மற்றும் சிலர் கர்மவினையில் வந்தது என்பர். உண்மை எது என்று எனக்கே விளங்கவில்லை."

**பரீக்ஷித்** : "நீ பேச்சும், அறிவும், பெற்ற பசுவாகிறாய். நிச்சயம் நீ பூமண்டலமாகத் தான் இருக்க வேண்டும். உன்னிடம் நிற்கும் தர்மதேவதையை கலி அழிக்கிறான். அதுவே கலியுகத்தின் தன்மை."

**கலி** : "நீதி வழுவாத மன்னா கேள். நான்கு யுகத்திற்கு ஒருமுறை நான் வந்து போகிறேன், நான் வரும் போதெல்லாம் இந்தத் தர்மதேவதை பசுரூபத்தில் வந்து எனக்கு எதிரியாக நிற்கிறாள். நேர்மை, உண்மை, கொடை, தூய்மை இவையே இதன் நான்கு கால்கள். என் காலத்தில் இவைகளை அழிப்பதே எனது தர்மம். இப்பொழுது இதை நான் வெட்டக் கூடாது என்றால். இவ் வுலகில் எங்குதான் வாழ்வது? தாங்கள் நான் வசிக்கத் தக்க ஓர் இடம் அளிக்க வேண்டும்" என்று வாளை உருவிக் கொண்டிருக்கும் அரசனை சரண் அடைகிறான். அடைக்கலம் புகுந் தாரைக் காப்பது அரசனின் கடமை.

**பரீக்ஷித்** : "கொடுந் தொழில் புரியும் கலியே! இவ்வுலகில் உனக்கும் தங்குவதற்கு இடமிருக்கிறது. சூது, வாது புரியும் மாந்தர்களிடத்திலும், கொலை, களவு, பெண்களை கொடுமை படுத்துவர்களிடமும் வாழ்ந்து கொள்."



"நன்றி. உத்தரவு" என புறப்பட்ட கலி பூமியைச் சுற்றி வந்தான்.

அரசன் உத்தரவுப்படி தங்கும் இடங்கள் மிகக் குறைவானபடியால் இவ்வரசனை தொலைத்துவிட எண்ணம் கொண்டான். உலகில் எல்லா இடங்களும் தன்வசம் வர வேண்டுமானால், இந்தத் தர்ம ராஜாவை சீக்கிரம் ஒழிக்க வேண்டும். தருணம் காத்து இருந்து, பரீக்ஷித் காட்டில் வேட்டையாட போகும் சமயம் அவன் உள்புகுந்து மிகுந்த தாகத்தை உண்டு பண்ணினான்.

ஒரு ஆசிரமத்தின் முன் 'சமிக' முனிவர் யோக நிலையில் தியானத்தில் இருக்கக் கண்டான். குடி தண்ணீர் வேண்டினான். முனிவர் கண் திறக்கவில்லை. மீண்டும் கூவினான். துரிய நிலையில் இருந்த முனிவர் ஒன்றும் அறியவில்லை. ஆகையால் சற்று பொறுமையிழந்து அதர்ம காரியம் செய்து விட்டான். சமீபத்தில் கிடந்த ஒரு இறந்த பாம்பை முனிவர் கழுத்தில் கிடத்தினான். இதுவும் கலியின் சூழ்ச்சி. அரண்மனை அடைந்த அரசன் தன் தவறு உணர்ந்தான். அதற்குள் முனிவர் மகன் சிருங்கி, தன் தகப்பனாருக்கு இழைத்த அபசாரம் பொறுக்காமல் அரசனுக்கு சாபமிட்டார்.

"ஏழு நாளைக்குள் 'தக்ஷகன்' என்ற கொடும் பாம்பினால் கடிபட்டு இறக்கக் கடவாய்."

யோக சமாதியில் இருந்த முனிவர் கண் திறந்து உண்மையறிந்தார். தன் மகன் அத்தகைய சாபம் கொடுத்தது தவறு என வருந்தி, சாபத்தை அரசனுக்குத் தெரிவிக்குமாறு தூதனை விடுத்தார்.

பரீக்ஷித்தும் தான் செய்த அபராதத்தை நினைந்து வருந்தினான். சாபத்தை ஏற்றுக் கொண்டான். ஒரு பெரிய தடாகத்தின் நடுவே ஓர் உயர்ந்த மண்டபத்தின் மேல் அமர்ந்து சுகமா முனிவரை வணங்கிக் கேட்கிறான். சுக முனிவர் பகவத் சரித்திரத்தை ஏழுநாட்களில் சொல்லலானார். ஏழாம் நாள்




"அகவிருள் அகற்றி அறிவொளி வீசுக"

# K.R.P. பெனிபிட் பண்ட் லிட்




"பெண்கள் நாட்டின் கண்கள்"

பதிவு அலுவலகம் : JVL ஆர்கேட், இரண்டாவது மாடி, Room No. 2,
199, வடக்கு உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை - 600 017.
போன் : 8240120/8240121

தலைமை - கிளை அலுவலகம் : 11, சிவசைலம் தெரு, (முதல் மாடி)
பெரியார் ரோடு சமீபம், தி. நகர், சென்னை-600 017. போன் : 8250865

வேலைநேரம் : காலை 9 முதல் மதியம் 1 மணி வரை, மாலை 3 முதல் இரவு 7 மணி வரை வெள்ளி விடுமுறை

**கீழ்க்கண்ட வட்டி விகிதங்களில் டெபாசிட்டுகள் பெற்றுக்கொள்ளப்படும்.**

குறுகிய கால டெபாசிட்டுகள் ரூ. 2,500/- மற்றும் ரூ. 500-ன் மடங்குகளில் பெற்றுக்கொள்ளப் படும்.

| வட்டி விகிதம் | 15.5% P.A. | 16% P.A. | 17% P.A. | 18% P.A. | 20% P.A. | 21% P.A. |
|---|---|---|---|---|---|---|
| கால அளவு | 30 நாட்கள் | 45 நாட்கள் | 60 நாட்கள் | 90 நாட்கள் | 180 நாட்கள் | 270 நாட்கள் |

**வட்டிக்கான காசோலைகள் முதிர்வுத் தொகையுடன் தரப்படும்**

## KRP சிறப்புத் திட்டம்

| கால அளவு | 3 வருடம் | 2 வருடம் | 1 வருடம் |
|---|---|---|---|
| முதலீடு | ரூ. 3,500 | ரூ. 7,500 | ரூ. 9,000 |
| மாத வட்டி | 24.25% | 23.25% | 22.25% |
| 3 மாத வட்டி | 24.74% | 23.70% | 22.67% |
| 6 மாத வட்டி | 25.51% | 24.41% | 23.31% |
| குமுலேட்டிவ் | 35.16% | 29.25% | 24.67% |
| Yield Amount | ரூ. 7,192/- | ரூ. 11,887 | ரூ. 11,220 |
| KRP சிறப்புத் திட்டத்தின் கீழ் முதலீடு செய்யும் போதே 1 கிராம் தங்கக்காசு இலவசம். | | | |

KRP நிரந்தர வைப்பு நிதி ரூ. 2,500/- மற்றும் ரூ. 500-ன் மடங்குகளில் பெற்றுக் கொள்ளப்படும்.

| கால அளவு | 1 வருடம் | 2 வருடம் | 3 வருடம் |
|---|---|---|---|
| மாத வட்டி வீதம் | 22% | 23% | 24% |
| 3 மாத வட்டி வீதம் | 22.41% | 23.44% | 24.48% |
| 6 மாத வட்டி வீதம் | 23.03% | 24.13% | 25.23% |
| குமுலேட்டிவ் | 24.36% | 28.86% | 34.66% |
| Yield Amount | ரூ. 3109/- | ரூ. 3943/- | ரூ. 5100/- |

**KRP சிறப்புத் திட்டத்தின் கீழ் நிரந்தர வைப்பு முதலீடு செய்பவர்களுக்கு 1 கிராம் தங்க காசு இலவசம்!**

1. பின் தேதியிட்ட காசோலைகள் முன்னதாகவே தரப்படும்.
2. மறு முதலீட்டு திட்டங்களில் உங்கள் முதலீடு 35-ந்தே மாதங்களில் இரு மடங்காகிறது.
3. ரூ. 5,000/- 180 நாட்களுக்கு மேல் நிரந்தர வைப்பு நிதி திட்டத்தின் கீழ் முதலீடு செய்பவர்களுக்கு 10 கிராம் வெள்ளி இலவசம்
4. சேவார்தேவிகள் பங்குதாரர்களுக்கு மட்டும்

ADSTART

Dr. லட்சுமி பிரகாஷ், M.Com., Phd., இயக்குனர்

ஜெயஸ்ரீ சங்கர், B.Sc., F.C.A., தலைமை அதிகாரி

**"பெண்களையும், முதியவர்களையும் மனதில் கொண்டு, பெண்களால் நடத்தப்படும் பண்ட்."**

நீரில் மிதந்து வரும் ஒரு பழத்தை அரசன் கையில் ஏந்த அதில் ஒரு புழு இருக்கக் காண்கிறான். இப்புழுவே தக்ஷகனாக மாறி அரசனை கொல்லுகிறது.

காரணமில்லாத காரியமில்லை என்பதை பரீக்ஷித்தின் மகன் ஜனமேஜயன் செய்த ஸர்ப்பயாகத்தின் மூலம் அறியலாம். யாக குண்டத்தில் தக்ஷனைத் தவிர லக்ஷக்கணக்கான சர்ப்பங்கள் விழுந்து அழிகின்றன. தக்ஷகனோ இந்திரனை அடைக்கலம் கேட்கிறான். அப்போது ஆஸ்திகர் என்ற முனிவர் ஜனமேஜயனிடம் யாகத்தை நிறுத்துமாறு கேட்டுக் கொண்டு, அதற்குப் பல காரணங்களை கூறிறார்.

"ஜனமேஜயா! நின் யாகத்தால் ஸர்ப்பங்களைத் தவிர உலகத்து ஜீவராசிகள் சந்தோஷமடைந்தன. உலக சிருஷ்டியில் எல்லாவகை உயிரினங்களும் சரியான அளவில் இருக்க வேண்டும் என்பது இயற்கையானது. உன் தந்தையும் இந்த யாகத்தால் தூய்மையடைந்து, ஸப்தாகம் கேட்டு ஏழாவது நாள் விவேகம் பெற்று சாபத்தை ஏற்றுக் கொண்டார்.

ஸ்ரீ கிருஷ்ணபகவானும், காந்தாரியின் சாபத்தை ஏற்றுக் கொண்டு தன் முக்தியை தேடிக் கொள்ளவில்லையா? காரண காரியங்களின் தொடர்பை அறிந்து அதன் விதிப்படி நடப்பதே தர்மம். விதியென்பது சட்ட முறையே தவிர தலையெழுத்து என்று கொள்ளக் கூடாது.

நீ இப்போது செய்யும் தீவிரயாகத்தை நிறுத்தாவிடில் தக்ஷகனும், தேவேந்திரனும் மடிவார்கள். "ஆஸுரம்" என்ற கொடிய ஆட்சி தலையெடுக்கும். இந்த யுகம் பூராவும் கலி இவ்வுலகில் வாழத்தான் வேண்டும். ஆனால் அவனிடமும், சில நியதிகளும் ஸத்வ குணமும் அவ்வப்போது காணப்படும். உலக மக்களும், மன்னர்களும் இந்தத் தத்துவம் அறிந்து வாழ்வதே நியாயம். "இதைக் கேட்ட ஜனமேஜயனும், உண்மையறிந்து யாகத்தை நிறுத்தினான்."

தேவர்களும், மும்மூர்த்திகளும் மலர் மாரி பொழிந்து, ஆசி கூறினர்.

பரீக்ஷித் மகாராஜாவின் மோக்ஷ மார்க்கத்திற்கும், ஜனமேஜயன் பெற்ற மும்மூர்த்திகளின் ஆசிகளுக்கும் மூலகாரணமாக இருந்தது தேவியின் அருளே. இதுவே தேவிபாகவதத்தின் சாரம். இக்கதையை படிப்பவர்கள் கலி பீடையின்றி, இடையூறுகள் விலகி தேவியின் அருளைப் பெறுவார்கள். இதுவே பல கருதி.

நவராத்திரியின் பல கருதி.

## திருமதி ராஜம் காஞ்சிபுரம் போனதே இல்லையாம். ஆனால் அவரிடம் மிகச்சிறந்த காஞ்சிப்பட்டுச் சேலைகள் இருக்கின்றனவாம்.

# அதெப்படி ?

துல்லிய ரசனை கொண்ட திருமதி ராஜம் தனது பட்டுப்புடவைகளை அனாயாசமாக, சட்டென்று தேர்ந்தெடுத்து விடுகிறார். ஏனென்றால், அவருக்குத் தெரியும். மேலும், மிகச்சிறந்த காஞ்சிப் பட்டுச் சேலைகள் சென்னையிலேயே கிடைக்கும் என்பதை அவர் ஆராய்ந்து அனுபவத்தில் அறிந்தவர்.

காஞ்சி கோ-ஆபரேடிவ் சில்க்ஸ், அண்ணாநகர் மற்றும் உம்மிடியார் ஷாப்பிங் சென்டர் தமிழ்நாட்டின் பிரசித்திபெற்ற கோ-ஆபரேட்டிவ் சொசைட்டிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பட்டுச்சேலைகளை சென்னையிலேயே வாங்கச் சிறந்த இடங்கள் இவை.

திருமதி ராஜம் ஏன் காஞ்சிபுரம் செல்ல மறுக்கிறார் என்று இன்னும் நீங்கள் வியக்கிறீர்களா? வாருங்கள், வந்து பாருங்கள், நீங்களே கண்கூடாகத் தெரிந்து கொள்வீர்கள்.

**அனைத்து காஞ்சிபட்டுச் சேலைகளும் காஞ்சிபுரம் விலைகளிலேயே !**






**காஞ்சி கோ-ஆபரேட்டிவ் சில்க்**

(இது ஒரு தமிழக அரசு நிறுவனம்)

உம்மிடியார்ஸ் ஷாப்பிங் சென்டர்
(எல்ஐசி கட்டடத்திற்கு எதிரில்)
811, அண்ணா சாலை, சென்னை - 600 002.
போன்: 8522453.

தமிழ்நாடு ஹாண்ட்லூம் கோ-ஆபரேட்டிவ்
மார்க்கெட்டிங் காம்ப்ளெக்ஸ்
2-வது அவென்யூ, அண்ணாநகர் பிளாசா,
ஐயப்பன் கோவில் அருகில், அண்ணாநகர்,
சென்னை - 600 040.

# நவராத்திரி யோசனைகள்

● பிளாஸ்டிக் ரிங் வாங்கி, அதன் மேல் ஒரு மண்டபம் போல் அமைத்து, குளத்தில் விட்டால் தெப்பம் மிதக்கும். புது மாதிரியாகவும் இருக்கும். குளத்து நீரில் ஒரு சொட்டு செண்ட் தெளியுங்கள்.

● தேங்காய் மலிவாக இருப்பதால், வறுத்து, அதனுடன் உடைத்த கடலை, வெல்லம் ஏலக்காய் போட்டு இடித்து, சிறிது வனஸ்பதி சேர்த்து உருண்டை செய்து கொடுக்கலாம்.

— ஆர். பார்வதி

**● சிறிய பிளாட்டில் இடமில்லை என்று பார்க் வைக்க முடியாதவர்கள் ஒரு தாம்பாளத்தில் மரக்கடையில் விற்கும் மரத்தூள் வாங்கி பரப்பி அதில் சிறிதளவு பச்சைக் கலர் இங்க் தெளித்து பரப்பி வைத்தால் அழகான புல்வெளி ரெடி. மிகவும் செலவு செய்துதான் கொலு வைக்க வேண்டும் என்பதில்லை. முக்கியமான கடவுள் பொம்மைகளை வைத்துபின் நம் குழந்தைகள் வைத்து விளையாடும் பொம்மைகளைக் கூட நீட்டாக அடுக்கி வைத்தால் நமது வீட்டுக் கொலுவும் சிறப்பாக அமையும்.**

**● ஸ்டிக்கர் கோலங்கள் பல்வேறு டிசைன்களில் கிடைப்பதை வாங்கி கொலு பக்கவாட்டுப் படிகளில் ஒட்ட வைக்கலாம். 'கலர்புல்லாக' இருக்கும்**

**— பவானி**





மேலை நாடுகளிலிருந்து இறக்குமதியாகும் பொருட்களை வைத்துக் கொண்டு 'இது ஃபாரினாக்கும்'' எனப் பெருமைப்படுகிறோம். ஆனால் நம் நாட்டுப் பொருட்கள் நிறைய வெளிநாடுகளுக்குப் போவதும், அங்கே புகழ் பெற்றிருப்பதும்தான் நமக்குப் பெருமை. அப்படிப்பட்ட ஒன்றுதான் ஃபேர் பிளஸ் எனும் முக அழகுக் கிரீம். தென்கிழக்காசிய நாடுகளில் மிகப் பிரபலமாக இருக்கும் இதனுடைய தயாரிப்பிற்கான பொருட்கள் நாம் பெருமைப்படக் கூடியவை.

கேலண்டுலா எனும் சாமந்திப்பூவிலிருந்து எடுக்கப்படும் 'எக்ஸ்ட்ராக்ட்'டை அடிப்படையாக வைத்து ஃபேர்ப்ளஸ் தயாரிக்கப்படுகிறதாம்.




சாமந்திப் பூவிற்குச் சூரியனின் கதிர்களிலிருந்து சருமத்தைக் காக்கும் குணம் உண்டு என்பதால் இதனை ஜெர்மனியிலிருந்து இறக்குமதி செய்கிறது 'ஃபேர்ப்ளஸ்' மார்க்கெட்டிங் நிறுவனம். இதனுடன் கற்றாழை போன்ற குளிர்ச்சி தரும் மூலிகைகளையும் இழைத்து வழங்குகிறார்கள் இவர்கள்.

''பொதுவாகவே தென்கிழக்காசிய நாட்டுப் பெண்கள் சிவப்பாக இருக்க வேண்டும் என மிகவும் விரும்புவார்கள். அதற்காகப் பல்வேறு முறைகளையும் கையாளுகிறார்கள். சருமம் சிகப்பாக ஆரோக்கியமாக இருக்க என்ன தேவை என்பதை விஞ்ஞானபூர்வமாக ஆராய்ந்தாலே இதற்குப் பதில் கிடைக்கும். அந்த வகையில் கருமையாக இருப்பவர்கள் தங்கள் கருமையை விட்டுத் தங்கள் கலரை முன்னேற்றிக் கொள்ளவும், சிகப்பானவர்கள் சூரியக் கதிர்களிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் இந்த ஃபேர்ப்ளஸ் உதவியாக இருக்கும்'' என்கிறார் இதன்



தயாரிப்பாளர் அசோக்குமார். தொடர்ந்து இந்த கிரீமை பயன்படுத்தும் போது நல்ல முன்னேற்றத்தைப் பார்ப்பதாக மலேஷிய பெண்மணிகள் கூறினார்களாம்.

''சரி, இதை எப்படிப் பயன்படுத்தவது?''

''முதலில் முகத்தையும், கைகளையும் நன்கு கழுவிக் கொண்டு சுத்தமாகத் துடைத்துக் கொள்ள வேண்டும். பிறகு ஃபேர்ப்ளஸ்ஸை முகத்தில் மெல்லிய லேயராகப் பூசி லேசாக மேல் நோக்கி மஸாஜ் போலச் செய்ய வேண்டும். இந்த கிரீம் உள்ளே விரைவாகச் சென்று விடுகிறது. பிசுபிசுப்பும் இருக்காது. 'சன் ஸ்கிரீனாக' மாறி நம் சருமத்தை வெயிலிலிருந்து காப்பாற்றுகிறது. அதே போல 'ஃபேர்ப்ளஸ்' லோஷனை இரண்டு கைகளிலும் தடவிக் கொண்டு வெயிலில் நம் சருமம் கருத்துப் போவதைத் தவிர்க்கலாம்.




அதே போல 'மேக்-



அப்'பிற்கும் இதை பேஸாக பயன்படுத்தலாம். 'மேக்-அப்' பேஸிற்கு உபயோகப்படுத்தின மாதிரியும் இருக்கும், சருமத்துக்கும் மென்மையைத் தரும், வெயிலில் இருந்தும் நம்மைக் காப்பாற்றும். இப்படி மூன்று வழிகளிலும் நம்மைக் காப்பாற்றும் கிரீமாக இது அமையும்'' என்றார் அசோக்குமார்.

சாமந்திப்பூவைப் பயன்படுத்தியது போல விரைவிலேயே நல்ல தரமான மஞ்சளைக் கொண்டு 'டெர்மரிக்' கிரீமையும் தயாரிக்கப் போகிறார்களாம்.

''உலக நாடுகளில் நம் தயாரிப்புக்களைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டார்கள். தொழிலில் வெளிநாடுகளில் நாங்கள் வெற்றிக் கொடி நாட்ட ஆரம்பித்து விட்டோம். 'ஃபேர்ப்ளஸ்' அமோகமாக மலேசியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் விற்பனையாவது இதற்கு காட்சி.

நம்மிடம் மிகச் சிறப்பான பொருட்கள் இருக்கின்றன. அவற்றை நமக்கு 'ஷோ' செய்து எடுத்துக்காட்ட தெரியவில்லை. அதுதான் நம்மிடம் இருக்கும் குறை. வெளிநாட்டினர் முதலில் பொருட்கள் அழகாக சிறப்பாக 'பேகிங்' செய்யப்பட்டு இருக்கிறதா எனப் பார்க்கிறார்கள். பிறகு அதிலுள்ள பொருட்கள் தரமானவையா எனப் பார்க்கிறார்கள். பார்க்கவும் அழகாக 'பேகிங்' செய்து சிறப்பான பொருளையும் கொடுத்தோமானால் நம்மை மிஞ்ச உலகில் யாருமில்லை'' என்கிறார்கள்.

''எல்லாம் சரி, திரும்பத் திரும்ப மலேஷியா, சிங்கப்பூர் என்றுதானே பேசுகிறீர்கள், நம் நாட்டில் ஃபேர்ப்ளஸ் கிடைக்காதா?'' என்றோம்.

''இல்லை இத்தனை நாளாக இல்லை. என்னுடைய நோக்கம் வெளிநாடுகளாகத் தான் இருந்தது. விரைவிலேயே தமிழகத்திலும் இதனை விற்பனைக்குக் கொண்டு வரப் போகிறோம். நம் பெண்களின் கவனமும் இப்போது அழகுச் சாதனங்களின் பக்கம் திரும்பியுள்ளது. மனநலம், உடல் நலம் இரண்டையும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்ற விழிப்புணர்வு அவர்களிடையே வந்திருக்கிறது.

கடுமையான வெயிலில் நம் பெண்கள் வேலை செய்யும் போது களைத்து விடுகிறார்கள். கறுத்து விரைவில் சோர்ந்து விடுகிறார்கள். ஃபேர்ப்ளஸ் ஒரு சன்ஸ்கிரீனாக இருந்து செயல்படும் என்பதால் அவர்களின் சருமத்தைப் பாதுகாக்கிறது. சிகப்பான நிறமுள்ளவர்களைத் தான் வெயில் நன்றாகத் தாக்கும். அவர்களுக்கும் இது பாதுகாப்பாக அமையும்.''

— புவனா

படங்கள் : சுரேஷ்



நவராத்திரியில்... மருதாணிச் செடி இருப்பவர்கள், அரைத்து, ஒரு உருண்டை, பிளாஸ்டிக் பையில் போட்டுக் குழந்தைகளின் கையில் கொடுங்கள். மறுநாள் அவர்களின் பவளம் போன்ற கைகளைக் காட்டும் போது, அவர்களின் முகம்தான் எவ்வளவு பிரகாசிக்கும்.

— ஆர். பார்வதி

# AVG

## INSTITUTE OF NATURAL DIET

**PB 6886, AG57, Anna Nagar, Madras - 600 040.**
**Ph: 6215735**

(AN ALTERNATIVE MEDICAL COLLEGE TO PROMOTE NATURAL DIET THERAPY, ACUPUNCTURE, YOGA, MAGNETO THERAPY AND HERBAL MEDICINES)

**GOLDEN OPPURTUNITY FOR DOCTORS AND UNEMPLOYED YOUTH.**

Regular & Evening college & correspondence course Admission Notice.

1. இயற்கை மருத்துவம் D.N.C., N.D.S.
2. யோகா Y.I.C., D.Y.T.
3. அக்குபங்சர் D.Ac., M.D. (Acu)
4. காந்த சிகிச்சை D. Mag.
5. பொலாரிட்டி மஸாஜ் & வர்மா சிகிச்சை D.V.T.

**World Best Book for Health (English, Hindi, Kannadam & Tamil.)**

**Dr. A.V.G.** ரெட்டியின் உயிருள்ள இயற்கை உணவுகள் புத்தகம் கிடைக்கும் விலை. ரூ.50/- பதிவு தபால் செலவு 10/-

---

கண்ணை மூடிக்கொண்டு வாங்கினாலும் கண்ணை கவரும் கவர்ச்சியான சேலைகள் சாருலதா கடையில்!

வந்து விட்டது! 9 கெஜ பெங்கால் காட்டன் புடவைகள்!!
கருக்காது – சுறுங்காது – பளபளப்பு மாறாத ஜரிகை சேலைகள்

பெங்கால் காட்டன் மற்றும் பெங்கால் Printed Silk டஸ்ஸர், மற்றும் அழகு வேலைபாடு கொண்ட KATHA STITCH.

**ONAM SALE**
SEP 6 வரை
HOTEL PARAMOUNT
CALICUT - KERALA

SEP 4,5,6
BHARAT HOTEL (BTH)
ERNAKULAM-KERELA

SEP 7,8,9 AT
BHARATHIYA VIDYA
BHAVAN, MANGALORE

**Diwali Sale**
Oct 10,11,12 and 13th
Sankara Hall A/C Mini
Hall, Madras - 18.

**OPEN ON ALL SUNDAYS TILL DIWALI.**



பண்டிகை கால தள்ளுபடி
10% Discount
25th September முதல் தீபாவளி வரை புடவைகளுக்கு மட்டும்

SMOCKING BLOUSE
கல்கத்தா கடாய்
கல்கத்தா உள்ளாடைகள்
தீபாவளிக்கு ரசகுல்லா ஆர்டர் எடுக்கப்படும்.

**CHARULATHA SAREE SHOP**
13/3 12TH AVENUE, ASHOK NAGAR,
MADRAS - 600 083. PHONE - 4820358

ShowRoom Sale : 10AM to 2PM
4PM to 8PM

MASTER | VISA CARDS ACCEPTED

# ஹாலந்து கொலு!

ஹாலந்து நாட்டில் 'ஹேக்' என்ற ஊரில் 'MADOROTAM' என்ற இடத்தில் மினியேச்சர் செய்யப்பட்ட விதவிதமான பில்டிங்குகள், ரயில்வே ஸ்டேஷன், விமான நிலையம் பார்ப்பவரை அசர வைத்து விடும். இந்தக் கொலுவைப் பார்க்க தினம் தினம் நூற்றுக்கணக்கானவர்கள் வந்து செல்கின்றனர்.

- விஜயா கண்ணன்





# உங்களுடைய டிசைன்களை வியப்புடன் துள்ளி எழச் செய்கிறது புதிய ஃபெவிக்ரில் பாப் அப்

* புதுமையான அழுத்தத்தக்க பாட்டில்.
* 6 விசித்திரமான ஷேடுகள்.
* உங்களுடைய ஆடைகளுக்கு புதிய பொலிவூட்டும் வண்ணங்கள்.






மெதுவாக பாட்டிலை அழுத்தவும். அதிகமா அழுத்தினால் ஒரே சீராக இல்லாது திப்பித்திப்பியாகிவிடும்.



வண்ணம் பூசப்பட்ட பகுதியின் பின்புறம் இஸ்திரி செய்யவும். அப்போது டிசைன் நன்றாக வெளிப்பட்டு (pop up) 3 பரிமாணம் கொண்டதாக அழகுடன் தோன்றும்.



சிறந்த பாப்பிங்கிற்கு துணிக்கு தேவையான சீதோஷ்ண நிலையில் இஸ்திரி செய்யவும்.

**சாதாரண தோற்றத்தை கண்கவர் ஒன்றாக்கிடுங்கள்**

ஃபெவிக்ரில் பாப் அப் இலவச டிசைன்களுக்கு தபால்செய்து எழுதவும்: பாப் அப், அஞ்சல் பெட்டி எண் 17437, பம்பாய் 400 059.

A PIDILITE PRODUCT

PID 75 95 TAM

# ஸ்வேதாவின் ஸ்பெஷல் கொலு!

**வா**னம் மப்பும் மந்தாரமுமாய் இருந்தது. எங்கோ ஒரு இடி ஹீனஸ்வரத்தில் இடித்தது.

"உன்னோட மயில்கழுத்துக்கலர் ஜரிகை கொட்டடிப் புடவையை கட்டிக்கோ. அப்படியே காசுமாலையையும், முத்து ஜிமிக்கியையும் போட்டுக்கோ. இன்னிக்கு ரஞ்சிதம் வருவா. என் நாட்டுப் பெண்ணைப் பார்த்து அவ மூக்கில் விரலை வைக்கணும்."

அம்புஜம் பேசப்பேச ஒரு புயல் மையம் கொண்டது ஸ்வேதாவின் அடி வயிற்றில்.



"அம்மன் கோவில் தேர் மாதிரி அலங்காரம் பண்ணிண்டு ஒரு குழந்தையோட பிறந்த நாளுக்குப் போனா சிரிப்பா. சொல்லுங்க ளேன் உங்கம்மா கிட்டே."

"அம்மா சொன்னா கேளேன். பாவம் வயசானவ..."

கணவனை முறைத்துவிட்டு சல்வாரிலிருந்து காஞ்சிப்பட்டிற்கு மாறினாள் ஸ்வேதா.

ஆயுஷ்யஹோமம் முடிந்து முதல் பந்தி ஹாலில் போடப்பட்டது. இடம் கிடைக்காதவர்கள் பெட்ரூமில் ஒரு குட்டி கான்ஃப்ரென்ஸ் போட ஆரம்பித்தனர். அதில் படு ஆக்டிவாக பங்கேற்று, தெரிந்த, அறிந்தவர்களின் வீட்டு விவகாரங்களை ஸ்வாரசியமாக அலசிய கும்பலுக்குத் தலைவியாக விளங்கியவர் அம்புஜம். துணைத்தலைவி அவரது ஆருயிர்த்தோழி ரஞ்சிதம்.

ராமாச்சு பெண்ணின் விமரிசையான கல்யாணம், கப்புணியின் கழிசடைப் பிள்ளை, கமலுவின் மாமியாரின் கல்யாண குணங்கள், ஸ்வேதாவின் காசுமாலையின் எடை, ரஞ்சிதத்தின் மூட்டுவலி ஆகியவற்றை தொட்ட பேச்சு அப்படி இப்படி நவராத்திரியில் வந்து நின்றது.



"வர வர நவராத்திரி கொலுவுக்குப் போகணும்னாலே பிடிக்கலை. எந்த வீட்டில்பாரு வருஷா வருஷம் அதே பொம்மைகள், அதே மாடல்ல பார்க் அதே ஜானவாச செட், அதே கண்டல் கூட போர்! என் நாட்டுப்பெண் ஜானு ஒரு வருஷம் வச்ச மாதிரி அடுத்த வருஷம் கொலு வைக்க மாட்டா. புதுசு புதுசா பூக்கோலம், ஜரிகை தோரணம், துணி பொம்மைன்னு ஜமாய்ப்பா. பார்த்ததை கை பண்ணும். அவ வைக்கிற கொலுவோட அழகைக் கேள்விப்பட்டு பத்திரிகைக் காரானே வந்து போட்டோ எடுத்துப் போட்








டாங்கன்னா பாருங்களேன்..."

ரஞ்சிதம் பேசப் பேச அம்புஜத்தின் காது மடல்கள் சூடேறிச் சிவந்தன. துனிமூக்கு துடித்தது.

"இந்த வருஷம் எங்கவீட்டுப் பொம்மை கொலுவுக்கு வந்து பார். ஆச்சர்யப்பட்டுப் போயிடுவே... இப்பவே ஸ்வேதா ஆயிரத்து எட்டு ப்ளான் போட்டு வச்சிருக்கா... அசத்த லாய் கொலு வைக்க... பத்திரிகை அனுப்ப றேன், கட்டாயம் வந்துடுங்கோ எல்லாரும்.

ட்டட், டைம் எல்லாம் கிடையாது. ஒன்பது நாளும் வர லாம்...""

ஸ்வேதாவுக்குக் 'குப்' பென்று வியர்த்தது. கை கால் கள் டைப் அடித்தன.

"கட்டாயம் வரேன். உன் நாட்டுப் பெண் கைவண்ணத் தைப் பார்க்க வரேன்." ரஞ் சிதத்திற்கு ஆத்திரம் ஏறியது.

"நான் அஹமதாபாத்தில் உருப்படியான கொலுகூடப் பார்த்ததில்லை. சவால் விட்டு என்னை மாட்டிவிட்டு வேடிக் கை பார்கிறாங்களே உங்கம் மா... இது நியாயமா?"

"நான் என்ன பாத்திரம் தேய், துணி துவைத்துப் போடு, வரதட்சிணை கொண் டான்னா கேட்கறேன்? ஏதோ, என் மரு மகள் அந்த ராங்கிக்கார ரஞ்சிதத்தோட மரு மகளுக்கு எந்த விதத்திலும் குறைச்ச லில்லைன்னு நிரூபிக்கணும்னு ஆசைப் பட்டேன். தப்பா?"

கண்களைக் கசக்கும் தாரத்திற்கும், தாய்க்கும் இடையே பாபு ஒரு இ.த.கொ. எறும்பாய் விழித்துவிட்டு ஸ்கூட்டரை ஓங்கி ஒரு உதை விட்டுக் கிளப்பிக்கொண்டு அந்தர்த்தியானமானான்.

நான்கு நாட்களாய் அப்புக்குட்டன் ஆசாரி இழைத்துப் பண்ணிய கொலுப்படி ராஜகம்பீரமாய் நடு ஹாலில் நிற்க பரணிலிருந்து பொம்மைப்பெட்டியை ஸ்வேதா இறக்கிவிட்டு அம்புஜத்தின் மேற்பார்வையில் திறந்தாள்.

"இந்த மூக்கொடிஞ்ச கிருஷ்ணன் வேண் டாம். ராமரின் வில்லே உடைஞ்சிருக்கு - பேசாம பென்ஷன் கொடுத்துருவோம். மீனாட்சி சாயம் வெ ளுத்துப் போச்சு, நாய் பொம்மை படு அவலட் சணம்... கதகளி பொம் மையின் கையைக் கா ணோமே"... பாதிக்கு மேல் பழையன கழிக்கப்பட்டன.

புதியவை புகுந்தன காதிக்ராஃப்டிலிருந்தும் குளத்தங்கரை கபாலி கடை யிலிருந்தும்.

" உனக்கு அனுபவ மில்லையேன்னு பயந்துக் காதே. நான் சொல்லித்த ரேன்," என்று அம்புஜம் அபயஹஸ்தம் அளிக்க...




# ஸ்ரீராம் பதில்கள்

உண்மைதான். இன்னிக்கு சேமிக்கணும்னா பல கம்பெனி இருக்கு. எதில பணம்போடறது, எதில போடக்கூடாதுங்கறதுதான் ஒரே குழப்பம். அதில சிறந்ததும் சரியானதும் எதுன்னு இப்போ பாக்கலாம்.

**வங்கிகள்:** இவற்றில் டெபாசிட் செஞ்சா 12% வட்டிதான் கிடைக்கும். அதிக லாபம் வேணும்னா மற்ற நிறுவனங்களத்தான் தேர்ந்தெடுக்கணும்.

**பெனிஃபிட் ஃபண்டுகள் :** இவை எப்படி தெரியுமா? பெரும்பாலும் நிலத்தின் பேர்ல கடன் கொடுக்கிறதுக்கு உங்களோட டெபாசிட்டுகளை பயன்படுத்துறதாக சொல்றாங்க. ஆனா, கடன் வாங்கினவங்க தொகையை திருப்பித்தர தவறினா, அந்த சொத்துக்களை கையகப்படுத்தி, விற்று அதுக்கப்புறந்தான் உங்க பணத்தை மீட்கணும். உங்களுக்குத் தேவைப்படும்போது உங்கள் பணத்தை திருப்பிக் கொடுப்பதற்கு கஷ்டப்படுவாங்கனு தோணுது.

**உற்பத்தி நிறுவனங்கள்:** இவை லாபகரமா இயங்கினாதான் உங்களுக்கு வட்டி. விற்பனையில் தேக்கமோ, வசூலில் தடங்கலோ, இல்ல வேலை நிறுத்தமோ ஏற்பட்டா



சேமிக்கணும்னு சொல்றீங்க, சரி. ஆனா எதிலேன்னு சொல்லலியே?

– ப. ஆனந்தி, ஆதம்பாக்கம்

உங்க டெபாசிட்டுகளை திரும்பப் பெறுவது ரொம்ப கஷ்டங்க. உதாரணமா, ஆந்திரா சிமெண்ட்ஸ், ஸ்டாண்டர்ட் மோட்டார் புராடக்ட்ஸ் ஆப் இந்தியா போன்ற உற்பத்தி நிறுவனங்கள் டெபாசிட்-தாரர்களின் பணத்தை திருப்பித் தரவே இல்லீங்க.

**நிதி நிறுவனங்கள்:** நிதி நிறுவனங்களுக்கு இந்த பிரச்சினைகள் இல்லை. ஆனால், நிதிநிறுவனங்களுடைய நிதியை எந்த தொழிலில் ஈடுபடுத்துகிறார்கள் என்பதை பொறுத்துதான் உங்கள் டெபாசிட்டுக்கு பாதுகாப்பும், வட்டியும் கிடைக்கிறது. கூடுதலான வட்டி கிடைக்கிறது என்று டெபாசிட் செய்துவிட்டு அசலை தொலைத்தவர்கள் பலரை உங்களுக்கே தெரிந்திருக்கும். எந்த நிதி நிறுவனத்தில டெபாசிட் செய்யலாம்ங்கிற முடிவை விளம்பரங்களை பார்த்து மட்டும் எடுத்தால், பண நஷ்டம்தான் ஏற்படும் என்று உறுதியாக சொல்ல முடியும்.

**(இரண்டாம் பகுதி 30 ம் பக்கத்தில்)**

"தசராவா ஆன்ட்டீ? நானும் 'டால்ஸ்' வைக்க வரேனே" என்றபடி உள்ளே வந்தவள் எதிர்வீட்டு மாடியில் குடியிருக்கும் பிஜோயா பானர்ஜி.

"ஸ்வேதா, முதலில் சீலிங்கில் கலர் பேப்பர் ஒட்டி தோரணங்கள் கட்டுவோம். மோண்ட்டுவோட பார்ட்டிக்காக வாங்கின பேப்பர் அலங்காரங்களை கொண்டு வரேன்." என்றபடி, ஓடினாள் பிஜோயா.

"தங்கமான பெண்" அம்புஜம் சர்டிபிகேட் தந்தாள். வண்ணத் தோரணங்கள் ஏற... வீடு நவாரத்திரிக்களை கட்ட... பொம்மைகள் படியிலேற ஆரம்பித்தன.

மேற்படியில் முப்பெரும் தேவியரும் எழுந்தருள அடுத்த படியில் மனைவியருடன், முருகனும் கிருஷ்ணனும் அமர்ந்தனர். மூன்றாவது படியில் கணேசன், பெருமாள், கஜலட்சுமி,, மீனாட்சி, விசாலாட்சி... நான்காவது படியில் மஹான்களின் அணிவரிசை. அவர்களுக்குக் கீழே சமர்த்தாகக் கொலு விருந்தனர், அம்மா பொன்னே ராமக்காவும், தஞ்சாவூர் தலையாட்டியும் மரப்பாய்ச்சிகளும்... அவற்றிற்குக்கீழே முறையே தசாவதார செட், மளிகைக் கடை செட், மார்பி டால், பேபி பொம்மை, ஹீமேன், புலி, சிங்கம், கரடி, மிக்கி மௌஸ், டோனால்ட் டக் பொம்மைகள் அவரவர் பொசிஷனில் நிற்க...

நான்கு பக்கெட் மணல் பரப்பப்பட்டு பார்க், பழனி மலை, பஸ் ஸ்டாண்டு, கிரிக்கெட் மைதானம், பொம்மை ரயில், ஜூ இத்யாதிகளும் உருவெடுத்தன.

"பஹுத் அச்சா!" என்றாள் பிஜோயா.

"அவ்வளவு தானே பொம்மைக் கொலு. நான் கூட என்னமோ, ஏதோன்னு பயந்து போயிருந்தேம்மா," டென்ஷன் விலகி ஸ்வேதா சிரித்த போது அம்புஜம் குறுக்கிட்டாள்.

"இது சாதாரண கொலு... இனிமேல் நீ தினமும் ஒரு 'ஸ்பெஷல் டச்' கொடுத்து இதை விசேஷமான கொலுவாக ஆக்க வேணும்."

ஸ்வேதாவின் முழங்கால்கள் கடகடத்தன.

"என்னமோ 'அவ' தினுசு தினுசாய் பூக்கோலம் போடுவாளாமே! நீ ரங்கோலி போடு" மருமகளுக்கு அம்புஜம் உத்தரவிட...

"எனக்கு ரெண்டு புள்ளிகளுக்கு நடுவே நெளிசலில்லாத கோடு கூடப் போடத் தெரியாது. என்னைப் போய் ரங்கோலி போடச் சொன்னா என்ன செய்வேன்?"

ஸ்வேதா பரிதாபமாய் அரற்றினாள்.

அம்புஜம் ஒரு ஆப்டிமிஸ்ட்.

"உன்னால் முடியும். இந்தா கலர்ப் பொடி. பெரிசாய்ப்போடு முதல் முதலாய்

**48** ஆண்டுகளாக
உங்கள் பத்திரங்களைப் பாதுகாக்க
எங்கள் சேவல் மார்க் ஃபைல்கள்
பயன்பட்டு வருவதுபோல
உங்கள் சேமிப்புகளை பாதுகாக்க
எங்கள் டெபாசிட் திட்டம்...

கணக்கிடப்படும்
வட்டி விகிதம் – ஓராண்டுக்கு

# 24%

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி விகிதம் |
|---|---|---|
| 12 | ரூ. 1260 | 26% |
| 24 | ரூ. 1587 | 29.35% |
| 36 | ரூ. 2000 | 33.33% |
| 48 | ரூ. 2520 | 38% |
| 60 | ரூ. 3175 | 43.5% |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ.1000




## MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, Post Box No. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.
Ph: Off: (0451) 25260 & 27637. Res: 25643 & 23726
Grams: COCKFILE

*உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி*

போடறே. பிள்ளையார் போடு. பிடி படத்தை..."

"பிள்ளையாரப்பா என்னைக் காப்பாத்தப்பா. என் கைவண்ணத்திலிருந்து உன்னையும் காப்பாற்றிக் கொள்ளப்பா" என்று நெஞ்சுருக வேண்டிக் கொண்டு ஸ்வேதா ஆரம்பித்தாள். நாலு மணி நேரத்தில் முடித்தபின் அந்தப்பிள்ளையாரின் உருவம்... ஊஹூம்! ஒன்றும் சொல்லக்கூடாது. ஆஞ்சனேயர் கோபித்துக் கொள்வார்!

நல்லவேளையாக அன்று அதிகம் பேர்கள் வரவில்லை.

அழைப்புமணி அடிக்க...

"ஹலோ ஆண்ட்டீ! இதுதான் மிஷேல் ஜெக்ஸ் ப்ரான்சிலிருந்து வந்திருக்கும் என் சினேகிதி. இந்தியக் கலாச்சாரத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்யும் மாணவி," என்று தோழியை அறிமுகப்படுத்தி வைத்தாள் பிஜோயா.

"பியூடிஃபுல். லவ்லி டால்ஸ். க்ரேட்" என்றபடி மிஷேல் ஜெக்ஸ் பொம்மைக் கொலுவை ரசித்து விட்டு அம்புஜத்தின் விருப்பத்திற்கு இணங்கி ஒரு பிரெஞ்ச் பாட்டையும் பாடிவிட்டு தாம்பூலம், சுண்டல் பொட்டலம் வாங்கிக் கொண்டு கிளம்பினாள்.

போகும் போது பிஜோயா பானர்ஜி 'ஸ்வேதா, வாட் இஸ் திஸ்?" என்று ரங்கோலிப் பிள்ளையாரைக் காட்டிக்கேட்க ஸ்வேதா தற்காலிக செவிடானாள்!

நள்ளிரவில் கொலுப்படியிலுள்ள கடவுள்களுக்கு இடையே ஏகப்பட்ட சர்ச்சைகள்!

"யார் இது?" என்று அனைவரும் ஸ்வேதா போட்ட படத்தைப் பார்த்து நெற்றியைச் சுருக்க...

"நம்ம கணேசன் மாதிரி இருக்கு இல்ல... என்ன சொல்லறே சரஸ்வதி?" லட்சுமி கேட்க.

"என் பிள்ளையை எனக்கு அடையாளம் தெரியாதா என்ன? இது யாரோ! ஏங்க சொல்லுங்களேன்."

பார்வதி சூடாய் பதிலளித்தாள்.

சிவன் 'சிவனே' என்றிருக்க, பிரம்மா குழம்பி நின்றார். இந்தமாதிரி ஒரு ஜீவராசியை நான் படைக்கவேயில்லையே யாராக இருக்கும்? என்று.

புத்தர் மோன நிலையில் புன்னகை பூத்தபடி தேவலோக பாஷையில் தெய்வங்களுக்கிடையே நடக்கும் விவாதத்தைக் கேட்டபடி தவமிருந்தார்!

மருமகளுக்கும் ரங்கோலிக்கும் வெகு தூரம் என்பதை புரிந்து கொண்ட அம்புஜம்,

"நீ சாயந்திரம் பாடணும். சொல்லித்தரேன். கூடப்பாடு"... என்று 'ஸ்ரீசக்ர ராஜ சிம்ஹாசனேஸ்வரியை ஆரம்பிக்க நடுங்கிய குரலுடன் ஏழேமுக்கால் கட்டையில் ஸ்வேதா உடன்பாட, எதிர் வீட்டு மோண்ட்டு, "ஏன் மம்மி ஸ்வேதா ஆண்ட்டி அழறா? பாட்டி திட்டறாளா?" என்று பலமாய் கேட்க அம்புஜம் பெருமூச்சு விட்டாள்.

மாலையில் கொலு பார்க்க வந்த சங்கரி மாமியிடம், "எங்க ஸ்வேதா அற்புதமாய் பாடுவா. தொண்டை கட்டியிருக்கு, பாவம். நீங்க பாடுங்கோ' என்று சமாளித்தாள்.

அன்று ஒரு டஜன் வீட்டுக் கொலுக்களை பார்வையிட்டு விட்டு வந்த அம்புஜம், மேலும் புத்தம்புது ஐடியாக்களோடு வந்தாள்.

"சிவகாமு கொலுப்படிகளில் கலர் லைட் தோரணம் தொங்கவிட்டிருக்கா. நவரத்னமாய் ஜொலிக்கிறது. நமக்குத் தோணவே

## பூரண பர்பி



ஒரு நாள் திடீரென்று புதுக்கல்யாணமான ஒரு தம்பதி வந்து விட்டனர். தோசைமாவு ரெடி ஆனால் ஸ்வீட் செய்ய வேண்டும். திடீரென்று ஒரு யோசனை. சதுர்த்தி அன்று செய்த தேங்காய்ப் பூரணம், மோதகப் பூரணம் மீந்துவிட்டது. அவர்கள் 1/2 மணி நேரம் அல்லது 1 மணி நேரம் இருப்பார்கள். ஒரு தட்டில் கீழே நெய் தடவி முதலில் கடலைப் பூரணத்தை பரத்திவிட்டேன். அதற்கு மேல் வெண்ணெய் தடவி பால் பவுடரைத்தூவி மேலாக தேங்காய் பூரணத்தை பரப்பினேன். அதன்மேல் முந்திரிப்பருப்பு, கிஸ்மிஸ் பழங்கள் நிறையவே தூவி, பால் பவுடரையும் தூவி பிரிட்ஜில் டீப் பிரீஸரில் வைத்துவிட்டேன். முதல் காபி வகையறா கலந்து, தோசை ரெடி செய்துவிட்டு பிரிட்ஜை திறந்து ஸ்வீட் தட்டை எடுத்து வில்லைகளாகச் செய்து இரண்டிரண்டு பீஸாக கொடுத்து சமாளித்தேன். வந்தவர்களும் என்ன ஸ்வீட் என்றனர்.

கே. நீலா

# பிரிமியர்* மில்ஸ்

ப்ளவுஸ் துணிகளில் நெ. 1



நீங்கள் தேர்ந்தெடுக்க...

* ரூபி
* ஃபேர் & லவ்லி
* பிளாட்டினம் சூப்பர்
* லவ்லி லேடி

சேலையும் சோளியும் ...

இதுவல்லவா ஜோடிப்பொருத்தம்!

யில்லைபாரு" என்றவள்,

"டேய் பாபூ.." என்று மகனை அழைத்து, இரண்டு மணி நேரம் வேலை வாங்கி நீலம், பச்சை, மஞ்சள், சிகப்பு பல்ப்புகளை கண் சிமிட்ட வைத்தாள்.

"ஆஹா... சூப்பர்," என்று ஸ்வேதா சொன்னவுடன் 'பட்' டென்று வீடு முழுவதும் ஃப்யூஸ் போக, பாபு எலெக்ட்ரீஷியனைத் தேடிப் போனான். இருட்ட ஆரம்பித்தும் வரவில்லை.

வீட்டிலுள்ள குத்துவிளக்குகள், காமாட்சி விளக்கு, மயில் விளக்கு, அகல் விளக்குகள் அனைத்துக்கும் ஸ்வேதா எண்ணை விட்டு ஏற்றி வைத்தாள்.

"அட.. கார்த்திகை தீபம் மாதிரி அழகாய் இருக்கே... என்ன சொல்லு எலக்ட்ரிக் லைட்டுக்கு இந்த அழகு வராது," என்று மங்களம் மாமி சர்டிபிகேட் தர அம்புஜத்திற்கு வாயெல்லாம் பல்!

"எல்லாம் என் மருமகள் ஐடியா தான்."

சூப்பர் மார்க்கெட்டில் மளிகை சாமான் வாங்கச் சென்றபோது "அழகாயிருக்கில்லேம்மா?" என்று அந்த மெழுகுப் பழவகைகளைப் பார்த்து ஸ்வேதா மயங்க.. அம்புஜத்தின் கண்களில் ஒரு ஒளி மின்னல்!

"அட! பழங்களெல்லாம் நைவேத்யமாக வைத்திருக்கிறீர்களா? இப்ப எப்படி மாம்பழம் கிடைச்சுது?" என்று பாருமாமி கேட்டு அதிசயிக்க.

"எனக்கு மாம்பழம் வேணும்" என்று கத்தியபடி அவளது இரட்டை வால் பேரன் அப்பு ஓடிப்போய் அந்தப் பழத்தை எடுத்துத் திருப்பிப் பார்த்து, முகர்ந்து பார்த்து விட்டு ஸ்வேதா தடுக்குமுன் கடித்தான்.

"அய்.. த்தூ... த்தூ" என்று அப்பு மெழுகை பாய் முழுவதும் துப்ப..

"அழகுதான், குழந்தையை ஏமாற்ற மெழுகால் பழம் செஞ்சு வைப்பார்களோ? முன்னாலேயே சொன்னா என்னவாம்? ஹூம்!" இடித்துக் கொண்டு கிளம்பினாள்.

"இவளைப்போலவே இவபேரனுக்கும் ஆவலாதி" என்று ஆரம்பித்து பதினைந்து நிமிடங்கள் அர்ச்சனை செய்து தீர்த்தாள் அம்புஜம்.

டெலிபோன் சிணுங்கியது.

"சாயங்காலம் வீட்டில் இருப்பியோ? அந்தப் பக்கம் வரலாம்னு இருக்கேன். மங்களம் சொன்னாள், ஏதோ சினிமாவுல வர்ற கனவு சீன் மாதிரி தீபங்களாலேயே கொலுவை அலங்கரிச்சிருந்தாளாமே உன் நாட்டுப் பெண்?" ரஞ்சிதம் தான் பேசினாள்.

"அது புதன்கிழமையன்னைக்கு... ஒரு நாள் ரங்கோலி, ஒரு நாள் பாட்டுக்கச்சேரி, ஒரு நாள் குத்துவிளக்குப் பூஜைன்னு ஜமாய்க்கறா. வந்துபாரேன்."

அம்புஜத்திற்கு வாயெல்லாம் பல். உச்சி குளிர்ந்திருந்தாலும் டென்ஷன் அதிகரித்தது. ரத்த அழுத்தம் எகிற ஆரம்பித்தது.

"பயறு சுண்டலுடன் மைசூர் பாகும்



கிளறிடறேன். நானே பண்ணிடறேன். வசிஷ்டர் வாயால ப்ரம்மரிஷிப்பட்டம் வாங்கணும் பாரு..."

நெய் மணம் தெருமுழுவதும் வியாபித்திருந்தது.

"ஸ்வேதா, கிறுகிறுங்கறதுடீம்மா. நீ ஒரு அஞ்சு நிமிஷம் கை விடாம கிளறிவிடேன். சித்த படுத்துக்கறேன்."

ஸ்வேதா சர்வ ஜாக்கிரதையாகக் கிளறிக் கொண்டிருக்கும் போதுதானா அழைப்பு மணி அடிக்கவேண்டும்?

பிஜோயா தான்!

"அர்ரே... மித்தாய் செய்யுறியா?"

"அய்யோ.. முறுகிவிடும்." ஸ்வேதா பி.டி. உஷாவாய் அடுப்படிக்கு ஓட...




# டெபாசிட் திட்டங்கள்

| ஃபிக்சட் டெபாசிட் | | |
|---|---|---|
| காலம் | வட்டி வகிதம் (ஆண்டிற்கு) | குறைந்த பட்ச டெபாசிட் தொகை |
| ஓர் ஆண்டு | **27%** | ரூ.10,000 |

**ஊக்கத் தொகை 3%**

| க்யூமுலேடிவ் டெபாசிட் | | | | |
|---|---|---|---|---|
| காலம் | டெபாசிட் தொகை | முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி | ஊக்கத் தொகை |
| 12 மாதம் | ரூ.10,000/- | ரூ.13,000/- | 30% | 4% |
| 24 மாதம் | ரூ.10,000/- | ரூ.16,500/- | 33% | 5% |
| 36 மாதம் | ரூ.10,000/- | ரூ.21,000/- | 36% | 7% |

## சக்தி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.25,000
இரு மடங்காகிறது
33 மாதங்களில்
ரூ. 50,000
ஊக்கப்பரிசு
3 கிராம் தங்கக்காசு

## மகாசக்தி பாண்ட்

குறைந்த பட்சத்தொகை
ரூ.25,000
மும் மடங்காகிறது
55 மாதங்களில்
ரூ. 75,000
ஊக்கப்பரிசு
5 கிராம் தங்கக்காசு



## ஈசன் இன்வெஸ்ட்மென்ட்ஸ்

நெ.66, பாண்டி பஜார் (பனகல் பார்க் அருகில்)
தியாகராய நகர், சென்னை - 600 017. போன்: 4341059
எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்

**ஈசன் - நம்பிக்கையின் சிறப்பு**

டு லேட்...

கொட்டிய மைசூர்பாகு கட்டியாய் வராமல் குறுணையும், தூளுமாய் பல்லை இளித்தது.

"ஐயோ! அம்மாவுக்கு வேற பீபி. ஏறியிருக்கும் வேளையில் இப்படி ஆயிடுத்தே பிஜோயா!"

அழுதே விட்டாள்.

"டோண்ட் ஒர்ரி. கொஞ்சம் பால்கோவா எடு. கொஞ்சம் முந்திரி எடுத்து வறு... கிஸ்மிஸ் இருக்கா? ஏலத்தைப் பொடி செய்... செர்ரிப்பழத்தை பாதியாக நறுக்கு..."

எல்லாவற்றையும் ஒன்றாய்க்கொட்டி 'பேடாக்களாக தட்டினார்கள். தலையில் ஒரு செர்ரிப்பழத்தை ஒட்டி அழகு படுத்தி முடித்தபின், "ஸ்வேதா.. என்னவோ வாசனை வருதே.. பார்" குரல் கொடுத்தாள் அம்புஜம்.

மார்க் போடும் ஜட்ஜைப்போல பொம்மைக் கொலுவை மேலும் கீழும் பார்த்தாள் ரஞ்சிதம்.

"ஸ்வீட் எடுத்துக்கோங்கோ, மாமி."

"புதுமாதிரி இருக்கே. எப்படிப்பண்ணினே அம்புஜம்?"

"அட, நான் எங்கே பண்ண? எனக்குத் தெரியுமா இந்த மாதிரி புதுவித பட்சணமெல்லாம் பண்ணுவதற்கு? ஸ்வேதா.. பெங்கால் செர்ரி பேடா எப்படி பண்ணினேன்னு மாமிக்கு சொல்லு..."

"எப்படி இருக்கு மாமி புது ஸ்வீட்?"

"'ஏ'கிளாஸ்! வடக்கே வளர்ந்த பெண். அந்த ஊர் சமையலை நன்னா கத்துண்டு இருக்கே. ஒருநாள் ஜானுவை அனுப்பறேன். கத்துக்கொடு."

அம்புஜம் ஒரு சுற்றுப் பெருத்து விட்டாள்!

மாமியாரும் மருமகளும் மர்மப் புன்னகைகளை பரிமாறிக் கொண்டார்கள்.

அப்போது உள்ளே வந்தவர்கள் பிஜோயா, மிஷேல் ஜேக்ஸ், மற்றும் ஒரு சிவப்பு ஆட்டுதாடிக்காரர்.

"ஹலோ ஸ்வேதா! நமஸ்தே ஆண்ட்டி! இவர் ரூப்பர்ட் ஸ்மித். என்னுடன் படிக்கிறார். இந்தியப் பண்டிகைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்கிறார். அவற்றை பற்றி ஒரு 'டெலி பிலிம்' எடுக்கிறார். உங்க'டால்' (DOLL) கொலுவை வீடியோ எடுக்கலாமா?"

மிஷேல் பேசப்பேச அம்புஜத்திற்குக் காதுகளையே நம்ப முடியவில்லை.

ரஞ்சிதத்தின் கண்கள் அகலமாய் விரிந்தன.

"அன்று ஒரு 'இண்டியன் 'டிசைன்' இங்கே இருந்ததே? இப்போ அது இல்லையே!" மிஷேல் ரங்கோலியை ஞாபகமாய் விசாரிக்க.

"இதோ இந்த ஆண்ட்டி இப்போதே ஒன்றை போட்டுக் காட்டுவார்கள். படம் பிடிக்கச் சொல்" என்றாள் ஸ்வேதா.

அடுத்த ஒரு வாரம் டெலிபோன் வாய் மூடாமல் அலறியது.

"ஹலோ அம்புஜமா? உங்காத்து கொலுவை பிரெஞ்சுக்காரர் சினிமா எடுத்தாராமே?"

"ஹலோ நீயும், ரஞ்சிதமும் தாமரைப்பூக் கோலம் போடுவதைக் கூடப் படம் பிடித்தார்களா என்ன?"

"ஏண்டீ? ஆரத்திப் பாட்டு பாடினீர்களாமே. உனக்கு என்றுமே ரஞ்சிதம் தான் உசத்தி. எனக்குச் சொல்லவேயில்லை பார்!"

"சன் டீவில காட்டுவாளா? பிபிசில காட்டுவாளா?"

"ரஞ்சிதம் தான் சொன்னா. உன் நாட்டுப்பெண் அசத்திட்டாளாமே! அருமையாய் ஸ்வீட் பண்ணியிருந்தாளாமே!"

"எம்பிஏ படிச்ச பொண்ணு எங்கே இத்தனை பதவிசா பொம்மைக்கொலு வைக்கிறா சொல்லு!"

அம்புஜம் பூரிப்பில் மிதந்தாள்.

இப்போது ஸ்வேதா நிஜமாகவே அடுத்த வருஷ நவராத்திரி கொலுவுக்காக குட்டியாய் ஒரு ஃபவுண்ட்டன் செய்கிறாள். துணி பொம்மை செய்கிறாள். ஏர்ப்போர்ட் பொம்மை செய்கிறாள். சௌந்தர்ய லஹரியும் கற்றுக் கொள்கிறாள், ஆபீஸ் விட்டபின் சாயங்காலங்களில்!



பரணிலிருந்து இறக்கப்பட்ட பொம்மைகளின் மூக்கு, கை, கால்களில் பெயிண்ட் போய், சின்ன காயம் பட்டதுடங்களா?

எடுங்கள் உங்கள் குழந்தையின் 'போஸ்டர் கலர்' பாட்டில்களை... லேசாக 'பேட்ச்சிங் கலர்களால் 'டச்' செய்துவிட்டு காய்ந்தபின் அந்த இடத்தில் ஒரு 'கோட்' நேச்சுரல் கலர் நெயில் பாலிஷ் தடவுங்கள். அட? எந்த பொம்மைக்குக் காயம் பட்டது?

- உஷா



# தெற்கே

தீய சக்திகளும், கொள்ளையர்களும் நாட்டில் அமைதியைக் குலைக்கும் நாட்கள் இப்போது. இந்த யுகத்தில் அன்னை யோகமாயா ஸ்ரீ புவனேஸ்வரி நடத்திய அற்புதம் ஒன்று சமீபத்தில் பம்பாயில் நடந்தது. பம்பாய் செம்பூரில் ஷாகின் எனும் பலமாடி கட்டடத்தின் ஒரு தளத்தில் வசிப்பவர் சுப்பிரமண்யம் எனும் அன்பர். இவர் ஸ்ரீ புவனேஸ்வரி சுவாமிகளின் சீடர். ஸ்வாமிகளிடம் மந்த்ர தீக்ஷை பெற்று தேவி உபாசனை நடத்தி வருபவர். இந்த வருடம் ஏப்ரல் 24 ம் தேதி, மாலை வேளையில் ஜபப் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார் சுப்ரமண்யம்.

சி.பி.ஐ. ஆபீஸர் போன்று வேடமிட்ட உள்ளே வந்த கொள்ளையர்கள் அந்தக் கட்டடத்தின் மேல் தளத்தில் இருக்கும் ஒரு வீட்டில் துப்பாக்கியுடன் பணம் பறிப்பதற்கு மிரட்டிக் கொண்டிருந்தனர். விஷயம் போலீசுக்குத் தெரியவே, கட்டடத்தை முற்றுகையிட்டது போலீஸ். தகவலை கொள்ளையர்கள் அறிந்ததும், அதில் ஒருவன் சுப்ரமண்யம் வீட்டில் நுழைந்து, தப்பிக்க முயல்வதற்கு, அவர்தம் ஒரே மகனின் வயிற்றில் துப்பாக்கி வைத்து மிரட்டினான். கண் திறக்கையில் தன் எதிரே தவப்புதல்வன் கொள்ளையர் கையில் சிக்கி மூச்சு திணறுவதைப் பார்த்ததும் உடலும் மனதும் பதறுகிறது. துப்பாக்கி தோட்டா மகனுடைய உயிரைப் பறிப்பதா? அதுவும் பெற்ற தகப்பனின் முன்னால். அன்னையின் பாதங்களை மனதில் நினைத்து,

"தாயே லோகமாதா என்ன சோதனையம்மா இது? பணம் இல்லையே என்னிடம். உன்னை நினைக்கும் மனம்தானே நீ கொடுத்தாய். என் மகனின் உயிரைப் பறிப்பதற்கு முன் என் உயிரை எடுக்கச் சொல் அவனை. குருநாதா உன் பாதம் சரணம். உன்னையே சரணடையும் எங்களைக் காப்பாற்று அம்மா" என்று ஹிந்தியில் கதற, கொள்ளைக்காரன் பைத்தியம் பிடித்தவன் போல்,

"அம்மா உன் திரிசூலத்தால் என்னை ஒன்றும் செய்யாதே உன் பார்வை என்னை தகிக்கிறதே. நான் வந்த வழி போய் விடுகிறேன்"

என்று கூறி ஓட முற்படுகையில் வந்திருந்த போலீஸ் தன் பணியைச் செய்தது. இது குறித்து ஏப்ரல் 27ம் தேதி பிரபல பத்திரிகை "டைம்ஸ் ஆஃப் இந்தியா" மூன்றாம் பக்கத்தில் செய்தி வெளியிட்டிருக்கிறது.

இப்படி அன்னை தினம் தினம் நடத்தும் அற்புதங்கள் பலப்பல. லோகத்தைக் காக்கும் தேவி புவனேஸ்வரிக்கு ஆராதனை நடத்த ஸ்வாமிகள் தமது பக்தர் குழாமுடன் தலைக் காவிரிக்குப் புறப்பட்டுச் சென்றார். ஆடி மாதம். பெருக்கெடுத்து ஓடும் அழகிய காவிரி. மங்கையர் தீபமேற்றி பூஜை செய்வதை ஏற்றுக் கொள்ளும் புனித நதியின் உற்பத்தி ஸ்தானம். மனித குல மேம்பாட்டுக்காகவும், ஆன்மீக எழுச்சிக்காகவும் செய்யப்பட்ட சிறப்பு வழிபாடு இது.

காவிரி, சுஜோதி, கனகா என்று மூன்று நதிகளும் சேரும் புண்ணிய இடம். பொன்னும், பொருளும், நெல்லும், மணியும் நமக்களிப்பவள் காவிரி. ஜெயதேவர் போல் அழகிய வஸ்த்ரம், முத்துக்களாலான தலைப்பாகை, ஜால்ரா கையில், இந்தக் கோலத்தில் தள்ளாத வயதில், குளிர்க்காற்று வீசும் காலை நேரத்தில் ஸ்ரீ புவனேஸ்வரி சுவாமிகள் அம்பிகை மீது திட பக்தி கொண்டு காட்சி தர, கூடியிருந்த பக்தர்கள் முகத்தில் பேரானந்தம்.

*"ராதே ராதே ராதே ராதே ராதே
கோவிந்தா
ப்ருந்தாவன சந்தா"*

என்று பாடிக் கொண்டே காவிரியை அடைந்தார்கள்.

# வடக்கே கங்கா பூஜை; காவிரி பூஜை!

பக்தி சாம்ராஜ்யத்தில் நாம சங்கீர்த்தனத்தை அடுத்து, காவிரியின் மடியில் லோக மாதா புவனேஸ்வரிக்கு, நதியின் நடுவில் அமைந்த சிறு பாறைகளில் பீடம் அமைத்து, அதன் நடுவில் அம்பிகை வீற்றிருக்க, ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகளும், பரத்வாஜ ஸ்வாமிகளும் திருமஞ்சனம் செய்தனர். **காவிரி மாதா பூஜை செய்கிறாள் ஜகன் மாதாவிற்கு.** காவிரி நீர் குடம் குடமாய் அம்பிகையின் மேனியை நீராட்டுகிறது. குங்குமச் சாறும், மஞ்சள், தேன், பால், பழம், தயிர், இளநீர், பன்னீர் போன்ற பல்வேறு அபிஷேகங்கள்.

நிர்மலமான மனத்துடன் தன்னை வேண்டும் பக்தர்களுக்கு வேண்டிய வரமளிக்க வெண்ணைக் காப்பு. இனிக்க இனிக்க அவள் நாமத்தினைப் பாட நாவளித்த அன்னைக்குக் கேசரி பாயசம் கொண்டு அபிஷேகம். சிவ ரூபிணியாய்




# ஸ்ரீராம் பதில்கள்

24%, 30%, 35% வட்டி கொடுக்கிறதா சில நிறுவனங்கள் சொன்னாகூட, அந்த அளவுக்கு அதிகபட்ச வட்டியை தொடர்ந்து அவங்களால கொடுக்க முடியுமாங்கிறத நீங்க யோசிச்சு பாக்கணும். இருபது வருஷத்துக்கு முன்னால அப்படிச் சொன்னவங்கெல்லாம் இப்ப திவாலாகி இருக்கிறதைப் பார்க்க முடியுது. உதாரணமா, வங்காளத்தில் சஞ்சய்தா, தமிழ்நாட்டில் உம்மிடி பேங்க்கர்ஸ், இந்து ஃபைனான்ஸ், ஸூகேஸன், ஜெயசக்தி ஃபைனான்ஸ், கேரளாவில் ஸமரியாஸ், லாபெல்லா, கர்னாடகாவில் மன்ஜோக். அந்த மாதிரி கம்பெனியில டெபாசிட் செஞ்சவங்க பணத்தை பறிகொடுத்துட்டு தவிக்கிறத இப்பவும் நாம பாக்கிறோம். இப்படி எத்தனையோ சொல்லலாம். நீங்க பாடுபட்டு சேர்த்த பணத்தை பாழாக்கிடக் கூடாது. உங்க பணத்துக்கு பாதுகாப்பும், வட்டிக்கு

இப்போ சில நிறுவனங்கள்ல 24%, 30% வட்டி தர்றதா சொல்றாங்களே. அவங்ககிட்ட பணத்தை டெபாசிட் செய்யலாமா?

– எம். மூர்த்தி, மதுரை.

(மூன்றாம் பகுதி 36 ம் பக்கத்தில்)



லோக பூபதியான அன்னைக்கு விபூதியால் அபிஷேகம். நாராயணிக்கு சங்காபிஷேகம். அன்னபூரணிக்கு அன்னாபிஷேகம். பிரபஞ் சத்தினைத் தன்னுள் அடக்கி ரக்ஷித்துக் கொண்டிருக்கும் தேவிக்கு லட்டு கொண்டு அபிஷேகம். அம்பிகை உபாசகர்கள் செய் யும் பூஜையில் காவிரி அன்னை நாம் என்ன பேறு செய்தோமோ ஜகன்மாதாவின் திரு மேனியில் பட்ட பிரசாதம் தன்னிடம் வந்து சேர்வதற்கு என்று அகமகிழ்ந்து வேகத் துடன் ஓடுகிறாள். ஆனந்தமே எங்கும் நிறைந்திருக்கிறது.

பூவரச இலையில் ஸ்ரீசக்ரம், பாலா யந்த்ரம் போன்ற சக்தி மிக்க யந்த்ரங்களை யும், "ஐம் க்லீம் ஸௌ", என்ற பாலா மந்த் ரம், "ஓம் ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே" என்ற நவாக்ஷரீ மந்த்ரம், பஞ்சதசி மந்த்ரம், "ஓம் கம் கணபதயே நம:" என்ற மகா கணபதி மந்த்ரம், ராஜ சியாமளை, வாராஹீ, க்ஷோடசி போன்ற அத்தனை ஸ்ரீ வித்யா மந்த்ரங்களையும் வெற்றிலைகளிலும், பூவரச இலைகளிலும் வெள்ளிக் கம்பி கொண்டு ஆயிரக் கணக்கில் எழுதுகிறார் ஸ்ரீ பரத்வாஜ ஸ்வாமிகள். மக்களின் மனக் குறை அனைத்தும் நீங்க வேண்டுமென்பதற் காக, அத்தனை இலைகளையும் ஒவ்வொன் றாய் எடுத்து, சந்தன குங்குமமிட்டு, மலர்ந்த தாமரைப் பூவில் வைத்து, லட்டுடன், பட்டு வஸ்த்ரத்துடன் வேத கோஷத்துடன், "ஐம் க்லீம் ஸௌ: ஸௌம் க்லீம் ஐம்" என்ற மந்த்ரத்துடனும் காவிரி நீரில் விட அதனைக் காவிரித்தாய் தன் சிரத்தில் தாங்கிச் செல்கிறாள். அலைகளின் சப்தம் மந்திரத்தை திரும்பச் சொல்லிக் கொண்டே போகிறது.

நதிக் கரையில் செய்த இந்த ஸ்ரீ வித்யா பூஜையானது லட்சம் பூஜை வீட்டில் செய் தால், ஒரு கோடி காயத்ரி ஜபம் செய்தால் எத்தனை புண்ணியம் கிடைக்குமோ அத் தனை சக்தி மிக்கது" என்று ஸ்வாமிகள் தமது அருளுரையில் கூறினார்.

வடக்கே கங்கா பூஜை போன்று தெற்கில் இக் காவிரி பூஜை. இதனைக் காண நம் கண்கள் கோடி புண்ணியம் செய்திருக்க வேண்டுமென்பதில் எள்ளளவும் ஐய மில்லை.

அரிய பூஜையைக் கண்ட வருணனும் அகமகிழ்ந்து பன்னீராய் மழை பொழிய பக்தர்கள் அதில் ஆனந்தமாக நனைந்து அன்னையை தரிசிக்கிறார்கள். கருணை மழையில் நனைந்த பக்தர்களுக்கு அமுதமும் வழங்கப் பெற்று உள்ளம் சிலிர்க்கின்றனர்.

ஜாதி, மொழி, இனம் ஆகியவற்றைக்



## எருக்க இலை

சிறு முள் குத்தி எடுக்க வராவிட்டால் பெவிகாலை உபயோகிக்க ஜூலை '95 இணைப்பு இதழில் (100 யோசனைகள்) குறிப்பிட்டிருந்தது. எருக்க இலையின் பாலை ஒரு ட்ராப் முள்/சிராம்பு குத்திய இடத்தில் வைத்து விட்டால் பிறகு வேறு முயற்சி வேண்டாம். வலியும் குறைந்து முள்ளும் மறைந்துவிடும். எருக்க இலை சாலை ஓரங்களில், புதர்கள் இருக்குமிடங்களில் எங்கு வேண்டுமானாலும் கலபமாகக் கிடைக்கும். இலையைப் பறிக்கும் பொழுதும், இலையை எப்படி உடைத்தாலும் அதிலிருந்து பால் வரும்.

— கே. ராஜலக்ஷ்மி

கடந்து காவிரி அன்னை ஏற்றுச் சென்ற இந்தப் பூஜை அவள் செல்லுமிடமெல்லாம் புனிதம் சேர்க்கட்டும். தீய சக்திகளை அழிக்கட்டும் நாட்டில் அமைதி நிலவச் செய்யட்டும்.

சென்னை - 53, கள்ளிக்குப்பம், கங்கைநகர், ரெட்ஹில்ஸ் ரோடு அம்பத்தூரில் அமைந்துள்ள ஸ்ரீ யோகமாயா புவனேஸ்வரி பீடத்தின், ஸ்ரீ பரத்வாஜ ஆசிரமத்தில் பிரதி பௌர்ணமி அஷ்டமி தினங்கில் தேவிக்கு விசேஷ ஆராதனைகளும், பக்தர்களுக்கு அன்னதானமும் வழங்கப்படுகிறது. அம்பிகை புவனேஸ்வரிக்கு அந்நதா என்ற நாமமுண்டு. அவளின் பிரசாதம் ஞானத்தையும், மன வைராக்யத்தையும், தேக ஆரோக்கியத்தையும் தரவல்லது.

மழை முதலியவற்றைத் தரும் தேவர்களுக்கு யாகம் செய்வதால் திருப்தி. ரிஷிகளுக்குத் தர்ப்பணம் செய்வதால் திருப்தி. நம் குலத்தை வாழையடி வாழையென தழைக்கச் செய்யும் நம் பித்ருக்களுக்கு அன்னதானத்தினால் மட்டுமே திருப்தி. அன்னதானம் என்பது பசுக்களுக்கும் சேர்த்துத்தான். பசுவின் உடம்பில் எல்லா லோகங்களும் அடங்கியுள்ளன. கோமாதாவிற்கு அன்னமளிப்பதன் மூலம் அனைவர்க்கும் உணவளித்த புண்ணியம் நமக்குக் கிடைக்கிறது.

காலப் போக்கில், அவசர கம்ப்யூட்டர் யுகத்தில் வெளி நாடுகளில் இருக்க வேண்டிய கட்டாயத்தில் நம் முன்னோர்களுக்கு, குலப் பெரியோருக்கு கடமைகளைச் செய்ய முடியவில்லையே என்று ஏங்கும் பல பக்தர்களின் குறையைக் கருத்தில் கொண்டு இந்த ஆசிரமத்தில் சிறந்த ஒரு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. "அன்னதான கட்டளை" என்றதொரு பக்தர்களுக்கும், பசுக்களுக்கும் உணவளிக்கும் ஏற்பாடு தான் அது. மிக எளிதான இந்த கைங்கர்யத்திற்கு பக்தர்கள் தங்களது பிறந்த நாள், விவாக நாள் அல்லது தம் முன்னோர்களின் நினைவு நாட்களிலும் அன்னதானம் செய்ய ரூபாய் இரண்டாயிரத்தை ஒருமுறை வைப்பு நிதியாகச் செலுத்தி மேற்குறிப்பிட்ட நாட்களில் அன்னதானம் செய்து பலன் பெறலாம். இத் தொகையை "புவனேஸ்வரி மந்த்ரம் டிரஸ்ட்" என்ற பெயரில் ஆசிரம விலாசத்திற்கு அனுப்பலாம்.

ஸ்ரீபரத்வாஜ ஆசிரமத்தில் வரும் செப்டம்பர் இருபத்துநான்காம் தேதி நவராத்திரியை முன்னிட்டு, கடஸ்தாபனம் செய்து, சிறப்புப் பூஜைகள் நடக்க உள்ளன. நவராத்திரி முதல் நாளன்று ஸ்ரீவாஞ்சாகல்ப கணபதி ஹோமத்துடன் ஆரம்பித்து, ஷோடச மகா லக்ஷ்மி குபேரபூஜை, சண்டி பாராயணம், நவாவரண பூஜை, அதர்வண பத்ரகாளி பூஜை, ஸ்ரீவித்யா லலிதா ஹோமம், காயத்ரீ ஹோமம் இவைகள் வேத விதிப்படி நடக்கும். நவராத்திரி ஏழாம் நாள் 108 சுவாஸினி பூஜையும், தாம்பூல தாரிணி பூஜையும் எட்டாம் நாள் யோகமாயா புவனேஸ்வரிக்கு அறுபத்துநான்கு வித அபிஷேகம், 108 வலம்புரி சங்காபிஷேகமும், ஒன்பதாம் நாள் எழுநூறு மூல மந்திர பீஜாக்ஷரத்துடன் பத்து மணி நேரத்திற்கும் மேல் நவசண்டிகா ஹோமமும், தசமியன்று, ஸ்ரீசக்ர ரதத்தில் புவனேஸ்வரி எழுந்தருளி, அதற்கு லட்சார்ச்சனையும் நடைபெறும். தவிர தினமும் துர்கா தேவிக்கு நவதானியம், வெள்ளிக்காசுகள், மஞ்சள், குங்குமம், இவற்றைக் கொண்டு சுமங்கலிகளால் செய்யும் ஸஹஸ்ரநாமார்ச்சனையும், கோபூஜை, கஜபூஜை, அச்வபூஜைகளோடு சைதன்ய பஜனையும், காலை மாலை என இரு வேளையும், பத்து நாட்களும் வெவ்வேறு வித அலங்காரங்களோடு, ஸ்ரீவித்யா பத்ததி பிரகாரம் நவராத்திரி உத்ஸவத்தினை, பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள், நடத்தியருள்கிறார்கள். நவராத்திரியை தரிசிப்பவர்கள் பாக்கியசாலிகள் என்பதில் சந்தேகமில்லை. புண்ணியம் செய்திருந்தாலே ஒழிய இது கிட்டாது. புவனேஸ்வரியைத் தரிசித்து நீங்காத செல்வம் நிறைந்து வாழ்வோம்!

# மங்கையர் மலர் & அனுபவ் குரூப் இணைந்து வழங்கிய சந்திப்போம்; சிந்திப்போம்!

படுகிறார்கள். ஆனால் பின்னேற பெண்கள் விட மாட்டார்கள். முன்பு அமுக்கி வைக்கப்பட்ட பெண்ணினம் விடுதலை பெற்று முன்னேறி வருகிறது. வீட்டிலும் ஆண்கள் தங்கள் மனப்பான்மையை மாற்றி பெண்களுக்கு உதவி செய்வது தவிர்க்க



## (சென்ற இதழ் தொடர்ச்சி....)

**ரோகிணி தேவி :** ஆண்... பெண் சமூக சேவை செய்யும் போது ஆணுக்குத்தான் அங்கிகாரம் கிடைக் கிறது. பெண் சமூக சேவை செய்தால், 'வீட்ட பாத்துக்காம இவளுக்கு இங்க என்ன வேலை' எனக் கிண்டல் செய்பவர்களும் இருக்கிறார்கள். நானே மேற்கொண்டு ஏதாவது கோர்ஸ் சேர வேண்டும் என நினைத்தால் 'என்னம்மா, இந்தத் தடவை, வெகேஷன் அவ்வளவு தானா' என்பார்கள்."

**சௌமினி ரமேஷ் :** நான் பெண் என்று கூறிக் கொள்வதில் மிகுந்த பெருமை அடைகிறேன். பெண் குழந்தைகளை பெற்று எடுப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். நான் பெண் தொழில் அதிபராக இருந்தாலும் ஆணாக இருப்பது போல் நினைக்கவில்லை. பெண்ணாகவே இரக்கமுடன் இருக்கிறேன். பெண்களுக்குத் தன்னம்பிக்கை மிக முக்கியம். அது இருந்தால் முன்னேற்றம் தானாகவே வந்து விடும். குடும்பங்களில் அவள் சம்பாதித்தாலும் அவன் சம்பளம் ஆகி விடுகிறது. என்று பெண்கள் தன்னம்பிக்கையோடு தலை நிமிர்ந்து நடக்கிறார்களோ அன்றுதான் பெண்கள் முன்னேறியதாக நினைக்க முடியும்."

**லட்சுமி பெரியண்ணன் :** பெண்கள் மிகுந்த திறமைசாலிகள். வீட்டையும், நாட்டையும் பாதுகாக்க பெண்களால் முடியும். பெண்கள் தங்கள் பொறுப்புகளை உணர்ந்து அவற்றை நிராகரித்து விடக்கூடாது. முன்னேற்றம் என்று, இருப்பதை இனிய குடும்பத்தை விட்டுவிடக் கூடாது. பாலன்ஸ்டாக செயல்பட வேண்டும்."

**ராஜா :** ஆண்கள் இப்ப எதிர்காலத்தில் நாம பின்னேறி விடுவோமோ என்று பயப்

முடியாத விஷயம். வேறு வழியில்லை. கூட்டுக் குடும்பம் அழிந்து தனிக்குடித் தனம் பெருகுவதே பெண்களுக்கு ஆதரவான முன்னேற்றமான விஷயம் தானே?

**ஜெயஸ்ரீ ராமசாமி :** இதே மாதிரி கருத்தரங்கை ஆண்களை வைச்சும் நடத்தணும். அப்பதான் பெண்களோட பிரச்னைகளை அவங்க உணர முடியும். கணவனால் கை விடப்பட்ட பெண்ணை 'வாழாவெட்டி' என்று சொல்லும் சமுதாயம் அந்தக் கணவனை 'வாழாவெட்டன்' என்று சொல்வது இல்லையே. இது போல் பல அவப் பெயர்

கள் பெண்கள் மீது சுமத்தப்படுகிறது. விதவைகளை பூ, பொட்டு வைக்கக் கூடாது என்று சொல்பவர்கள் இன்றும் இருக்கிறார்கள். இப்படி பல முட்டுக்கட்டைகளைத் தாண்டி எப்படி பெண்கள் முன்னேற முடியும்?"

**வள்ளி அண்ணாமலை** : "நான் ஒன்பது வருஷமா கிராமப்புற சமூக சேவையில் ஈடுபட்டு பெண்களின் அவல நிலையைக் கவனித்து வருகிறேன். காலம் காலமாக பெண்ணாக கிராமங்களுக்கு வந்து கொண்டிருப்பது பாராட்ட வேண்டிய முன்னேற்றம்."

**கோகிலாதேவி** : "கீழ்மட்ட பெண்கள் வேலை பார்க்கும் போது அவர்களுக்கு ஆண்களுக்குக் கொடுக்கப்படுவது போல் 'சமமான கூலி' தரப்படுவது இல்லை. களை எடுக்கும் பெண், நாற்று நடும் பெண், சித்தாள் வேலை பார்க்கும் பெண் இவர்களைப் போன்றவர்களுக்குச் சரியான கூலி தரப்படுவதில்லை. நிறைய கடினமான வேலை பார்த்தாலும் நியாயமான சம்பளம் வழங்கப்படுவது கிடையாது. ஆணுக்கொரு சம்பளம், பெண்ணுக்கொரு சம்பளம் கூடவே கூடாது. உலகம் முழுக்க இந்த நிலையே இருக்கிறது. வேலை நிரந்தரமாக கற்பை பலி கொடுக்கும் பெண்களும் இருக்கிறார்கள். இந்த அவல நிலை மாறினால்தான் பெண்கள் முன்னேறி விட்டதாகக் கூற முடியும்."

**தங்கம் ராமசாமி** : "ஆண்கள் பெண்கள் அதிவேகமாக முன்னேறி விட்டதாகக் கூறுகிறார்கள். 'சேலை கட்டினால்தான் வேலை' என்ற நிலை வந்து விட்டதே'.

**மஞ்சுளா ரமேஷ்** : "அதற்கு என்ன செய்வது? பெண்கள் சில ஆண்களைப் போல் நேரத்தை வீணாக்காமல் சின்சியராக வேலை பார்ப்பதால் வேலை வாய்ப்புத் தருகிறார்கள். இதை நான் சொல்லவில்லை. அப்படி வேலை தரும் பலர் சொல்கிறார்கள்."

**ராஜசுந்தரி** : சமுதாயத்தில் பெண்களை போகப் பொருளாகத்தான் நினைக்கிறார்கள். டி.வி. விளம்பரத்திற்குக் கூட பெண்ணை பயன்படுத்துகிறார்கள். இது கேவலமான நிலை. மண்ணாசை, பொன்னாசை... பெண்ணாசை என்கிறார்கள்."




# பெண்கள் முன்னேறி விட்டார்கள்; உண்மையா?

கள் ரத்தத்தில் ஊறிப்போன 'தாழ்வு மனப்பான்மை' இப்போது மாறி வருகிறது. சமூக, கலாசார, பொருளாதார, ஆரோக்கிய ரீதியான முன்னேற்றம் இன்று சிறிது சிறி




# ஸ்ரீராம் பதில்கள்

டெபாசிட்டை மிக பாதுகாப்பான முறையில் உபயோகப்படுத்துவது, சரக்கு போக்குவரத்து தொழிலில் ஈடுபட்டுள்ள லாரிகளுக்கு நிதி உதவி அளிக்கும் நிறுவனங்களே. ஏனைய நிதிநிறுவனங்கள் பாதுகாப்பு குறைவான வழிகளில் பணத்தை கொடுத்துவிடுகிறார்கள். உதாரணமாக,

**பில் டிஸ்கவுண்டிங்** ஒரு குறுகிய கால வர்த்தகம் என்று நம்பி செய்கிறார்கள். பெரும்பாலும், இது போன்ற நிதி உதவி ஒரு அடைமான பொருள் இல்லாமல் கொடுக்கப்படுவதால், பண நஷ்டம் முற்றிலும் தவிர்க்க முடியாதது.

**'லீஸிங்'னு சொல்ற குத்தகை ஒப்பந்தம்:** இதில ஒரு சில தொழில்கள், பொருள்கள், இடங்களில் மட்டுந்தான் கடனுதவி அளிக்க முடியும். இந்த இரண்டிலுமே, கடன் வாங்கினவங்க திருப்பித்தர தவறினா, அவங்களோட சொத்துக்களை உடனடியா கையகப்படுத்தி விற்பனை செய்றது அவ்வளவு எளிதல்ல.



ஒரு சந்தேகம். டெபாசிட் செய்றதுக்கு ஏற்ற நிதிநிறுவனத்தை எப்படி தேர்ந்தெடுக்கிறது ?

– பாரதி, நெல்லிக்குப்பம்

ஆனா, லாரிகளுக்கு
தவணைமுறை நிதியுதவி செய்ற
வழிமுறை இருக்கே, அது
ரொம்ப பாதுகாப்பானது.
காரணம் தெரியுமா? லாரிப்
போக்குவரத்து தொழில் ரொக்க
அடிப்படையில் நடைபெறுது.
இது ஒரே ஒரு தொழில்
துறையை மட்டுமே நம்பி
செயல்படுவதில்லை. ஒரே ஒரு
பிராந்தியத்தில மட்டுமே
இயங்குவதும் இல்ல. அதனால,
இது ஆண்டுதோறும் நிலையான
வருமானம் தரக்கூடிய
லாபகரமான தொழிலா இருக்கு.
ஆக, லாரி உரிமையாளரால
தவணைகளை ஒழுங்கா
திருப்பித்தர முடியுது.

எனவே, இந்த மாதிரி
நிறுவனங்களில் டெபாசிட்
செய்யறதுதான் உங்க பணத்துக்கு
பாதுகாப்பு. அதிக
புத்திசாலித்தனமும்கூட.

(இறுதிப் பகுதி ..46.. ம் பக்கத்தில்)



**மஞ்சுளா ரமேஷ்** : "ஆனா மண்ணிற்கும் பொன்னிற்கும் மதிப்பு கொடுப்பார்கள்."

**ரெங்கநாயகி ஸ்ரீனிவாசன்** : "நள்ளிரவில் ஒரு பெண் நகை போட்டுக் கொண்டு கற்புடன், நகையுடன் சென்றால்தான் உண்மையான சுதந்திரம் வந்ததாக நினைப்பேன்னு மகாத்மா காந்தியடிகள் சொன்னார். ஆனா இன்றைய சூழ்நிலையில் நடுப்பகலிலேயே பெண்ணாலே பாதுகாப்பா தெருவில் போக முடியவில்லை."

**பத்ரி ராஜகோபால்** : "இன்று மூன்று வயது பெண் குழந்தை கூட கற்பழிக்கப்படும் நெஞ்சம் பதறவைக்கும் சம்பவம் நடக்கிறது. பெண் என்று ஸ்கேனிங்கில் பார்த்தவுடன் அந்தக் குழந்தையை அழிக்கச் சொல்வதும் இருக்கிறது. பெண் வர்க்கமே பிறக்கவே விடாமல், பிறந்தாலும் பாலியல் ரீதியாக பார்க்கப்பட்டால் பெண் முன்னேற்றம் பற்றி பேசி என்ன பயன்? அதே போல ஒரு பெண்ணை மட்டம் தட்ட வேண்டுமானால் உடனே அவள் ஒழுக்கத்தை விமர்சிக்கும் அநியாயம் அகல வேண்டும்."

**ராஜீவி திருவேங்கடம்** : "பெண் என்றாலே தியாகம் செய்பவள்னு பெண்ணை ஏமாற்றி வராங்க. வீட்டுப் பணிகள் முழுதும் செய்து தியாகி ஆக்கப்படுகிறாள். சரி, தனக்கும் அந்த வீட்டில் ஒரு மதிக்கத்தக்க இடத்தை அவள் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அப்போதுதான் நாம் ஏமாறாமல் முன்னேற முடியும்."

வாசகிகள் - சிறப்பு விருந்தினர் கருத்துப் பரிமாறல்கள் முடிந்ததும், அனுபவ் குரூப் நிறுவனங்கள் பற்றி வாசகர்கள் கேட்ட கேள்விகளுக்கு 'அனுபவ் குரூப்' தலைவர் நடேசன் பதில்களைக் கூறினார்.

பெண்கள் முன்னேறி விட்டார்கள், உண்மையா? தலைப்பில் பேச பார்வையாளர்களில் சிலருக்கும் வாய்ப்புகள் வழங்கப்பட்டது.

கடைசியாக சிறந்த கருத்துக்களைச் சொன்ன நிர்மலா, கலாவதிக்கும், பார்வையாளர்களில் குலுக்கல் முறையில் பரிசு பெற்ற வித்யா, ரமா, சாந்தி, ராமலிங்கம், சாந்தா ஆகியோருக்கும் நடேசன் பரிசுகளை வழங்கினார்.

தொகுப்பு : **விஜயா கண்ணன்**

படங்கள் : **ராஜூநாராயண்**

மங்கையர் மலர் & சௌபாக்யா வெட்கிரைண்டர் இணைந்து வழங்கிய

# அந்தஸ்து சௌபாக்யம் பெற்றேன்!

கட்டுரைப் போட்டி

# காந்திவழி — என்வழி

அன்பு, பண்பு, நட்பு, செல்வம், நல்லெண்ணம் எல்லாம் கொண்டவர் தான் என் அருமைக் கணவர். மற்றவர் மனதை விளையாட்டுக்குக் கூட புண்படுத்த மாட்டார். அக்கம் பக்கத்தில் நல்லது கெட்டது என்றால் முதலில் நிற்பவர் இவர்தான். மற்றவர்களுக்கு உதவுவதில் நேரம், காலம் பார்க்க மாட்டார். எத்தனை நற்குணங்கள் இருந்து என்ன? சிறு தீப்பொறி மலை போன்று குவிந்த பொருள்களைக் கூட அழித்து விடுவது போலத்தான், இவருடைய கெட்ட பழக்கமும்.

குடி, சிகரெட், வியாதி என்றால் டாக்டரிடம் காட்டலாம். கொடூரம், கோபம் போன்ற குணம் என்றால் பெரியவர்களிடம் யோசனை கேட்கலாம். ஆனால் என்னுடைய கணவரிடம் இருந்த கெட்ட குணம்!

திருமணத்திற்கு டௌரி கூட வாங்காமல் என்னை மணந்த அவர் குணம் இந்தச் சின்ன கெட்ட பழக்கத்தால் என் மனதை சுக்கு நூறாக உடைத்தது. அவருக்கு நாவடக்கம் இல்லாதது தான் ... சொல்லவே வெட்கமாக இருக்கின்றது. (பாஸ்டர்ட்) இந்த வார்த்தையை அவர் தன் பேச்சில் தமிழில் உபயோகிப்பது தான். அதுவும் எப்படி? மனைவி, நண்பர்கள், பெண்கள், பெரியவர்கள், சினிமா தியேட்டர் டிக்கெட் வாங்கும் இடம் எதுவாக இருந்தாலும உணர்வே இல்லாமல், நல்ல சமயம், கெட்ட சமயம் எதுவும் பார்க்காமல்.

... அந்தப் பயலயா சொல்றே ... புள்ளய நான் கேட்டதா சொல்லு என்று மிகச்சாதாரணமாக தன் பேச்சில் கண்ணே மணியே என்பது போன்று அடிக்கடி உபயோகிப்பார். எங்கள் வீட்டை யாராவது தேடிக் கொண்டு வந்து எங்கள் காலனியில் யாரையாவது கேட்டால், அவர்கள் அடையாளம் சொல்வது. "ஏய் மணி அந்த ... பையன் சார் வீட்டை கேட்கிறார்டா?" என்று சொல்லுமளவுக்கு இவர் வார்த்தை இவரை பாப்புலர் ஆக்கிவிட்டது.

நானும், நல்ல மூடில் இருக்கும் பொழுது, மனதில் படும் படியாக மாற்றிக் கொள்ள கூறியிருக்கிறேன். "என் தோழிகளுக்கு நேர எனக்கு அவமானமா இருக்குங்க. இங்க பாருங்க நிலப்படில லட்சுமி தேவி இருந்துண்டு ததாஸ்து ததாஸ்து என்று சொல்லிண்டே இருப்பாங்க. இந்தமாதிரி வேண்டாத வார்த்தை வேண்டாங்க" என்றால் - ஊஹூம்.

"என்ன ரம்மி நான் என்ன வேணும்னா சொல்றேன். பழக்க தோஷம் வந்துடுது" என்பார்.

என் மனதில் ஒரு வைராக்கியம் எப்படியும் இதை மாத்தியே ஆகணும்னு. பின்னாடி என் குழந்தைகள் என்னாட்டாம் கூசக்கூடாது. மற்றவர் முன்னால்

# நீங்கள் உங்களுடைய 1-2-3 வயதுக் குழந்தைகளின் எல்லா சிறப்புத் தேவைகளையும் கவனித்துக் கொண்டு விட்டீர்கள்.








போஷாக்குத் தேவைகளுக்கு என்ன செய்தீர்கள் ?




அறிமுகப்படுத்துகிறோம்

## Junior Horlicks

**உங்களுடைய 1,2 அல்லது 3 வயதுக் குழந்தைகளின் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் ஏற்ற எல்லா முக்கிய ஊட்டச்சத்துகளைக் கொண்ட ஒரே சத்துணவு.**

ஒன்று முதல், மூன்று வயதுக் குழந்தைகளின் தேவைகள் விசேஷமானதும், வேறுபட்டதும் ஆகும். எல்லாமே தனித்தன்மை வாய்ந்தவையாகும். ஜூனியர் ஹார்லிக்ஸைப் போல*.

இந்திய மற்றும் சர்வதேச போஷாக்கு நிர்ணயங்களுக்கு ஏற்ப 1 முதல் 3 வயதுக் குழந்தைகளுக்கென விசேஷமாக தயாரிக்கப்பட்ட ஒரே மால்ட்டெட் பானம். 1 முதல் 3 வயதுக் குழந்தைகளுக்கான ஆரோக்கியமான வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் உறுதுணை புரியும் முக்கிய விட்டமின்கள், புரோட்டீன்கள், கூடுதல் கால்ஷியம் மற்றும் இரும்புச்சத்து சரிவிகிதத்தில் அடங்கிய ஒரே ஊட்டச்சத்து பானம் ஜூனியர் ஹார்லிக்ஸ்.

ஆகவே உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு முக்கியமான இந்த வருடங்களில் தினசரி உணவில் ஜூனியர் ஹார்லிக்ஸை அத்தியாவசியமாக்குங்கள்.

பிறகு பாருங்கள் உலகத்தையே அவன் மாற்றிக் காட்டுவான்.

*For your free copy of "Healthy Eating for Toddlers", write to SmithKline Beecham Consumer Healthcare Limited, Marketing Department, P.O. Box 242, New Delhi-110 001.*

HTA.5092.96 TAM

* தேர்ந்தெடுக்கப்பட்ட நகரங்களில் மட்டும் கிடைக்கிறது.

**THE SPECIAL 123 NOURISHER.**

அவமானப் படக்கூடாது. இவ்வளவு அன்பு செலுத்தும் அவரிடம், இந்தப் பழக்கத்தை மாற்ற முடியாத நான் அவருக்கு எப்படி உண்மையானவள் ஆவேன். காரியத்தில் இறங்கினேன். காந்திஜியின் மூன்று குரங்குகள் பொம்மைகளில் "தீயவை பேசாதே" பொம்மை ஆறு வாங்கி, அவர் அதிகமாக புழங்கும் இடங்கள், டி.வி. ஸ்டாண்டு, ஷோகேஸ், அவர் எழுதும் டேபிள், பேப்பர் படிக்கும் இடம் எல்லாவற்றிலும் அமர்ந்தது.

வீட்டுக்கு வருபவர்கள் எல்லாம், "என்ன ஒரே பொம்மையை எல்லா இடத்திலும் வைச்சிருக்கீங்க" என்றார்களே ஒழிய இவர் குணம் மாறலை. வீட்டில் ஒவ்வொரு அறையிலும் தீச்சொல் அகற்றுக, நாகாக்க போன்ற பல சார்ட்டுகள் இவர் கண்ணில் படும் படியாக மறைமுகமாக எழுதி வைத்தேன்.

கிருபானந்த வாரியார் சாமிகள் ஒரு முறை எங்கள் ஊருக்கு உபன்யாசம் செய்ய வந்த பொழுது "நமச்சிவாய" என்னும் மந்திரத்தின் பெருமையை, மனிதனின் மூச்சுக் காற்று உள்ளே இழுத்தும் வெளியே விடும் பொழுதும் இடைவிடாமல் சொல்ல வேண்டும் என்று மனம் உருகக் கூறினார்.

"ஏங்க சுவாமிகள் கூட நேற்று கூறினாரே அந்த மாதிரி வார்த்தை உங்கள் வாயினில் வரும் பொழுது நமச்சிவாய என்று சொல்ல முயற்சி பண்ணுங்க'' என்றேன். ''உன் வருத்தம் எனக்குப் புரியறது. நான் என்ன வேணும்னா சொல்றேன். எப்பவாவது என் வாயில அந்த வார்த்தை வரும் உணர்வு இருந்தா நான் மாற்றி நமச்சிவாய என்று சொல்ல மாட்டேனா. நீ கூட புரிஞ்சுக்க மாட்டேன்கிறியே".

''நீங்க இதை நிறுத்தரமுட்டும் நான் எத்தனை நாட்களானாலும் பேசப்போவது இல்லை." அதிகபட்சம் ஒரு வாரம் கூட அதனைச் செயலில் காட்ட முடியாத நிர்பந்தங்கள் வந்துவிடும். அல்லது என் மேல் உள்ள அன்பினால் வேண்டும் என்றே நண்பர்கள், உறவினர்களை வீட்டுக்கு அழைத்து வந்துவிடுவார். மூன்றாம் மனிதர் முன்னால் பேசித்தானே ஆகவேண்டும். இந்தக் காரணத்தையா சொல்ல முடியும் அவர்களிடம். முடிவில் இதுவும் பெயிலியர் தான்.

சரி இந்த வார்த்தையை ஒவ்வொரு முறை உபயோகிக்கும் பொழுதும் இந்த உண்டியலில் ஒரு ரூபாய் போட்டுவிட வேண்டும். உண்டியல் தொகை ஒவ்வொரு மாதமும் அதிகமானதே தவிர பலன் இல்லை. வீட்டில் உபயோகித்தால் வேண்டும் என்றால் பைன் போடலாம். வெளியில் உபயோகித்தால்?

இறைவனிடம் இந்தப் புதுமுறை வெற்றியாவதற்கு மனமுருக பிரார்த்திக் கொண்டேன். நான் கஷ்டப்படுவதை அவரால் கண்டிப்பாக தாங்கிக் கொள்ள முடியாது என்பது நன்கு தெரியும். அதுவே சரியான வழியாகப் பட்டது. ஆமாம் அவர் வீட்டில் அதை உபயோகிக்கும் ஒவ்வொரு முறையும், "1008 தடவை ஓம் நமச்சிவாய" என உடனே குளித்துவிட்டு எழுத ஆரம்பித்தேன். மேலும் அன்று முழுவதும் உணவு சாப்பிடுவதும் இல்லை என்று விரதம் எடுத்துக் கொண்டேன். அவர் எவ்வளவு முறை என்னை கெஞ்சியும் அவ்விரததைக் கைவிடவில்லை. உணவின்றி உடல் சோர்ந்து 5 முறை ஆஸ்பத்திரியில் அவரால் சேர்க்கப் பட்டேன். (பல குயர் நோட்டுகள் முடிக்கப் பட்டது இறைவன் நாமம் எழுதி). டாக்டரே இதுபோன்று இன்னொரு முறை இப்படி ஏற்படக்கூடாது. ஜாக்ரதையாக பார்த்துக் கொள்ளுங்கள் என்று டிஸ்சார்ஜ் செய்தார்.

வீட்டுக்கு வந்த என் கணவர், "ரம்மி என்னையும், குழந்தையும் விட்டுட்டு போய்டாதே ரம்மி நீயும் போய்ட்டா எனக்கு யார் இருக்கா" என்று கூறி வருந்திய அவர் என் விரதத்தை ஒரு மாதம் வரை தானே மேற்கொண்டு, தன் வாயைத்திறக்கும் பொழுதெல்லாம் வரும் வார்த்தை தன்னைத்திருத்திய சிவனின் நாமமே இருக்க வேண்டும் என்று, அதன் பிறகு பிறந்த எங்கள் மகனுக்கு சிவா என்று பெயர் வைத்தார். இந்த மௌனப் போராட்டம் எங்கள் இருவருக்கும் நடுவே நான்கு வருடங்கள் நடந்தது. இப்பொழுது என் நாத்தனார்கள், மைத்துனர்கள், கேலியாக "அண்ணி என்ன நீங்க அண்ணனை முந்தானையில் முடிச்சுக்காம, அவர் வார்த்தையை வெளியிடாம முடிஞ்சுனுட்டீங்க, எப்படி?" என்பார்கள்.

-ரம்யா மகேஷ்

9 புள்ளியிலிருந்து 5 புள்ளி வரை

(நேர்ப் புள்ளி)



பா. பிரேமலதா ராணி

# "OLD IS GOLD GOLD IS T.NAGAR LKS"

**"LKS GOLD" IS CASH IN HAND**

பொன்னின் பெருமை

பெண்ணின் பெருமை






தலைமுறை தலைமுறையாக
தரம்மிக்க நகைகளை விற்பனை
செய்து வருவதில் நிகரற்று விளங்குவது.
எல்.கே.எஸ் கோல்டு ஹவுஸ்




ONLY AT T. NAGAR

The Big Shop

# L.K.S GOLD HOUSE

60, USMAN ROAD, T.NAGAR, MADRAS - 600 017
PHONE : 4341111, 4344444, 4345555, 4343323

★ OPEN ON SUNDAYS — 10 AM to 1 PM

ADSTART

"இது அவசர யுகம். அன்றாட 'ரொட்டீன்' வேலைகளை அடித்துப் புரண்டு செய்வதற்குத்தான் நேரம் சரிப்படுகிறது. இதில் நிதானமாக, பொறுமையாக, நம்மைத் தனியாகக் கவனித்துக் கொள்ள எங்கே கிடைக்கிறது பொழுது?

பல வேளைகளில் உடலில் ஏற்படும் உபாதைகளைக் கூட உதாசீனப்படுத்துவது சகஜமாகி விடுகிறது" இப்படிப் பலர் ஆதங்கத்தோடு சொல்லக் கேட்டிருக்கலாம்.

"ஆனால் அன்றாட காரியங்களோடு வேலையோடு வேலையாக மறைமுகமாக 20 நிமிடங்களை உங்கள் தேக ஆரோக்கியத்திற்காக எடுத்துக் கொள்ள முடியும். அதோடு உடல் பிரச்னைகளுக்கும் தீர்வு கிடைக்கும்" என்று புதிர் போட்டுப் பேசும் கே. ஏ. முகமது அத்னானிடம் "அது எப்படி சாத்தியம்?" என்கிறோம்.

"உடல் நிலை நன்றாக இருந்தால்தானே மற்ற வேலைகளைச் செய்ய உற்சாகம் வரும். அலுப்பும் சலிப்பும் சோர்வும் இருக்கும் போது எந்தப் பணியையும் சுவாரஸ்யமாக செய்ய முடியாது அல்லவா? பொதுவாக களைப்பு, சோர்வு, மன அழுத்தம் - உடல் நிலையைப் பெரிதும் பாதிப்பதோடு சுகவீனம், வியாதியை வரவழைக்கின்றன. உடலுறுப்புகள் யாவும் சீராக இயங்க, ஆரோக்கியமாக இருக்க கால் பாதங்களிலும் உள்ளங்கைகளிலும் முடிவடையும் - ஏறக்குறைய ஏழாயிரம் நரம்புகளுக்கு மசாஜ் தருவதன் மூலம் முழுமையான தூண்டுதல் அளித்து ஆரோக்கியமும் புத்துணர்ச்சியும் பெறலாம்.

உதாரணமாக டென்ஷன், உடல்வலி, மூட்டுவலி, தசைப் பிடிப்புகள், பாதவலி, வாதம், தூக்கமின்மை, தலைவலி, போதைக்கு அடிமையானவர்கள், புகைப்பிடிப்போர் ஆகியவர்களை கட்டுப்படுத்தவும் உடல் உறுப்புகளை சீராக இயக்கவும் சீன முறையில் நாங்கள் நாஃபியா ஹெல்த் மஸாஜரை உருவாக்கி இருக்கிறோம். இது உடலுக்குப் பூரணமான புத்துணர்ச்சியை அளித்து ரத்த ஓட்டத்தைச் சீராக்குகிறது" என நாஃபியா ஹெல்த் மஸாஜர் பற்றி அதன் தயாரிப்பாளர் கே. ஏ. முகமது அத்னான் விளக்கம் அளிக்கிறார். இராயப்பேட்டை 3, பீட்டர்ஸ் ரோடி

# ஸ்கிப்பிங்-வாக்கிங்-



# ஜாகிங் - தேவை - இல்லையா?

லுள்ள இவருடைய நிறுவனத்திற்குச் சென்று நாஃபியா ஹெல்த் மஸாஜரை பார்வையிட்டோம். நாஃபியா ஹெல்த் மஸாஜரின் வடிவமைப்பு எப்படிப்பட்டது?

சராசரி இந்தியரின் கால் பாத அளவுக்கு ஏற்ப வடிவமைக்கப்பட்டுள்ளது. இதனால் கால் பாதங்கள் மஸாஜரின் அதிர்வுகளால் இடம் மாறாமல் சரியாகப் பொருந்திக் கொள்கிறது. பாதங்களை மட்டும் இப்படி மஸாஜ் செய்வது முழுமையான மஸாஜ் ஆகிவிடாது. ஏனெனில் உள்ளங்கைகளிலும் விரல்களிலும் முடிவடையும் நரம்பு நுனிகளுக்கும் தூண்டுதல் தேவை என்பதால் இந்தியாவிலேயே முதல் முறையாக கைகளுக்கும் கால் பாதங்களுக்கும் சேர்ந்தாற்போல் வடிவமைத்து உள்ளார்கள்.

**''ஹெல்த் மஸாஜர் பயன்படுத்தும் முறை பற்றி சொல்லுங்கள்?''**

நாஃபியா ஹெல்த் மஸாஜரை தரையில்



• முகமது அத்னான்

உங்கள் இருக்கைக்கு முன்னால் வைத்து விட்டு மின்சார வயரை பிளக்கில் பொருத்தி ஆன் செய்ய வேண்டும். மின்சார சப்ளையைக் குறிக்கும் இன்டிகேட்டர் விளக்கு எரியும். இப்போது நாற்காலியில் அமர்ந்து மஸாஜரில் உள்ள பாத அமைப்பில் உங்கள் பாதங்களை வைக்கவும்.

அதிர்வு வேகத்திற்கும் வெப்ப நிலைக்கும் அவரவர் தேவைக்கும் ஏற்ப மஸாஜரில் உள்ள நரம்புகளைத் திருப்பிக் கொள்ளலாம். அந்தச் சமயத்தில் நீங்கள் ஓய்வாக அமர்ந்து கொள்ளலாம். அல்லது உட்கார்ந்தபடியே காய்கறி நறுக்கலாம். தலை சீவலாம். கீரை ஆயலாம். அந்த நேரத்தை எப்படியெல்லாம் பயன்படுத்திக் கொள்ள முடியுமோ அவ்வாறெல்லாம் பயன்படுத்திக் கொள்ளலாம். மஸாஜர் பாதங்களில் உள்ள நரம்பு நுனிகளை இத




# ஸ்ரீராம் பதில்கள்

நண்பர் கூறுவதற்கு பல காரணங்கள் இருக்கத்தான் செய்கின்றன.

- ஸ்ரீராமில் நீங்கள் டெபாசிட் செய்யும்போது, அத்தொகை முழுவதும் லாரிகளுக்கு நிதியுதவி செய்யும் தொழிலில் முதலீடு செய்யப்படுகிறது. வழங்கப்படும் கடன்தொகையோ 100% திரும்பப் பெறப்படுகிறது.
- நிர்வாக முறைகளை சீர்தூக்கிப் பார்க்க, டெல்கோ, அசோக் லேலண்ட், ஸிடி யூனியன் வங்கி இவர்களின் பிரதிநிதிகள் நிர்வாக அமைப்பில் (Board of Directors) இடம் பெற்றிருக்கிறார்கள்.
- 20 வருடங்களாக, லாரிகள் வாங்க கடனுதவி வழங்கி வரும் ஸ்ரீராம், ரூ.225 கோடி டெபாசிட்டுகளும், 2,00,000 டெபாசிட்தாரர்களின் நம்பிக்கையையும் பெற்றுள்ளது. உங்களுக்கு சேவை செய்ய நாடெங்கும் கிளைகள் திறந்துள்ளது.

எனவே, நீங்கள் ஸ்ரீராமில் டெபாசிட் செய்யும் போது, உங்கள் பணத்துக்கு அதிகபட்ச



டெபாசிட் செய்ய ஸ்ரீராம்தான் சிறந்த நிறுவனமென என் நண்பர் சொல்கிறாரே ?

– க. ரகோத்தமன்,
உடுமலைப்பேட்டை

மாகத் தூண்டி மஸாஜ் செய்யும். மிதமான வெந்நீர் ஊற்றி மஸாஜ் செய்வதாலும் அதிகப் பலன் பெற முடியும். பெரும்பாலும் பெண்களுக்குப் பாதவலி, மூட்டு வலி, உண்டு. அவர்களுக்கு இந்த முறை ஏற்றது.

கைகளுக்கு மஸாஜ் கொடுக்கும் போது மஸாஜரை மேஜையின் மீது வைத்தோ, அல்லது டீபாயின் மேல் வைத்தோ முதலில் இடது கையை வைத்துக் கொண்டு சுவிட்சை M4 நிலையில் வைத்து ஆன் செய்யவும். குறைந்தது 5 நிமிடங்கள் வைத்திருக்கலாம். பின்னர் வலது கைக்கும் அதே போல் செய்யவும். இதனால் இரண்டு கை களிலும் உள்ள நரம்பு நுனிகள் தூண்டப்படு கின்றன.

கால் பாத அதிர்வை விட கை மசாஜ் செய்யும் போது அதிர்வுகள் நிலையில் குறைவாக இருக்கும்.

பொதுவாக சாப்பிட்ட பிறகு தூங்குவதற்கு முன்னதாக மஸாஜ் செய்வது நல்லது. பெண்கள் வெந்நீரில் செய்வது நல்லது. பெண்கள் வெந்நீரில் மசாஜ் செய்வதால் உடனடி பலனைக் காண முடியும்.

காஸ்மெடிக் முறையில் பித்தவெடிப்பைச் சரிப்படுத்த இந்த மஸாஜரை பல அழகு நிலையங்கள் பயன்படுத்துகின்றன. தொடர்ந்து மஸாஜ் செய்து வருவதால் தலைவலி, சைனஸ், முதுகுவலி, ஹை பிளட் பிரஷர், லோ-பிளட் பிரஷர், வீட்டு விலக்கு நோய்கள், மூட்டுவலி, ஒற்றைத் தலைவலி இவைகளைக் குணப்படுத்தலாம். அதிக எடை உள்ளவர்கள் பயன்படுத்தும் போது எடை குறையும்.

**ஹெல்த் மஸாஜரின் வெளிப் பாகம் எப்படித் தயாரிக்கிறீர்கள்? உடைவதற்கு வாய்ப் புண்டா? மின்சாரத்தில் இயங்குவதால் மின்கசிவு ஏற்பட வாய்ப்பு இருக்கிறதா?**

பாலி பிராப்ளின் கோ-பாலிமர் என்கிற பொருளால் தயாரிக்கப்படுகிறது. 200 கிராம் எடை உள்ள மகா பருத்த மனிதரையும் தாங்கும். உடையாது. அதே நேரத்தில் முழுமையாக கவர் செய்யப்பட்டிருப்பதால் 'ஷாக்' அடிக்க நூறு சதவீதம் வாய்ப்பு கிடையாது.

**பொது மக்களிடம் நாஃபியா மஸாஜருக்கு வரவேற்பு எப்படி இருக்கிறது?**

நாங்கள் பாதத்தில் முடிவடையும் நரம்புகளுக்கும் கைகளில் முடிவடையும் நரம்புகளுக்கும் முழு உற்சாகம் கிடைக்கும்படி நாஃபியாவை அமைத்திருப்பதால் இதன் பயன் பரவலான மக்களிடையே விரைவில் தெரியக்கூடிய அளவில் உள்ளது. அலோபதி, சித்த மருத்துவர்கள் ஹெல்த் மஸாஜரை

தற்போது பரிந்துரை செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். திருச்சி ஜென்னி பிளாஸா விலும், கோவை மலர்விழி காம்ப்ளக் சிலும், பம்பாய் - கல்கத்தாவில் லோக்கல் மார்க்கெட்டிலும், ஹைதராபாத் சாட்டா பஜாரி லும், விசாகப்பட்டினம் டாபா கார்டன்சிலும் நாஃபியா ஹெல்த் மஸாஜர் கிடைக்கிறது.



இந்தியாவில் மட்டுமின்றி மலேசியாவில் எங்கள் தந்தை கே. ஏ. அகமது மீரான் டிஸ்ட்ரி பியூசன் கம்பெனி வைத்திருக் கிறார். அங்கு நாஃபியா ஹெல்த் மஸாஜருக்கும், மாக்னெடிக் வேவ் டிஸ்குக்கும் ஏகமான வர வேற்பு உள்ளது. கல்ஃப், இலங்கை, தென் ஆப்பிரிக்கா, மாலத் தீவு மொரிஷியஸ் ஆகிய இடங்களுக்கும் ஏற்று மதி செய்கிறோம்.

எந்த இடத்திலும் உட்கார்ந்து மஸாஜ் செய்ய வசதியாக மூன்றரை மீட்டர் நீளம் கொண்ட மின்சார வயரைப் பொருத்தியுள் ளோம். கால் பாதங்களைப் பொருத்தும் உட் பகுதியின் அளவு அதிக அகலம் உள்ள தால் தண்ணீர் கணுக்கால் உயரம் நிற்கும் படி அமைத்திருக்கிறோம்.

இன்னொன்று அக்குபிரஷர் முறை யோடு மேக்னெடிக்வேவ் சிஸ்டம் ஒன்றை அறிமுகப்படுத்தி இருக்கிறோம். சென்னை போன்ற நகரங்களில் வாழும் நடுத்தர மக்கள் ஏறக்குறைய எல்லா வீட்டு உபயோக சாதனங்களையும் தங் களுக்கு உதவியாக வைத்துக் கொள்வ தால் உடல் உழைப்பு குறைந்து வயிற்றுப் பகுதியில் தேவையற்ற கொழுப்பு சூழ்ந்து வயிறு பெருத்து, வாய்வுத் தொல்லை ஏற் பட்டு உடற்சிரமங்களைச் சந்திக்க நேர் கிறது. அப்படிப்பட்டவர்கள் மேக்னடிக்வேவ் சிஸ்டம் டிஸ்க் கைப் பயன்படுத்தலாம். காலை, மாலை இரு வேளைகளிலும் தொடர்ந்து தினசரி பயன்படுத்தி னால் இடுப்புப் பகுதியில் உள்ள சதைப் பிடிப்புகள் குறைந்து அழ கிய இடுப்பு கொண்டவர்களாக ஆகி விடுவார்கள். இதைப் பயன் படுத்துவது எளிது. டிஸ்கின் மீது ஏறி நின்று பாதத்தை நேராக வைத்து இடுப்பை வல, இடமாக திருப்பி பயிற்சி செய்ய வேண் டும். இதன் விலை 520 ரூபாய் தான்.

**நாஃபியா ஹெல்த் மஸாஜரை பராமரிப்பது எப்படி?**

பயன்படுத்திய பிறகு நாஃபியா ஹெல்த் மஸா ஜரை தண்ணீர் ஊற்றிக் கழுவலாம். நீரில் அமிழ்த் தக் கூடாது. மென்மையான துணியை சோப்பு நீரில் நனைத்துத் துடைக்கலாம்.



மஸாஜரை நகர்த்த வய ரைப் பிடித்து இழுக்கக் கூடாது. கர்ப்பிணிப் பெண் கள் பயன்படுத்தக் கூடாது. சுத்தம் செய்யும் போதும் பயன்படுத்திய பிறகும் மின் இணைப்பைத் துண்டித்து விட வேண்டும். நாஃபியா ஹெல்த் மஸாஜரை உட் கார்ந்த நிலையில்தான் பயன்படுத்த வேண்டும். மஸாஜரின் மேல் ஏறி நிற்கக் கூடாது."

- **மலர்விழி**

# செயற்கை முறைக் கருத்தரிப்பு பெண்களுக்கு வரமா, சாபமா?

**'செயற்கை முறை கருத்தரிப்பு' என்பது இப்பொழுது எல்லாம் மிகவும் பிரபலமாகி விட்டது. அதிலேயே எத்தனையோ விதங்கள். குழந்தை இல்லாத தம்பதிகளுக்கு விஞ்ஞானம் பெரிய உதவி செய்கிறதாகச் சொல்கிறார்கள்!**

**இது சம்பந்தமாக என் சிநேகிதி உமாவின் அனுபவங்களையும், அவளுக்கு ஏற்பட்டிருக்கும் சந்தேகங்களையும் மங்கையர் மலர் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள ஆசைப்படுகிறேன்.**

உமாவுக்குத் திருமணமாகி 10 வருடங்கள் ஆகின்றன. மகப்பேறு இல்லை. திருமணமாகி 3 வருடங்கள் முடிந்த உடனேயே க்ஷேத்ராடனம், விரதங்கள் என்று ஆரம்பித்து எதுவும் பலனளிக்காமல் ஒவ்வொரு மருத்துவராக படையெடுத்தனர். கணவனிடம்தான் குறை என்று தெரிந்தது. ஆனால் புகுந்த வீட்டார் உமாவிடம்தான் குறை என்று ஊர் பூராவும் செய்தி பரப்பினர். அவர்களின் வற்புறுத்தலினால் உமாவும் அவ்வாறே கூறி வந்தாள். இல்லா விட்டால் வாழ்க்கை நரகமாகி விடுமே. கடைசியில் வேறொரு ஆணின் விந்து மூலம் செயற்கைக் கருத்தரிப்புக்கு புகுந்த வீட்டார் முயன்றனர். இந்தக் கட்டத்தில் உமா அவர்களுடன் ஒத்துழைக்க மறுத்துவிட்டாள்.

அவள் கேட்பதெல்லாம் இதுதான். "நான் எனக்குப் பிடித்த அறிவாளியான அழகான ஆண் பிள்ளையைத் தேர்வு செய்து அவனுடன் படுக்கையைப் பகிர்ந்து கொண்டு குழந்தையைப் பெற்றால் அதை இவர்கள் ஒப்புக் கொள்வார்களா? 'கற்பு பறி போய் விட்டதே' என்று கூக்குரலிட்டு 'நடத்தை கெட்டவள்' என்று பழி சுமத்தி வீட்டை விட்டே விரட்ட மாட்டார்களா? சட்டம் கூட இந்த சந்தர்ப்பத்தில் பெண்ணுக்கு எதிராக விவாகரத்து தந்து விடும். முகம் தெரியாத இன்னொரு ஆணின் உயிரணுவை என் வயிற்றில் சுமந்தால் அப்பொழுது மாத்திரம் என் கற்பு பறிபோகவில்

லையா? இது என்ன நியாயம்? இதற்குச் சட்டம் என்ன கூறுகிறது?"

ஒரு குழந்தை உருவத்திற்கு, குணத்திற்கு தன் பெற்றோரைக் கொள்கிறது. இதைத்தான் ஜீன் என்கிறோம். இதற்கு சில துறைகளில் வல்லுனர்களாக இருக்கும் பெற்றோருக்கு பிறக்கும் பிறவிமேதைகளே சான்று.

நல்ல அறிவாளி, குணவான் இவர்களின் விந்துவைத்தான் உபயோகிப்பதாக கூறுகிறார்கள். இதற்கு என்ன உத்திரவாதம்? நம் எதிரிலா விந்து சேமிப்பு நடக்கிறது? இல்லையே. தானமளிப்பவர் ஒரு முறைக்கு 50முதல் 200 ரூபாய் வரை பெறுவதாகக் கூறுகிறார்கள். பண ஆசையால் உந்தப்பட்டு மருத்துவருக்கே தெரியாமல் பரிசோதனைச் சாலையில் வேலை செய்யும் ஆயாக்கள், வேலைக்காரர்கள் கூட தில்லுமுல்லு செய்யும் வாய்ப்பு இருக்கிறது. அவகள் சமூக விரோதிகளைக் கூட உபயோகித்துக் கொள்ளலாம். எல்லா விஷயங்களிலும் முறைகேடு நடப்பதுபோல் செழித்துவரும் இந்த வியாபாரத்திலும் முறை கேடு நடக்காது என்பது என்ன நிச்சயம்?

தானமளிப்பவருக்கு மிகப் பயங்கரமான நோயாகக் கருதப்படும் எய்ட்ஸ் இருக்காது என்று யாரால் உறுதியாகக் கூற முடியும்? "எய்ட்ஸ் நோயை உண்டாக்கும்' எச்-ஐ-வி (HIV) வைரஸ் கிருமிகள் புதிதாக எடுக்கப் படும் Semenல் கண்டுபிடிக்க முடியாது. முதலில் ஒரு முறை எச்.ஐ.வி. பரிசோதனை பண்ணியவுடன் Semenஐ லிக்விட் நைட்ரஜனில் -196 சென்டிகிரேடில் உறைய வைக்க வேண்டும். இந்த உறைந்த Semenல் 3 மாதங்களுக்குப் பிறகு எச்.ஐ.வி. வைரஸ் பரிசோதனை செய்யவேண்டும்'' என்று ஒரு மருத்துவர் கூறியுள்ளார். செயற்கை முறைக் கருத்தரிப்பு செய்கிறவர்கள் இந்த முறையைப் பின்பற்றுகிறார்களா? மேலும் பால்வினை நோய்களான சிபிலிஸ் போன்றவை தானமளிப்பவருக்கு ஒரு வேளை இருந்தால் விந்து தானம் பெறும் பெண்மணிக்கும் பிறக்கும் குழந்தைக்கும் கூட இந்த நோய்கள் வரும் வாய்ப்பு உண்டு.

"எதைத் தின்னால் பித்தம் தீரும் என்ற நிலையிலிருக்கும் என் கணவர், சமூகத்தில் தன் ஆண்மையை நிரூபித்து அந்தஸ்தை நிலைநாட்ட ஒரு குழந்தைக்கு ஆலாய்ப் பறக்கும் என் கணவர், நாளடைவில் மன நிலை மாறி இது எனக்குப் பிறந்த குழந்தை இல்லை என்ற எண்ணம் தோன்றி அதை வெறுத்தால் என்ன செய்வது? அந்தக் குழந்தையும் பிற்காலத்தில் தன் பிறப்பு ரகசியம் தெரிந்து தன் உண்மையான தகப்பன் யார் என்று தெரிந்து கொள்ள விரும்பாதா? அதன் மனநிலை எவ்வாறு இருக்கும்? தத்து எடுத்துக் கொள்ளும் குழந்தைக்கு சட்டப்படி தத்து எடுத்துக் கொண்டவர் தகப்பனாராகி விடுகிறார். பள்ளியில் கூட இம்மாதிரி பிறக்கும் குழந்தைக்கு எந்த தகப்பனாரின் பேரைத் தருவது?

இந்தப் பிரச்னைக்கு வேறொரு கோணமும் இருக்கிறது. விந்து தானம் செய்யும் ஒருவர் மாதத்தில் ஏழெட்டு தடவை செய்வதாகக் கூறுகிறார்கள். இதன் மூலமாய் நிறைய பெண்கள் கருத்தரித்து குழந்தை பெறக்கூடும். இம்மாதிரிக் குழந்தைளுக்குத் தாய் வெவ்வேறாக இருந்தாலும் தகப்பன் ஒன்றுதான். ஆகையால் அந்தக் குழந்தைகள் சகோதரி சகோதர முறையாகிறார்கள். ஆதலால் எதிர் காலத்தில் அவர்களுக்குத் தெரியாமலேயே ஒரு சகோதரன் தன் சகோதரியையே திருமணம் செய்து கொள்ளும் வாய்ப்பு இருக்கிறதே!"

உமா தன் மனக் குமுறலைக் கொட்டித் தீர்த்து விட்டாள். உமாவின் சந்தேகம், மனக் குமுறல் எல்லாம் நியாயம்தான் என்று எனக்குப் படுகிறது. வாசகர்களே உங்களுக்கு?

இந்த விஷயம் தொடர்பாக என் மனதை உறுத்தும் சில விஷயங்களையும் இங்கு எழுத ஆசைப்படுகிறேன்.

கணவனிடம் குறை இருந்தாலும் புகுந்த வீட்டினரை, கணவனை பகைத்துக் கொள்ள முடியாமல் மனைவிதான் குறையுள்ளவள் என்று பழி சுமக்க வேண்டி உள்ளது. பல காரணங்களால் பெண் குழந்தை என்றாலே வெறுக்கும் பெற்றோர் செயற்கை முறைக் கருத்தரிப்பு மூலம் ஆண் குழந்தைகளாகவே பெற்றுக் கொள்ளும் வாய்ப்பு இருக்கிறது. இந்த முறைக்கு பெண் சம்மதிக்காவிட்டால் கணவன் வீட்டார் படுத்தும்பாட்டில் அவள் மனநிலை கெட்டுப் போகிறது. அல்லது கணவனைப் பிரிந்து வாழ வேண்டி உள்ளது. உமாவின் நிலையும் இன்று இப்படித்தான்.

பெண் சுதந்திரம், பெண் விடுதலை என்று முழங்குகிறோமே. எப்படிப் பார்த்தாலும் அல்லலுறுவது பெண்கள்தான்.

— மீனாக்ஷி சங்கரன்

---

தினமும் காலை எழுந்ததும் வெறும் வயிற்றில் இரண்டு தம்ளர் குளிர்ந்த நீர் பருக வேண்டும். இது சுறுசுறுப்பையும் உற்சாகத்தையும் தரும். வயிறும் சுத்தமாகும்.

- விஜயலட்சுமி



# நீங்கள் நினைத்த கோர்ஸ் கிடைக்கவில்லையா?

கல்லூரிகளில் அட்மிஷன்கள் முடிந்து வகுப்புகள் ஆரம்பித்திருப்பார்கள். தாங்கள் விரும்பிய கோர்ஸிலேயே இடம் கிடைத்திருக்கும் சிலருக்கு. மற்றவர்கள்? அவர்களில் கணிசமானவர்களின் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல் இருக்கலாம். "நீ இப்போ நல்லாப் படிச்சு நிறைய மார்க் வாங்கினாத்தான் 'அந்த' கோர்ஸிலே சேர முடியும்" என்று அடிக்கடி பெற்றோரால் மூளைச்சலவை செய்யப்பட்டு, அப்படியே நல்ல மதிப்பெண்கள் வாங்கினாலும் பலத்த போட்டி மற்றும் நாட்டுச் சூழ்நிலை காரணமாக அந்தக் கோர்ஸில் இடம் கிடைக்காது போக, ஏதோ புத்தி பேதலித்தது போல் நடைப்பிணமாக நடமாடும் சில மாணவர்களும் - ஏன் அதே போல் உயிரற்ற வாழ்க்கை வாழும் அவர்களது பெற்றோர்களும் இருக்கிறார்கள். அவர்களுக்காகத்தான் இந்தக் கட்டுரை.

"வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் உங்களிடம் ஒரு கேள்வி. நீங்கள் மிக முயற்சிகள் எடுத்துக் கொண்டும் உங்களுக்குக் கிட்டாமல் போன அந்தக் கோர்ஸை நிஜமாகவே தொடர வேண்டுமென்று நீங்கள் விரும்பினீர்களா?".

இந்தக் கேள்வி உங்களுக்குக் கோபத்தைக் கூட ஏற்படுத்தியிருக்கலாம். ஆனால் பொறுமையோடு, திறந்த மனதோடு ஆராய வேண்டிய கேள்வி இது. குறிப்பிட்ட கோர்ஸில் சேர நீங்கள் ஏன் ஆர்வம் காட்டினீர்கள்? அந்தப் பாடத்தின் மீது கொண்ட பேரார்வமா? அல்லது அதற்குத்தான் வருங்காலம் (அதாவது சிறந்த வேலைவாய்ப்பு) என்ற எண்ணமா? உங்கள் பெற்றோர் அப்படி ஒரு குறுகிய பார்வையுடன் வளர்த்து விட்டார்களா? அல்லது உங்கள் நண்பர்கள் அந்தக் கோர்ஸில்தான் சேர்ந்திருக்கிறார்கள் என்ற செம்மறியாட்டுத் தனமா? இதை முதலில் தீர்மானித்துக் கொள்ளுங்கள். மேலும் தெளிவு பெற ஒரு சம்பவம்..

ஒரு பெண்மணி. அவருக்குச் சின்ன வயதிலிருந்தே நடனத்தில் பேரெடுக்க வேண்டுமென்று ஆசை. அருகிலிருந்த ஓர் ஆசிரியையிடம் நடனப் பயிற்சிக்கு அனுப்பினார்கள் அவளது பெற்றோர். ஆனால் அந்த ஆசிரியை (அவரது கணவரது வேலை மாற்றத்தைத் தொடர்ந்து) வேறு ஊருக்குச் சென்றுவிட, நடனப் பயிற்சி ஆரம்பக் கட்டத்திலேயே நின்றது. தனது நெடுநாள் ஏக்கத்தைப் பற்றி அவர் ஒரு சந்தர்ப்பத்தில் கூற, "நடனத்தில் உங்களுக்கு இவ்வளவு ஈடுபாடு ஏற்படக் காரணம் என்ன?" என்று ஆராய வேண்டியதாயிற்று. தன் சிறு வயதில் பார்த்த ஒரு நடன நிகழ்ச்சியைக் குறிப்பிட்டார் அவர். மேடையில் தோன்றி பார்வையாளர்களின் கவனத்தைக் கவர்ந்த அந்த நடனமணியின் நிகழ்ச்சிதான் அந்த ஈடுபாட்டுக்குக் காரணம் என்றார். மேலும் பேசிய போது சில முக்கிய விஷயங்கள் புலப்பட்டன. அந்தப் பெண்மணிக்கு நடனத்தில் உள்ள பற்றை விட, நடனமாடுபவருக்குக் கிடைக்கும் அங்கீகாரம், மேடையேற்றத்தில் கிடைக்கும் சுகம், தன் திறமையால் பார்வையாளர்களைக் கட்டிப் போட வைக்கும் ஜாலம் அவற்றில் தான் அதிக ஈடுபாடு என்பது புரிந்து போனது.

சிறுவர்கள் ஒவ்வொரு விடுமுறைக்கும் தன் அத்தை வீட்டுக்குப் போக விரும்புகிறார்கள் என்றால் அதற்குக் காரணம் அந்த அத்தையிடம் கொண்ட பாசமாகத்தான் இருக்க வேண்டுமென்று அவசியம் இல்லை. அத்தையின் வீட்டுக்கருகே அமைந்துள்ள அற்புதமான விளையாட்டுப் பூங்காவாகக் கூட இருக்கலாம்!

இதையெல்லாம் மனத்தில் கொண்டு உங்களுக்கு இப்போது அட்மிஷன் கிடைக்காத கோர்ஸை நீங்கள் தேர்ந்தெடுக்க உண்மையான காரணம் என்ன என்பதைத்

தீர்மானியுங்கள்.

'குறிப்பிட்ட சப்ஜெக்டில் கொண்ட காதல்தான்' என்பது உங்கள் பதிலா? நீங்கள் கவலைப்படவே வேண்டாமே. மிகப் பெரும் பான்மையான கோர்ஸ்களைப் பொறுத்த வரை மாற்றுவழிகள் உண்டே. எம்.ஸி.ஏ.வில் அட்மிஷன் கிடைக்கவில்லையென்றால் பல வேறு கம்ப்யூட்டர் கல்வி மையங்களில் சேர்ந்து பயன் பெறலாமே. எம்.பி.ஏ.வில் நுழைவு மறுக்கப்பட்டதா? திறந்தவெளிப் பல்கலைக்கழகமொன்றில் கூட கரெஸ்பாண் டென்ஸ் கோர்ஸாக அதைப் படிக்க முடியு மே. சட்டப் படிப்பா? பி.ஜி.எல்., எல்.எல்.பி. ஆகிய கோர்ஸ்களை வீட்டிலிருந்தபடியே கூடப் படிக்க முடியுமே. பி.இ. படிப்புக்கு மாற்றாகத்தான் ஏ.எம்.ஐ.ஈ. பல வருடங் களாக இருந்து வருகிறதே!

"மாற்று கோர்ஸ்களைத் தேர்ந்தெடுக்க லாம் தான். ஆனால் அவற்றுக்கு உரிய இணையான அங்கீகாரம் கிடைக்குமென்று என்ன நிச்சயம்?" என்று கேட்பீர்களானால் உங்கள் மனத்தில் வேலைவாய்ப்பைப் பற்றிய கவலை அழுத்தமாக விழுந்திருக்கிறது என்று பொருள். சில கடந்த கால உண்மைகளை உங்களுக்குச் சொல்ல வேண்டியிருக்கிறது.

அப்போது அதாவது சுமார் இருபது வரு டங்களுக்கு முன் என்ஜினியர் பதவிக்கான கவர்ச்சி ஏனோ திடீரென குறைந்தது. உரு வான என்ஜினியர்களுக்குப் போதிய வேலை வாய்ப்பு இல்லாத நிலை. எனவே புகுமுக வகுப்பில் (அன்றைய ப்ளஸ் டூ) முதல் பிரிவுக் கான - அதாவது என்ஜினியரிங் சேரத் தேவையான கணிதப் பாடம் அடங்கிய பிரி வுக்கான - மவுசு குறைந்தது. மூன்றாம் பிரி வை (வணிகம், சரித்திரம் ஆகியவை கொண் டது) விருப்பத்தோடு நாடியவர்கள் குறைவு தான்.

இந்த நிலையில் முக்கிய வங்கிகள் தேசி யமயமானதுடன், நிறையக் கிளைகளைத் திறந்தன. பட்டதாரிகளில் பி.காம். படித்த வர்களுக்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை தந்தன வங்கிகள். 'பி.ஏ., பி.எஸ்ஸி. யை விட பி.காம். ஒரு படி கீழேதான்' என்றிருந்த மாயை நீங்கி, பி.காம். கோர்ஸுக்கும், அதற்கு முன் தேற வேண்டிய புகுமுக வகுப்பின் மூன்றாம் பிரிவுக்கும் டிமாண்ட் அதி கரித்தது.

பிறகு என்ஜினியர்களின் வாழ்க்கைத் தரம் (புது வித தொழில் நுட்ப முன்னேற்றங் களால்) மேலெழும்பியது. சிவில் என்ஜினி யரிங்கே சிறந்தது என்றிருந்த நிலைமை போய் எலெக்ட்ரிகல் மற்றும் மெக்கானிகல் பிரிவுகளுக்கு 'கௌரவம்' அதிகரித்தது. நாள டைவில் இவற்றின் கவர்ச்சியை மீறியது கம்ப்யூட்டர் மற்றும் எலெக்ட்ரானிக்ஸ் துறைகள். வருங்காலமே இந்தத் துறை களுக்குத்தான் என்று வேறு ஒரு பேச்சு.

"சே! ஹோட்டல் வேலைக்கு ஒரு மேற் படிப்பா?" என்று அலட்சியம் செய்யப்பட்ட ஹோட்டல் மேனேஜ்மெண்ட் கோர்ஸுக்கு இப்போது திடீர் வரவேற்பு - வேலை வாய்ப்பு காரணம்.

இப்படி எந்தப் படிப்புக்கு எப்படிப்பட்ட அங்கீகாரம், வேலைவாய்ப்பு ஐந்து-பத்து வரு டங்களுக்குப் பிறகு உண்டு என்பதை நிச்சய மாகப் பட்டியலிட முடியாத நிலைதான் இன்று. இதற்கு நடுவே வருங்காலத்தில் பல புதிய கோர்ஸுகளும் தேவைக்கேற்ப அறி முகமாகலாம். அவற்றில் நீங்கள் சேரலாம்.

இந்த நிலையில் 'வேலைவாய்ப்பை இழந்து விட்டோமே' என்ற ஒரே நோக்கில் அட்மிஷன் கிடைக்காத கோர்ஸை எண்ணி மாய்ந்து போகாமல், 'நெக்ஸ்ட் பெஸ்ட்' எனக் கருதப்படும் கோர்ஸில் சேருவதுதான் புத்திசாலித்தனம்.

இவை தவிர, நம்மை மீறிய ஒரு சக்தி உண்டு. அந்தத் தெய்வீக சக்தி நம் வாழ்க் கைப் பாதையை நாம் எதிர்பாராத விதத்தில் மாற்றியமைப்பது நமக்கு நன்மை விளை விப்பதற்காகக் கூட இருக்கலாம்.

சமீபத்தில் செய்திகளில் இடம் பெற்றவர் லதா என்ற கால்நடை மருத்துவக் கல்லூரி மாணவி. இறுதித் தேர்வில் உச்சகட்ட மதிப் பெண்கள் பெற்று ஆறேழு மெடல்களை 'அறுவடை' செய்திருந்தார். இப்போது ஆராய்ச்சி மேற்படிப்பில் மூழ்கியிருக்கும் அவர், தனது பள்ளி நாட்களில் கண்ட 'வருங்காலக் கனவு' கால்நடை மருத்துவம் அல்லவாம்.

நடனமணியாக இருந்த சுதாசந்திரன் நாடறிந்தவரானது விபத்துக்குப்பின் (செயற் கைக் காலோடு மேடையேறிய போது) தானே.

காலில் லேசான பாதிப்பு ஏற்பட அத னால் தான் ஆடிக் கொண்டிருந்த வாலிபால் விளையாட்டைத் தொடர்ந்து பயிற்சி செய்ய முடியவில்லை அனு ராஜுவால். மனதைத் தேற்றிக் கொண்டு கேரம் விளையாட்டில் கவனம் செலுத்த, 'உலக சாம்பியன்' பட்டத் தையே அதில் அடைய முடிந்தது அவரால்.

எனவே நீங்கள் விரும்பிய கோர்ஸில் சேர முடியாததற்காக இடிந்து போக வேண் டாம். அதுவும் நன்மைக்கே என எடுத்துக் கொண்டு புத்துணர்ச்சியோடு கிடைத்த பாதையில் முழு முயற்சியுடன் அடியெடுத்து வையுங்கள். வெற்றிக்கு வாழ்த்துக்கள்.

**- ராம் ஷேகர்**

வழிகளைக் கடைபிடிக்க வேண்டும்...

– இதெல்லாம் திருநாகேஸ்வரத்தில் கிரிகுஜாம்பாள் சந்நிதி முன்னின்று அவள் அழகை, அருளை பார்த்துப் பிரமித்து நின்ற போது ஏற்பட்ட சிந்தனைகள். ஆனந்தலஹரியில் மிதந்தோம் நாங்கள்!

• கிரிகுஜாம்பாள்


• இராகு



# உள்ளம் உருகும் அன்பு படைத்தனை!

**மஞ்சுளா ரமேஷ்**

மனிதனை நிம்மதியாக வாழவைக்க பெரும் பணம், வசதிகள், ஆடம்பரங்களால் முடிவதில்லை. மன அமைதி– உள்ளேயிருந்து வருகின்ற ஆத்ம அமைதியால்தான் அது முடியும். ஆத்ம அமைதியை, மனநிம்மதியைத் தருவது ஆன்மீகம் மட்டுமே. உள்ளிருந்து ஜோதியாக வருகின்ற ஆத்மாநுபவம் மனிதனை முழுமையடையச் செய்கிறது. அதை அடைந்து விட்டவனுக்குப் பொன்னையும் பொருளையும் அடைவது பெரிய கஷ்டமில்லை.

அதனால்தான் நம் முன்னோர்கள் 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்றார்கள். கோயில்கள் நம் மனதை ஆத்மாவைச் சுத்திகரிக்கும் கருவியாக அமைந்து இருந்தன. போன காலங்கள் போகட்டும். இப்போது நிறைய நாமெல்லாம் உணர ஆரம்பித்து விட்டோம். நம் மனதை உயர்த்திக் கொள்ள இந்த உயர்ந்த

கும்பகோணத்திலிருந்து ஆறு கிலோ மீட்டர் தொலைவில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஒப்பிலியப்பன், அந்த உப்பிலியப்பன் கோவிலுக்கு அருகில் உள்ளது திருநாகேஸ்வரம். இராகு மங்களராகுவாக இங்கு குடி கொண்டு இருக்கிறான். நவக்கிரகங்களில் எட்டாவது நாயகனாகிய இவனைக் காணச் சென்ற போதுதான் அந்த அற்புத வடிவம் கிரிகுஜாம்பிகையைக் கண்டோம்.

பிருகுமுனிவர் மகாசிவ பக்தன். சிவனையன்றி மற்றவரைக் கண்ணாலும் காணாதவர். அப்படிப்பட்டவர் அம்மையை மதிப்பாரோ? சிவபார்வதியாக அமர்ந்திருந்தவர்களில் சிவனை மட்டும் வலம் வந்து வணங்கிச் சென்றாராம், பார்வதிக்குக் கோபமான கோபம்! 'நான் இங்கே ஒருத்தி இருப்பதையே மதிக்காமல் அப்படி என்ன உம்மை மட்டும் வணங்கிச் செல்வது?' என்று கோபப்பட்டாளாம். சிவன் நமட்டுச் சிரிப்பு சிரித்தாராம். 'நானென்ன செய்ய, என் பக்தன் அப்படி!' என்றாராம்.

'ஓஹோ அப்படியா சங்கதி, நான் தனித்து இருந்தால் தானே இந்த பாரபட்சம்' என சண்பகவனமாகிய இந்த ஊருக்கு வந்து தவக்கோலம் கொண்டாள்.

சரஸ்வதியும், லட்சுமியும் அம்மையின் கடுந்தவம் கண்டு அவளுக்குப் பணிவிடை செய்யலாயினர். தேவியின் தவம் கண்டு மெச்சிய சிவன், அவள் கேட்டபடியே தன் இடப்பக்கத்திலே அம்மைக்கு இடம்கொடுத்து உமையொருபாகனாக 'அர்த்தநாரீ'யாக மாறினார். அப்பேர்ப்பட்ட திருத்தலமே 'கிரிகன்னிகாவனம்' எனச் சொல்லப்பட்ட இந்தத் திருநாகேஸ்வரம். இங்கு அம்மை சுயம்பு. இருபுறமும் கலைவாணியும், அலைமகளும் சேவை செய்த கோலத்தில் காட்சி அளிக்கின்றனர். முத்தேவியரையும் மெய்சிலிர்க்க வணங்குகிறோம்.

இந்த அம்மையை வணங்கித் தைலக்காப்பிட்டுத்தான் சாபவிமோசனம் பெற்றான் ஆயிரங்கண் சாபம் பெற்ற இந்திரன். அதனால் ஒவ்வொரு வருடமும் தை முதல் நாள் இங்கு தைலக் காப்புத் திரு

• இராகு - உற்சவர்



• பாலாபிஷேகம் சமயம் கூடியிருக்கும் பக்தர் கூட்டம்

விழா நடைபெறுகிறது. இந்தக் கிரிகுஜாம்பாள் இன்றும் பல குடும்பங்களுக்கும் குல தெய்வமாக இருந்து அருள்பாலித்து வருகிறாளாம்.

விண்ணவர்கோன் வணங்கிய அன்னையை நாமும் வழிபட்டு நாகேஸ்வரர் கோயிலையும் பார்க்கிறோம். நாகநாதரை வேண்டி சாபவிமோசனம் பெற்ற இராகு இங்கு தன் இரு மனைவியரும் இடவலம் இருக்க 'மங்களராகு'வாகக் காட்சி அளிக்கிறார். இராகு சிறந்த சிவபக்தன். மற்ற கிரகங்கள் ஒவ்வொரு இடத்தில் சாபவிமோசனம் பெற்று அந்தந்தத் திருத்தலத்தில் அருள்பாலிப்பது போல இங்கு திருநாகேஸ்வரத்தில் இராகு வரும் பக்தர்களுக்கு வேண்டிய வரம் அருளுகிறார்.

இராகுவிற்கும் கேதுவிற்கும் தனி இடங்கள் ஜோதிடக் கட்டத்திலே இல்லை. அவர்கள் இருவரும் எந்தக் கிரகங்களுடன் சேர்ந்து விளங்குகிறார்களோ அவர்களின் முழுப் பலன்களையும் அளிக்கிறார்கள். அதனால்தான் இவர்களை 'நிழல் கிரகங்கள்' என்பார்கள்.

நவக்கிரகங்களிலே சனியை விட செவ்வாயும், செவ்வாயை விட புதனும், புதனை விட குருவும், குருவை விட சுக்கிரனும், சுக்கிரனை விட சந்திரனும், சந்திரனை விட சூரியனும் இவர்கள் அனைவரையும் விட இராகுவும், கேதுவும் பலம் பொருந்தி விளங்குகின்றனர். சந்திர சூரியரையும் பலம் இழக்கும்படி, ஒளிகுன்றும்படிச் செய்ய இவர்களுக்கு ஆற்றல் உண்டு.



யோகத்திற்கு அதிபதி இராகு. ஒருவர் ஜாதகத்தில் இராகு நல்ல நிலையில் இருந்து விட்டால் அவர்களை அரசனைப் போல உயர்த்தி விடுவானாம் இராகு. நல்ல குடும்பம், ஆட்சி, செல்வாக்கு, அன்னிய மொழிகளில்

**(அடுத்து வரும் பக்கங்களில் சனிபகவான், இராகுவின் வண்ணப்படங்கள்)**

தோர்ச்சி என இவற்றைத் தருபவன் இராகு. மருந்து. இரசாயனம், நூதன தொழில் நுட்பக் கருவிகள் போன்றவற்றிற்கும், அவ் வப்போது மாறிவரும் நவநாகரீகத்திற்கும் ராகுவுடன் இணைந்த சுக்ரனே காரணமாகி றார்.

ஆனால் இராகு தோஷமுடையவர்கள் மிகக் கடுமையான பலன்களைச் சந்திக்க வேண்டியவர்களாகிறார்கள் என்கிறார்கள். விவாஹ தாமதம், (களத்திர தோஷம்) புத்திர தோஷம் இவற்றிற்கும் இவனே காரணமாகி றான்.

அனைத்துவித நன்மைகளை அருளும் சிறந்த சிவபக்தனாகிய இராகு இராமேஸ் வரம், காளஹஸ்தி, திருக்காளர் போன்ற இடங்களிலே சிறந்து விளங்கினாலும் திருநாகேஸ்வரத்தில் மட்டுமே நாகவல்லி, நாககன்னி எனும் தன் இரு தேவியருடன் மங்களராகுவாகக் காட்சியளிக்கிறார். இது குறிப்பாக 'பரிகாரக்ஷேத்ரம்'. படைக்கலன் கள் எதுவுமின்றி சாந்த சொரூபியாக வரு கின்ற பக்தர்களுக்கு அருள்பாலிப்பவனாக இராகு இங்கு விளங்குகின்றான். 'ஒப்பாரும் மிக்காரும் இன்றி' அருள்பாலிப்பவனாக இவன் விளங்குவதை இங்கு கூடுகின்ற கூட் டத்தைப் பார்க்கும்போதே தெரிகிறது. ஞாயிற் றுக்கிழமை மாலை ராகு கால வேளைகளில் பாலாபிஷேகம் இடைவிடாமல் நடந்து கொண்டே இருக்கிறது. ஐநூறு ஐநூறு பேராக குழுக்களாகப் பிரித்துப் பாலபிஷே கம் செய்கின்ற அளவிற்குக் கூட்டம் கூடு கிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

இராகுபகவானின் மேலே விழுகின்ற பாலெல்லாம் நீலநிறமாக வழிந்தோடுவதைப் பார்க்க முடிகிறது. அண்டாக்களில் பாலை நிரப்பி அபிஷேகம் செய்து அவனைக் குளிர் வித்துக் கொண்டே இருக்கிறார்கள். பக்கத் திலே இராகுபகவானை தேவியருடன் உற்சவமூர்த்திகளாக அலங்கரித்தும் வைத்து இருக்கிறார்கள். பாலபிஷேகத்தைக் கண்ணா ரக் கண்டு மகிழ்ந்த பக்தர்கள் உற்சவ மூர்த்திகளுக்குப் பூஜை செய்து கற்பூரம் ஒற்றி மனமகிழ்ச்சியோடு செல்கிறார்கள்.

இராகுபகவானின் கோயிலில் பரிகாரம் பெற்றவர்கள் பலர் என்பதை அவர்களின் சம்பவங்கள் சொல்கின்றன. ஆனால் அந்த நாகமே இராகுவின் மகிமையை நிறைய சொல்வதைப் போல தன் சட்டையை உரித்து மூலவரின் சிலைக்கு மாலையாக அணிவித்துப் போனதும் உண்டு. அடிக்கடி இராகுவின் மேல் பாம்பின் தோலுரித்த சட்டை காணப்பட்டாலும் மூன்று ஆண்டு களுக்கு முன் இராகு கழுத்தில் மாலை போல பாம்புச் சட்டை கிடந்ததை பல செய்திப் பத்திரிகைகளும் அப்போது வெளி யிட்டிருந்தன.

திருநாகேஸ்வரக் கோயிலில் இப்படிச் சகலருக்கும் நன்மை பயக்கும்படி இராகு பகவான் அமர்ந்திருக்க அவன் பூஜித்த நாக நாதனே கோயிலினுள் மூலவராக அமர்ந் திருக்கிறார். இத் திருத்தலத்தில் பெருமா னுக்கு இரு வடிவங்களும் அம்மைக்கு இரு வடிவங்களும் உள்ளன. சண்பக மரத்தடியில் அமைந்த நாகநாதர் சந்நிதியும், அர்த்தநாரீச வரர் சந்நிதியும் பிறையணிவாணுதல் உமை சந்நிதியும், கிரிகுஜாம்பிகை சந்நிதியும் அவை ஆகும்.

செண்பக விநாயகர் முதல் அனைத்துப் பரிவாரத் தெய்வங்களும் இங்கே பாங்குற அமைந்து அருள்பாலிக்கின்றனர். மிகத் தொன்மையான இத் திருக்கோயிலில் நாம் முன்னமேயே பார்த்தது போல இராகுவும் இந்திரனும் வழிபட்டு சாபவிமோசனம் பெற்றது மட்டுமில்லை. இன்னும் பல்வேறு முனிவர்களும், பெரியவர்களும் இங்கு அருள்பெற்றதாகத் தல வரலாறு கூறுகிறது. ஏன், உமையம்மையே இங்கு தவம் செய்து சிவனின் வாமபாகத்தையே அல்லவா பெற் றாள். சரித்திரத்திலே சேக்கிழார் திருவடி ஞானம் பெற்ற தலமாக விளங்குகிறது. இத் தலத்தின் மேல் நீங்காத காதல் கொண்டவ ராக சேக்கிழார் விளங்கினார் என்கிறார்கள். சான்றாக சேக்கிழார், அவருடைய தாயார், உடன்பிறந்த பாலறாவாயர் ஆகியோரு டைய சிலாரூபம் காட்சியளிக்கிறது.

இப்படி எல்லா வகையிலும் மேன்மை யுற்று விளங்கும் திருநாகேஸ்வரக் கோயிலை வலம் வந்து முடித்த போது மனதிலே அமைதி பரவியிருந்தது. ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கும் அந்த அனுபவத் திற்கு ஈடுவேறேதும் உண்டோ?

படங்கள் : ராஜூநாராயண்

---

நவராத்திரிக்கு எல்லோரும், மஞ்சள் பொடி, குங்குமம் வைத்துக் கொடுப்பார்கள். எல்லாமே தரமான தாக இருக்காது. அவற்றைத் தனியாகச் சேர்த்து வைத்து ஆரத்தி கரைக்க, வாசல்படிக்கு இட உபயோகிக்கலாம்.

— ஆர். பார்வதி





# பார்க் டவுன்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806

223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-3 போன்: 582676, 564354

**கிளை அலுவலகங்கள்:** 2 கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை-41 போன் 413582, 416417

P-995, இரண்டாவது அவென்யு, 12-வது மெயின்ரோடு ஜங்ஷன், அண்ணாநகர், சென்னை-40 போன் 6262656, 6280750



### பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு * |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

### குழந்தைகள் கல்வி நலத்திட்டம்

L.K.G. முதல் கல்லூரி தொடக்கம் வரை

வைப்புத் தொகை ரூ. 5,100/-

3-ஆம் ஆண்டு நிறைவிலிருந்து தொடர்ந்து 12 ஆண்டுகள் ரூ.500/- பெறலாம். திட்ட டெபாசிட் காலத்திலிருந்து 16, 17-வது ஆண்டுகளில் தலா ரூ.1,000/- வீதமும், 18-ம் ஆண்டு துவக்கத்தில் ரூ.75,000/-ம் வழங்கப்படும்.

நலத்திட்டத்தின் 5% மாணவர்களுக்கு +2 அரசுத் தேர்வு மதிப்பெண் அடிப்படையில் ரூ.25,000/- பரிசாக ஒவ்வொருவருக்கும் நிதி நிறுவனம் வழங்கும்.

திட்டத்தின்பயனை உங்கள் மழலைச் செல்வங்களுக்கு வழங்கி மன நிம்மதி பெறுவீர்! மகிழ்ச்சி அடைவீர்!!

### கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/- முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில் ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

### காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |

### வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ.3450/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.2 லட்சம் பெறுவீர்.

**சேமிப்பு திட்டம் 10% P.a.**

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | | Rs.1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதாமாதம் ரூ.100/- | 25 Yrs | Rs.3,00,000 |

### மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |



**பென்ஷனர் நலத்திட்டம் 20% P.a.**
குறைந்தபட்சம் 10 ஆயிரமும் அதற்கு மேலும்: காலம் 1 ஆண்டு
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**தங்க நகை கடன்**
Rs. 3,000 PER 10 GRAM
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)

ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன், B.Com.**

☐ ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ☐ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ☐ வெள்ளி விடுமுறை



# உங்கள் பணம், உங்களுக்கு இலவசம்!

இதுபோல் சலுகை எவருமே அளித்ததில்லை - பட்டர்ஃப்ளை உள்பட! நம்ப முடியவில்லையா? ஆனால் இது உண்மைதான். ஆம், இன்றே மிகமிகக் குறைவான இரைச்சலுடன் இயங்கும் பட்டர்ஃப்ளை மிக்ஸர் கிரைண்டர் வாங்கிடுங்கள். அத்துடன் ஒரு 900 ml பட்டர்ஃப்ளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிளாஸ்க் (மதிப்பு ரூ.780/- அதிகபட்ச விலை) இலவசமாக பெற்றிடுங்கள். இது ஒரு அரிய வாய்ப்பு அல்லவா?

**சிறப்பு அம்சங்கள் :** • ஹெவி டியூட்டி மோட்டார் - இடைவிடாது ஒரு மணி நேரம் ஓடக் கூடியது • ஹை-டென்ஷன் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிளேடுகள் - அதிகக் கூர்மையானவை • விசேஷ கிரேடு நைலான் கப்ளர்கள் - சிறந்த பிடிப்புக்கு • சஸ்பெண்ட் செய்யப்பட்ட மோட்டார்-பெட் - அதிர்வுகளே இருக்காது • மைக்ரோ-பாலன்ஸ்டு ரோட்டார் - மிகக் குறைவான இரைச்சலுடன் இயங்கும் • ஓவர் லோடு தானாகவே கட்-ஆப் ஆகும் வசதி • உறுதியான (24 கேஜ்) ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜாடிகள் • வேக்குவம் ரப்பர் கால்கள் - மிகச் சிறந்த பிடிப்புக்கு

**பட்டர்ஃப்ளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் வேக்குவம் பிளாஸ்க்**

• எளிதில் உடையாதது • அதிக அளவில் வேக்குவமைஸ்டு செய்யப்பட்டது • சுத்தமானது

**முந்துங்கள்; இச்சலுகை குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே!**

**இலவச சலுகை ரூ. 780/- மிச்சப்படுத்துங்கள்**

**பட்டர்ஃப்ளை மிக்ஸர் கிரைண்டர்**





# மூலப்பொருளில் முழு முதற்கடவுள்!

சென்றமுறை நவராத்திரியின் போது ஒரு தோழியின் வீட்டில் கொலுவில்- ஒருபடி நிறைய விதவிதமான விநாயகர் பொம்மைகள். அவைகளைப் பார்த்த உடன் 'எத்தனை விதமான விநாயகர்கள்? அதுவும் அத்தனையும் வெண்கலச் சிலைகள்? எத்தனை விலையாகியிருக்கும்!' என வியந்தபடியே- பார்த்தோம்.

அவள் சிரித்தபடியே "நீயே அதை எடுத்துப்பாரேன்" என்றபடியே ஒரு விநாயகர் பொம்மையை எடுத்துத்தர– 'இதென்ன இவ்வளவு லேசாக? வெண்கலச் சிலை இல்லையா இது?'- யோசிக்கும் போதே அவள், "இது தெர்மோகோலில் செய்தது. எங்களுக்குத் தெரிந்த மாமி ஒருவர் இப்படிச் செய்கிறார்" என்றவள் அடுத்த நாளே நம்மை அந்த மாமியிடம் அழைத்துச் சென்று அறிமுகம் செய்தாள்.

விதவிதமாக- மனத்தில் தோன்றும் வண்ணம் பல சிலைகளை தெர்மோகோலில் வடிப்பதைப் பொழுது போக்காகக் கொண்ட பட்டம்மாள் கிருஷ்ணமூர்த்தி அவர்களிடம் இதுபற்றிக் கேட்டபோது-

"20 வருடங்களுக்கு முன்பு இதுபோலச் செய்யத் தொடங்கினேன். என்பிள்ளைகள் அனைவருமே கலையில் நாட்டம் கொண்டவர்கள். இதுபோல அழகிய கை வினைப் பொருட்கள் செய்வது, வரைவது, பெயின்டிங், பென்சில் டிராயிங் என ஒவ்வொருவரும் ஒரு கலையில்

ஈடுபாடு கொண்டவர்கள். அவர்களைப் பார்த்துக் கொண்டிருந்ததனால் என் கற்பனைத் திறன் வளர்ந்தது என்று கூடச் சொல்லாம்.

என் பெரிய பிள்ளை 'பேக்கேஜ்' தொழிலில் இருப்பதால் எங்களின் மூலப் பொருளே தெர்மோகோல்தான். வீட்டு வேலை முடித்து விட்டு உட்கார்ந்த நேரம் அப்படி ஒரு துண்டு தெர்மோகோலை கையில் எடுத்து சீவ ஆரம்பித்தேன்-செய்கிறேன்.

அருகம்புல் சித்தரிடம் சில ஆண்டுகளுக்கு முன்பு பெற்ற உபதேசம் கணபதியிடம் எனக்கிருந்த ஈடுபாட்டை அதிகமாக்கியது. 'மோல்ட்' செய்தும் சில பிள்ளையார்களை உருவாக்குகிறேன். பிள்ளையார் தவிர பாம்பு உருவங்களும், பலவித லிங்கங்களையும் உருவாக்குகிறேன். இவைகளை உருவாக்கியபின்பு இதன் மீது 'பொன் நிற' வண்ணம் பூசுவதால் இவைகள்



பிள்ளையாராக உருவெடுத்தது அது. பிறகு நேரம் கிடைக்கும் போதெல்லாம் இதையே தொடர்ந்தேன். அவயங்களைத் தனித்தனியாக செய்து வைத்துக் கொண்டு பின்பு அவைகளை ஒட்டிச் சேர்ப்பேன். வாரத்திற்கு இப்படி 3,4 பிள்ளையார்கள் உருவாகிவிடுவர். இவைகளை உருவாக்க நான் சாஸ்திரம்-சாமுத்திரிகா லட்சணம் பார்ப்பதில்லை. மஞ்சளிலும்-மண்ணிலும் வைத்தாலே ஓடிவந்து அருள் புரிபவராயிற்றே கணபதி! அதனால்தான் அவரைச் உலோகச்சிலைகளோ என்ற எண்ணத்தைத் தருகிறது. புகழ், சம்பாத்தியம்-இரண்டுமே என் நோக்கமல்ல.

ஒருமுறை அபூர்வமாக 'நரசிம்மஸ்வாமி'யை உருவாக்கினேன். அதைச் சிற்பி ஜெகன்நாதன் கண்டு வியந்தார். என் இந்த ஆர்வத்துக்குக் கை கொடுத்து ஊக்குவிப்பவர் என் கணவர்தான்" என்னும் பட்டம்மாள் கிருஷ்ணமூர்த்தி சமீபத்தில் கொள்ளுப் பேரன் எடுத்தவர்.

பேட்டி: **வைதேகி தேசிகன்**

# சரவணா ஸ்டோர்ஸ்

## உயர்தரமான தங்க நகைகள்
## வெள்ளி பாத்திரங்களுக்கு

# செய்கூலி இல்லை



15.10.95
வரை

பட்டுப்புடவைகளுக்கு
10% தள்ளுபடி

ஜவுளிகள்

ரெடிமேட் ஆடைகள்

பாத்திரங்கள்

**சரவணா ஸ்டோர்ஸ்**

ரெங்கநாதன் தெரு,
தி. நகர், சென்னை 600 017.

[illegible] விற்பனை உண்டு.

L.H.Swami P/P

# புடவைக்கு எதிர்காலம் உண்டா?







"ஆச்சு, நவராத்திரியில் இருந்து எங்களுடைய 'பண்டிகை சீசன்' ஆரம்பித்து விடும். தீபாவளிக்குத் துணிமணிகள் எடுக்க விரும்புபவர்கள் இந்த மாதத்தில் இருந்தே ஷாப்பிங் ஆரம்பித்து விடுவார்கள்" என்கிறார் தன்னை 'கடுமையான உழைப்பாளி' என மற்றவர்கள் சொல்வதையே பெருமையாக நினைக்கும் பி.சி.ஜெயராமன். "ஐந்துமாடி குமரன் ஸ்டோர்ஸ்' உரிமையாளர், இவ்வளவு பெரிய தொழில் ராஜ்யத்தை நிறுவி இருக்கிறார் என்றெல்லாம் சொன்னால் எனக்கு அவ்வளவு சந்தோஷம் வருவதில்லை. என்னை யாராவது 'இவர்

ஒரு கடும் உழைப்பாளி' என்று சொன்னால் பெரிய அவார்டு கொடுத்தது போல" என்கிறார்.

நவராத்திரி, தீபாவளிக்கு சேர்த்து இந்த வருடம் என்ன புதுமையான புடவைகள் வந்திருக்கு என ரவுண்டு அடிக்க குமரன் ஸ்டோர்ஸிற்குள் போனபோதுதான் எத்தனை வண்ணங்கள், துணிவகைகள்!

"முன்பெல்லாம் பட்டுப்புடவை, காட்டன் புடவை, மைசூர் சில்க் என இருந்தது. இப்போது நிறைய 'மிக்ஸட்' வெரைட்டிகள் வந்து விட்டன. பாலியஸ்டர்+காட்டன், காட்டன்+பட்டு என மாற்றி மாற்றி ஒவ்வொன்றின் காம்பினேஷனுக்குத் தகுந்தார் போல புடவையின் தன்மை மாறுபடும். 'கார்போனைஸ்ட் காட்டன்' உள்ளது. ஓரிழை, ஈரிழை என இல்லாமல் மூன்று இழை தரமான பருத்தி இழையை முறுக்கும்போது 'சில்க்' போன்ற தன்மை கிடைக்கிறது. இப்படித் தயாரிக்கப்படும் காட்டன் புடவைகள் பட்டுபோல 'ஷைனிங்' காக இருக்கும். விலையும் ஆயிரத்தைத் தொடும்! ஆனால் அப்படிப்பட்ட தரமான புடவைகள் வாங்குவதற்கென்றே பெண்மணிகள் இருக்கிறார்கள்" என்கிறார் அவருடைய நான்கு மகன்களில் ஒருவரான ஜனார்த்தனம்.





சரி, இந்த வருடம் புடவைகளில் என்ன புதுமை

"வல்கலம் சாரீஸ்தான் இந்த வருடப் புதுமை. வல்கலம் என்பது ஒரு ஊர்ப் பெயர். அங்கு தயாரிக்கப்பட்ட டிசைன் என்பதால் அதையே பெயராக வைத்து விட்டோம். இது முதலில் பட்டுப் புடவைகளில்தான் வந்தது. இப்போது காட்டன் புடவைகளிலும் கொண்டு வந்திருக்கிறோம்" என்று அவற்றைக் காண்பித்தார் ரவி.

புடவைகளில் புட்டா என்பது வட்டமாக சதுரமாக பூவாக இப்படி இருக்கும். ஆனால் இதில் இருந்த டிசைன்கள் வித்தியாசமாக அழகாக இருந்தன. மாடத்தில் இருக்கின்ற ஜன்னல் அமைப்புப் போல, நடன பெண்மணி போல... வித்தியாசமானவை. அதே போல் பார்டரும், முந்தானையும் கூட வித்தியாசமான டிசைன்களில். வல்கலம் நிச்சயம் வாடிக்கையாளரின் மனதைக் கவரும்'

"புடவை வியாபாரமே



**பிரதானமாக வைத்திருக்கிறீர்களே. நவீன உடைகள் நிறைய அணிய ஆரம்பித்து இருக்கிறார்கள். புடவைக்கு எதிர்காலம் உண்டு என நினைக்கிறீர்களா?"**

"நிச்சயமாக உண்டு" என்று அடித்துச் சொல்கிறார் ஜனார்த்தனம். "அதற்கு எங்களுடைய வியாபாரமே சாட்சி. ஒவ்வொரு வருடமும் புடவை விற்பனை ஏறிக் கொண்டே தான் போகிறது. சென்ற வருடம் அதற்கு முந்தைய ஆண்டை விட 27% விற்பனை அதிகமாகி இருந்தது. தென்னாட்டில் புடவை வியாபாரத்தைப் பற்றிக் கவலைப்பட வேண்டியதே இல்லை. நம்முடைய பெண்கள் புடவைகளை ஒரு போதும் மறக்க மாட்டார்கள்" என்கிறார் இவர்.

ஐந்து மாடிகளிலும் தளத்திற்கு ஒருவராக தந்தை பி.சி. ஜெயராமன், மகன்கள், எதிராஜ், ஜனார்த்தனன், ரவி, சேகர் என பொறுப்பேற்று 'பர்சனலாக' கவனித்துக் கொள்கிறார்கள்.

"எந்த வியாபாரமுமே உரிமையாளர்களின் நேரிடையான கவனிப்பு இருந்தால்தான் வளரும். அதே போல தரமும் மிகமிக முக்கியமானது. நாங்கள் முதல்தரம், அதற்கு அடுத்து என்று இரண்டு நிலைகளில்தான் துணிகளை வைத்திருப்போம். மூன்று, நான்காம் தரங்களில் இருப்பவைகளை எல்லாம் வைத்துக் கொள்வதேயில்லை" என்கிறார்கள்.

**நாற்பதாண்டுகளாக புடவை வியாபாரத்தில் இருக்கும் இவர்கள் சமுதாய மாற்றத்தை எப்படி உணருகிறார்கள்?**

"அப்போதெல்லாம் ஒவ்வொரு கஸ்டமரையும் வாங்




ம்மா சௌக்கியமா என வரவேற்று அவர்கள் மச்சின் பெண்ணிற்கு ஆன திருமணத்தைப் பற்றியெல்லாம் விசாரிக்க வேண்டும் என எதிர்ப்பார்ப்பார்கள். அவர்களோடு நிறைய நேரம் பேச வேண்டும். இப்போது அப்படி இல்லை. "வாங்கம்மா சௌக்கியந்தானே, என்ன மாதிரி புடவை வேணும்" எனக் கேட்டு நேரே தேவையான புடவை கவுண்டட்டருக்கு அனுப்பி விடுவோம். அதற்கு மேல் பேச அவர்களுக்கு நேரமிருப்பதில்லை" என்கிறார் ஜெயராமன் சிரித்துக் கொண்டே.

இந்த ஆண்டு விழா சீசன் ஆரம்பித்து விட்டதை இவர்கள் கடையில் இப்போதே குவியும் கும்பலில் இருந்தே தெரிந்து கொள்ள முடிகிறது. நிறைய வெரைட்டிகள், நிறைய வண்ணங்கள் 'டெஸர் சில்க்' எனப்படும் புடவைகள் 800 லிருந்து 2000 வரை விலையில். இப்படி ரகம்ரகமாக இந்தியா முழுக்கவிருந்து வந்து குவிந்து கிடக்கிறது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு பளபளப்பைக் காட்டுகிறது.

"நாங்கள் இந்த வருடம் அறிமுகப்படுத்தும் 'வல்கலம்' புடவைகள் சொன்னேனே. இதனுடைய தனித்தன்மையான டிசைன்கள்தான் இதனுடைய சிறப்பே. வேறு ஏதாவது புடவையைக் காட்டி இதுதான் வல்கலம் என யாரும் சொல்லி விடக் கூடாது என்பதற்காகவே புடவை முந்தானையிலேயே வல்கலம் என நெய்யச் சொல்லி விட்டேன்" என்கிறார் ஜனார்த்தனம்.

கண்ணைப் பறிக்கும் புடவைக் கூட்டத்தில் இருந்து வெளியே வர யாருக்கு மனசு வரும்?

**-லீனா**

படங்கள்: **சுரேஷ்.**

படங்களில்: **ஜெயந்தி.**

# புற்று நோயும் குணமாகிறது

## தொடரும் சாதனைகள்...

* சென்னை கோட்டூர்புரம் Water Tank Colony-ஐ சேர்ந்த ஒரு பெண்ணுக்கு (வயது 31) 7 ஆண்டுக்கு முன் Thyroid சுரப்பியின் ஒரு பகுதி புற்றுநோய் பாதிப்பினால் அகற்றப்பட்டது. ஆனால் பின்னர் 2 அக்குள் பகுதியின் Auxiliary Glands-க்கு புற்று பரவி (Secondaries) கல் போல வீங்கிய நிலையில் 15-4-95 எமது சிகிச்சையை மேற்கொண்டார். இப்போது Glands வீக்கம் கரைந்து விட்டது. * கடலூர் அப்பாவு பண்டாரம் தெருவை சேர்ந்த ஒரு பெண் (வயது 41) மார்பகத்தில் கட்டி வந்து புற்று நோய் சிகிச்சைக்கு சிபாரிசு செய்யப்பட்டார். 18-4-95 எமது சிகிச்சை தொடங்கி இப்போது பெரும்பகுதி கட்டி கரைந்து குணம் பெற்று வருகிறார்.

பலவகையான புற்று நோய்களுக்கும் சிறப்பு சிகிச்சை உண்டு. 20 நாளிலேயே வாட்டி வதைக்கும் குத்தல்-வலி நின்று விடுவது எமது சிகிச்சையில் சிறப்பு!

## கருப்பை புண் – கட்டி – வீக்கம் –
## 30, 40 நாட்கள் நிற்காத இரத்தப்போக்கு

ஆபரேஷன் வேண்டாம், மூலிகை மருந்தில் சுகம் பெறுங்கள். 37 வயதை நெருங்கும் பல பெண்களும், மாதவிடாய் ஓய்வு (Menopause) காலத்திலும் மிக அதிகமாக துன்பப்படுவது, கருப்பை புண்-கட்டி, மற்றும் 30-40 நாட்கள் கூட நிற்காத அதிக இரத்தப் போக்கினால்தான். இதற்காக அவசரப்பட்டு ஆபரேஷன் தேவையில்லை. அதன் பின்விளைவுகளையும் தவிர்க்கலாம். கருப்பையை அகற்றாமல் மூலிகை மருந்தினால் முழுசுகம் பெற முடியும். அதிகமாக கொட்டுகின்ற இரத்தப்போக்கு நின்று, இடுப்பு, கால், கை, மூட்டு வலிகள் தீரும். கருப்பை வீக்கமும் (Bulky Uterus) சுருங்கி போய்விடுகிறது. மாதவிடாய் கருப்பாய்- கட்டி கட்டியாக வெளியாவதும் 15-20 நாளிலேயே மீண்டும் வரும் கோளாறுகளும் தீரும்.

**ஆபரேஷன் இன்றி** Appendicitis, Tonsilytis, Hydrocele, Kidney Urinary Stones மருந்தினால் சுகம் பெறலாம். * திருச்சி (துறையூர்) கிராம்பூரைச் சேர்ந்த முதியவர் திரு. V.K. ஆதிமூல ரெட்டியார் (75 வயது) Prostrate சுரப்பி வீங்கி மூத்திரம் அடைத்து 7 வருடம் மகாவேதனை அனுபவித்தவர். மகிமை மிக்க எமது குருமருந்தினால் ஆபரேஷன் இன்றி சுகம் பெற்று உள்ளார். இது ஒரு மகத்தான சாதனை என்பது அறுவை மருத்துவர்களுக்குத்தான் தெரியும்.

# குழந்தை இல்லையா? (INFERTILITY)

குழந்தை இல்லாத பெண்களுக்கு கருப்பை வளர்ச்சி இன்மை, முட்டை உருவாகாமை, மாதவிலக்கு கோளாறுகள், கருக்குழாய் அடைப்பு, வெள்ளை ஒழுக்கு, கருப்பை வீக்கம், அடிக்கடி கருக்கலைவு, (Cystic Ovaries, Hypoplastic Uterus, Fibroid, Bulky Uterus, Hyperplasia, Fallopian Tube Block, Cervicitis Endometriosis) போன்ற ஏதேனும் ஒரு கோளாறு இருக்கும். இதற்கு தனித்தனி சிறப்பு மருந்துகளால் சிகிச்சை அளிக்கிறோம். இப்படியின்றி ஏதோ ஒரு பொதுவான மருந்தை சாப்பிடுவதால் பலனில்லை. எமது சிகிச்சையால் பலனடைந்தோர் பலநூறுபேர். ஆண் உயிரணு குறைபாடு: உயிரணு இல்லாத (Azoospermia) / குறைவான ஆண்களுக்கு (வயது 35 வரை) தனி சிகிச்சை உண்டு. சிகிச்சையின் பலனை சோதனை மூலம் அறிந்து கொள்ளலாம்.



**Dr. S. JEYARAM,** M.A., M.A., Praveen, HIMP, RMP

சித்த மருத்துவ ஆராய்ச்சி கட்டுரையாளர், பேச்சாளர், 3000-க்கு மேற்பட்ட ஓலைச் சுவடிகளை (தமிழ், தெலுங்கு, மலையாளம்) ஆராய்ந்தவர். CANCER மற்றும் தீராத நோய்களுக்கு மருத்துவம் பற்றி T.V.-ல் உரை நிகழ்த்தியவர்

## NAVODHYA SIDDHA MEDICAL RESEARCH CENTRE & HOSPITAL

அலமேலுமங்காபுரம் 21/2, III-வது தெரு, மயிலாப்பூர் (குளம்) சென்னை – 4. (சாயிபாபா கோவில் பின்புறம்) போன் : 4940662.

ப்ளாட் எண். 6, (கதவு எண்.15) ராமகிருஷ்ணா நகர் விரிவு, வளசரவாக்கம், சென்னை – 87.

ஆலோசனை நேரம் : காலை 10 முதல் 1 மணி வரை, மாலை 5 முதல் 8 மணி வரை, ஞாயிறு காலை மட்டும்.

| (ALL SPECIALITIES UNDER ONE ROOF) | CONSULTATION BY APPOINTMENTS ONLY |
| --- | --- |

இன்றைய நவீன பெண்கள் உபயோகிக்கும் சானிடரி நாப்கின்கள் அனைத்தும் பன்னாட்டு நிறுவனங்கள் தயாரிப்பவை. உலகத் தரத்திற்கு இப்போது நாமும் வியாபாரத்தை உயர்த்த முயற்சி செய்து வருகிறோம். அந்த வகையில் ஒரு தமிழ்ப்பெண்மணி இந்தத் துறையில் நுழைந்திருக்கிறார் என்றால் மகிழ்ச்சியான செய்திதானே!

# கிராமப் பெண்களிடையே விழிப்புணர்வு வேண்டும்!



**வெ**ளிநாட்டுக் கம்பெனிகள் போல தமிழகத்திலும் இப்போது ஒரு சிலர் சானிட்டரி நாப்கின்கள் தயாரிப்பதும் ஈடுபட்டுள்ளனர். அவர்களில் 'த்ரீடேஸ்' என்ற பெயரில் புதிதாக சானிட்டரி நாப்கின்களை, சுத்தமான பருத்தியைக் கொண்டு தயாரிக்கிறார் இராஜபாளையத்தைச் சேர்ந்த பெண் (மகப்பேறு) மருத்துவரான டாக்டர் திருமதி. சுபா சார்லஸ். இப்படி பருத்தியில் சானிட்டரி நாப்கின்கள் தயாரிக்க முன் வந்ததற்கான காரணம் பற்றி அவரிடம் கேட்டதற்கு:

"இப்போது விற்பனையாகும் பன்னாட்டு நிறுவனத் தயாரிப்புகளான சானிட்டரி நாப்கின்கள் அனைத்தும் நமது நாட்டு தட்பவெட்ப நிலையை வைத்துத் தயாரிக்கப் படுவதில்லை. சில வகைகள் பாலியெஸ்டரிலான நெய்யப்படாத துணிகளைக் கொண்டு (Non- Woven Fabric) தயாரிக்கப் படுகின்றன.

இந்த நெய்யப்படாத செயற்கைத் துணி குளிர் நாடுகளுக்கு ஒத்துக் கொள்வதாக இருக்கலாம். ஆனால் இது பல இந்தியப் பெண்களுக்கு, குறிப்பாக கிராமப்புற சீதோஷ்ண நிலைக்கு ஒத்துக் கொள்வதில்லை. பாலியெஸ்டர் துணியாக இருப்பதால் பல பெண்களுக்கு அலர்ஜி, புண் உண்டாவதுடன் உடல் சூட்டையும் அதிகரிக்கச் செய்கிறது.

இதே போல் சில நாப்கின்கள் பேப்பர் பல்ப் கொண்டு தயாரிக்கப்படுகின்றன. இவை சமயத்தில் கிழிந்து போக வாய்ப்புண்டு. இதனால் வேலைக்குப் போகும் பெண்கள், வீட்டில் சில கடுமையான



வேலைகளில் ஈடுபடும் பெண்கள் எப்போதும் ஒரு பாதுகாப்பில்லாத நிலையை உணர்கிறார்கள்.

இத்தகைய பெண்களின் பிரச்னைகளை கருத்தில் கொண்டு நமது நாட்டின் பருவ நிலைக்கு ஏற்ற வகையில் சானிட்டரி நாப்கின்களை தயாரிக்க வேண்டும் என்ற எண்ணம் கடந்த ஒரு வருட காலமாகவே



இருந்து வந்தது. காரணம் என்னிடம் வரும் நோயாளிகளில் சிலர் நாப்கின்களால் பாதிக்கப்பட்டவர்களாக இருந்தார்கள்.

பிரசவ நேரத்தின் போதும், கருக்கலைப்பு மற்ற சமயங்களிலும் ஒரு டாக்டர், பிரசவித்த பெண்ணின் உடம்பிலிருந்து வெளியேறும் உதிரத்தை உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும். இதை 'லோகியா' என்பார்கள். உதிரப்போக்கின் அளவு, நிறம், கட்டிகள் முதலியவை கவனிக்கப்பட வேண்டும். பருத்தியிலான காட்டன் நாப்கின் உபயோகிக்கும்போது உதிரப்போக்கின் தன்மையை எளிதாக அறிய முடிகிறது.

எனவே இதையெல்லாம் மனத்தில் கொண்டு கடந்த மே மாதம் முதல் நூறு சதவிகித பருத்தியைக் கொண்டு 'த்ரீ டேஸ்' என்ற பெயரில் சானிட்டரி நாப்கின்களை தயாரிக்க ஆரம்பித்தேன். அறுவை சிகிச்சையின் பொழுது பயன்படுத்தும் உயர்ரக சர்ஜிகல் காட்டன் மற்றும் சர்ஜிகல் காஸ் (gauze) கொண்டு 'த்ரீடேஸ்' நாப்கின்களை தயாரிக்கிறோம்.

'த்ரீடேஸ்' நாப்கின்களில் உள்ளே உள்ள சர்ஜிகல் காட்டனை எளிதாக வெளியில் எடுத்து 'ஃப்ளஷ்' (flush) செய்து விடலாம். இதற்காக அதில் ஒரு ஓப்பனிங் உள்ளது. வெளிப்புறம் உள்ள காஸை(gauze) சிறிதாக ரோல் செய்து ஃப்ளஷ் செய்யலாம்.

தற்போதுள்ள நாப்கின் அனைத்தும் எலாஸ்டிக் பெல்ட் கொண்டே பயன்படுத்த முடியும். ஆனால் எலாஸ்டிக் பெல்ட்டுகள் எளிதில் தளர்ந்து விடுவதோடு, கடுமையான

வேலைகளின் போது பிய்ந்து விடும் அபாயமும் உள்ளது.

இதே போல பெல்ட்லெஸ் நாப்கின்கள் பயன்படுத்தும் போது கண்டிப்பாக பேன்டீஸ் என்ற உள்ளாடை அணிய வேண்டும். ஆனால் வயதான பெண்கள், ஏழை மற்றும் கிராமப்புற பெண்கள் பொதுவாக பேன்டீஸ் கூட அணிய விரும்புவதில்லை.

இதைக் கருத்தில் கொண்டே 'த்ரீடேஸ்' சானிட்டரி நாப்கின்களை பாவாடை நாடாவைக் கொண்டு பயன்படுத்தும் வகையில் தயாரித்துள்ளோம். எதனால் என்றால் நமது பெண்கள் சிறு வயது முதலே பாவாடை நாடா பயன்படுத்துபவர்களாகவே இருக்கிறார்கள்.

நமது நாட்டில் பல பெண்கள் சானிட்டரி நாப்கின்களை இன்றளவும் பயன்படுத்தாத காரணங்களில் ஒன்று தெளிவின்மை, மற்றொன்று விலை.

இத்தகைய பெண்களுக்கு உடல் சுகாதாரம் பற்றியும், சானிட்டரி நாப்கின்களின் பயன்பாடு பற்றியும் கண்டிப்பாக தெரிய வைக்க வேண்டும். எனவேதான் நாங்கள் எல்லா பெண்களிடமும் முதலில் இலவசமாக ஒரு பாக்கெட் நாப்கினை கொடுத்து அதன் பலன்களை நேரடியாக விளக்கிச் சொல்கிறோம்.

நான் ஒரு மகப்பேறு மருத்துவர் என்பதால் நம் நாட்டுப் பெண்களின் பிரச்னைகளையும், தேவைகளையும் நன்றாகப் புரிந்து கொள்ள முடியும். இதன் அடிப்படையில் நடைமுறை ரீதியில் ஆராய்ச்சி செய்து உருவாக்கப்பட்டிருக்கும் இந்த நாப்கின்கள் பெண்களிடையே பெரும் வரவேற்பைப் பெறும் என்று நம்புகிறேன்.

எல்லா தரப்புப் பெண்களும், ஷாம்புவை ஒரு ரூபாய்க்கு வாங்கிப் பயன்படுத்துவது போல் நாப்கின்களையும் பயன்படுத்த வேண்டும். இதற்காக ஒன்றரை ரூபாய்க்கு நாப்கின்களைத் தயாரித்து வழங்க வேண்டும் என்பதற்காக முனைப்போடு செயல்பட்டு வருகிறேன். தற்போது எங்களது மேலுறைகளுக்கான மூலப்பொருளை வெளியிலிருந்து தான் வாங்குகிறோம். விரைவில் அத்தகைய பொருட்களை நாங்களே தயாரிக்கும் வகையில் இயந்திரங்களை வரவழைத்திருக்கிறோம். இதன் உற்பத்தி விரைவில் தொடங்கவிருக்கிறது. அயல்நாடுகளிலும் இப்போது காட்டன் உறைகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. அதனால் எங்களது தயாரிப்புகளை ஏற்றுமதி செய்யும் வழி கிடைக்கும் என்று நம்புகிறேன்.

இப்போது எங்களிடம் 20 பெண்கள் வேலை செய்கிறார்கள். நாளடைவில் ஏற்றுமதி பிரிவு தொடங்கும்போது பல மடங்கு வேலை வாய்ப்பு பெருகும்.

'த்ரீடேஸ் சானிட்டரி நாப்கினை' வாங்க விரும்பும் பெண்கள் ஷில்பா காட்டன் புராடக்ஸ், கம்ப்யூட்டர் கார்னர், கரந்தி சிலை மன்றம் ரோடு, இராஜபாளையம்-626117 என்ற முகவரிக்கு எழுதலாம் என்றார்.

சுபாவின் கணவர் சார்லஸ் சார்டர்ட் அக்கவுண்டண்டாக இருக்கிறார். தனது மனைவியின் புதிய தயாரிப்புகளுக்குத் தேவையான முதலீடு, வர்த்தக யோசனைகள் என்று பல வழிகளிலும் உதவி வருகிறாராம்.

— அருள்மொழி ராமகிருஷ்ணன்

ஆடியோ கேசட் பயன்படுத்தாமல் பழசாகி இருந்தால் தூரபோடாதீர்கள். அதன் மீது கலர் வெல்வெட் பேப்பர் வைத்து சுற்றிலும் ஒட்டி விடுங்கள். அதேப் போல் காலியான ஊசி மருந்து பாட்டில்(அ) காலியான சாந்துபாட்டில் மீது கிப்ட் பேப்பர்(அ) வெல்வெட் பேப்பர் ஒட்டி அதன் மீது ஆடியோ கேசட்டை நிறுத்தி ஒட்டவும். இப்பொழுது உங்கள் பொம்மை கொலுவுக்கு அழகான மேஜை தயார்.

—ஆர்.பாலா



இப்பொழுது உலகத்தரம் வாய்ந்த
ஒவ்வொரு பட்டர்ஃப்ளை
ஸ்டாண்டர்டு
பிரஷர் குக்கருடன்

அதற்கு
இணையான
பட்டர்ஃப்ளை
**பிரஷர் பான்***
# இலவசம்!




ஒன்றின் விலையில் இரண்டு பட்டர்ஃப்ளை சாதனங்களைப் பெற இதோ ஒரு வாய்ப்பு.

பட்டர்ஃப்ளை பிரஷர் குக்கர் கனமான தகடு, வலுவான கட்டமைப்பு, எளிதாய்ப் பயன்படுத்த இணையற்ற கைப்பிடி என இதன் ஒவ்வொரு பாகமும் நீண்ட ஆராய்ச்சியின் வடிவமைப்பு.

இந்த வாய்ப்பு பட்டர்ஃப்ளை ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் காப்பர் பாட்டம் மற்றும் ஸ்டாண்டர்டு பிரஷர் குக்கர்கள் ஆகிய இரண்டுக்கும் (7.5, 10 மற்றும் 12 லிட்டர்களுக்கு மட்டும்).

இவ்வாய்ப்பு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே.

* மூடியில்லாமல்






**பட்டர்ஃப்ளை**

**ஒன்றின்
விலையில்
இரண்டு**

இவ்வாய்ப்பு தமிழ்நாடு, ஆந்திர பிரதேசம் மற்றும் கர்நாடக மாநிலங்களுக்கு மட்டுமே.

ASP/M/GA/2092/95

# அவசரப்படாதீர்கள்

இப்பொழுது 'ஸ்டேட்ஸி'ல் மேற் படிப்பிற்காகச் சென்று, அங்கேயே வேலை செய்யும் பையன்கள், 15 நாட்கள் 'மாத லீவில்' வருவதாகவும், அதற்குள் திருமணம் செய்ய வேண்டும் என்றும், விளம்பரங்கள் வருவது சகஜமாகிவிட்டது. பெண்ணைப் பெற்றவர்களும் 'ஸ்டேட்ஸில்' வேலை செய்வதால் நல்ல வருமானம், நம் பெண் நன்றாக இருப்பாள் என்பதால் எதுவும் விசாரிக்காமல் அவசரமாக திருமணம் செய்து கொடுத்து விடுகிறார்கள். சமீபத்தில் எனக்குத் தெரிந்த இரண்டு குடும்பத்தில் பிரச்னை கிளம்பியுள்ளது.

ஒரு குடும்பத்தில் 'ஸ்டேட்ஸி'லிருந்து அம்மாவும், பிள்ளையும் வந்து, பெண் பார்த்து பிடித்து, அவசரமாக திருமணம் செய்து, 'ஸ்டேட்ஸு'க்கு' அழைத்துச் சென்றார்கள். அங்கு சென்றபின் அவள் கணவருக்கு வேறு ஒருத்தியுடன் இருக்கும் தொடர்பு தெரிந்து கேட்டபோது, அம்மாவும் பிள்ளையுமாக சேர்ந்து அடித்து வெளியில் துரத்தி விட்டார்கள். படித்த பெண் ஆதலால், பெற்றோர்களுடன் தொடர்பு கொண்டு விஷயம் சொல்ல, அவர்களும் பறந்து சென்று, அந்தப் பிள்ளையின் மேல் வழக்குத் தொடுத்துள்ளனர். பெண் படித்த வளானதாலும், பெற்றோர்கள் வசதியாக இருந்ததாலும் எதிர்த்து நிற்க முடிந்தது. இல்லையெனில் அந்தப் பெண் எங்கு சொல்வாள்?

மற்றொரு குடும்பத்தில், தன் அண்ணியைப் பற்றி, சகோதரனிடம் இல்லாததைச் சொல்லி கோள்மூட்ட, அவன் தன் மனைவியைக் கொடுமை படுத்தும் நிலைமை ஆயிற்று. ராமேஸ்வரம் போனாலும் சனீஸ்வரன் விடாது என்பது போல், மாமியார், நாத்தனார் கொடுமை ஸ்டேட்ஸிலும் தொடருகிறது என்பது தெரிகிறது.



வெளிநாடுகளில் உள்ள பையனுக்குத் தங்கள் பெண்ணைத் திருமணம் செய்ய நினைக்கும் பெற்றோர்கள், விளம்பரங்களைக் கண்டு, அவசரப்படாமல், தெரிந்தவர்கள் மூலம், நன்கு விசாரித்த பின்னே திருமணம் செய்வது நல்லது. தொழிற் கல்வி பட்டதாரிகளான பெண்களும், 'ஸ்டேட்ஸ்' வரன் கிடைத்தால், நாமும் மேற் கொண்டு படிக்க சௌகரியமாக இருக்குமே என்று அவசரப்பட்டு திருமணம் செய்து கொள்ள வேண்டாம். ஆசைப்படு வதில் தவறில்லை. ஆனால் அவசரப் பட்டு படுகுழியில் விழ வேண்டாம்.

— உஷா கோபால்

"ஓய்வு பெற்ற பிறகு எனது உழைத்து சம்பாதித்த பணத்தை பல்வேறு திட்டங்களில் முதலீடு செய்தேன்.

*ஆனால் அந்த பணத்திற்கு உயர்ந்த மதிப்பை தரக்கூடிய திட்டம் ஏதேனும் உள்ளதா ?"*

# பென்ஷனர்ஸ்
## பெருமைமிகு
## தி·ட்·ட·ம்



ஆம். ஓய்வு பெற்ற அல்லது அதற்கென திட்டமிடும் உங்களைப் போன்றவர்களுக்காகவேயென பல்வேறு சிறப்பம்சங்கள் நிறைந்த திட்டம். ஆயின் எவ்வகையில் இத்திட்டம் உங்களது பணத்திற்கு அதிகபட்ச மதிப்பை பெற்றுத் தருகிறது ? இனி நீங்களே அறிந்து கொள்ளுங்கள்.

டெபாசிட் செய்யப்பட்ட ஒவ்வொரு ரூ. 10,000/- தொகைக்கும் (குறைந்த பட்சம் 3 வருடங்கள்) வருடத்திற்கு 24 சதவிகிதமென வட்டி கணக்கிடப்பட்டு டெபாசிட் செய்யப்பட்ட காலம் முழுவதிற்குமான வட்டித் தொகை முன் தேதியிட்ட மாதாந்திர காசோலைகளாகப் பெற்றிடுங்கள். மேலும் டெபாசிட் காலம் முழுவதும் வருடத்திற்கு ஒரு முறை ஒரு சதவிகிதம் சிறப்பு ஊக்கத் தொகை உங்களுக்கு அளிக்கப்படும். அதுமட்டுமின்றி மூன்றாவது வருட முடிவில் மூலதனத் தொகையில் 25 சதவிகிதம் ஊக்கத்தொகையாக பெறுவதற்கான வாய்ப்பு

இவை மட்டுமா. .

ஆம். . . இன்னும் உண்டு. உதாரணமாக இத்திட்டத்தின் கீழ் டெபாசிட் செய்த ஒரு நபர் துரதிஷ்டவசமாக டெபாசிட் முதிர்வடைவதற்கு முன்பாகவே இறக்க நேரிடின் நடைபெறுவது என்ன ? அவரது நெருங்கிய உறவினரோ அல்லது வாரிசுதாரரோ டெபாசிட் கால முதிர்வின் போது சாதாரணமாக 25 சதவிகிதத்திற்கு பதிலாக சிறப்பாக 50 சதவிகித ஊக்கத் தொகையினைப் பெற்றிட வழியுண்டு.

மொத்தத்தில் ஈஸ்வரியின் பென்ஷனர்களின் பெருமை மிகு திட்டம் உங்களது தேவைகளை மற்றவர்களைக் காட்டிலும் சிறப்பாக புரிந்துக் கொண்டுள்ளது.

உங்களுக்காகவேயென அமைந்த அருமையான திட்டமாக இது உங்களுக்கு தோன்றுகிறதல்லவா ?

மேற்கொண்டு விவரங்களுக்கு நேரிலோ அல்லது தொலைபேசி மூலமோ தொடர்பு கொள்ளுங்கள். பிறகு பணத்திற்கான அதிக மதிப்பைக் கண்டுணர்ந்திடுங்கள்.




**ஈஸ்வரி ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**

தலைமை & நிர்வாக அலுவலகம் : 4, எல்டாம்ஸ் சாலை, முதல் மாடி, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018. தொ.பே: 455349, 459557, 457583. கிளை அலுவலகம்: பாரிமுனை தொ.பே: 560767, தி. நகர் தொ.பே: 8259661, புரசைவாக்கம் தொ.பே: 5324937, 5324940, குரோம்பேட்டை தொ.பே: 405845, திருவல்லிக்கேணி தொ.பே: 841187, நங்கநல்லூர் தொ.பே: 2345891, சாலிக்கிராமம் தொ.பே: 428650, பாண்டிச்சேரி தொ.பே: 31830.

எல்லா ஞாயிறு அன்றும் அலுவலகம் இயங்கும்.

உ ங் க ள் வ ள ர் ச் சி ஈ ஸ் வ ரி யு ட ன் வ ள ர ட் டு ம் .

LOTUS/95

# திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன என்றால், அதைப் புனிதப்படுத்த இங்கே மந்திரங்கள் எதற்கு?

ஆவணி, மண விழாக்களுக்கு மங்களகரமான மாதம். இரண்டு மனங்கள் இனிதே இணைய, மூன்று முடிச்சுகளைப் போடும் காலம். பழக்க வழக்கங்கள், மந்திர முழக்கங்கள், சம்பிரதாயங்கள்... இவை எல்லாம் தவறான நம்பிக்கைகள் என்றும், காலத்தை வீணாக்குபவை என்றும் ஒரு சிலர் இன்று எண்ணுகிறார்கள். ஆனால் இவை எல்லாவற்றிற்குமே, பகுத்தறிவுக்குப் பொருந்தக் கூடிய காரணங்கள் இருக்கலாம் என்பதை எப்போதாவது சிந்தித்துப் பார்த்திருக்கிறீர்களா? உள்ளத்தின் உணர்ச்சிகளை வெளிப்படுத்த, காரண – காரியத் தொடர்பு கொண்ட ஓர் ஆக்கச் செயலாகவே ஒரு சம்பிரதாயம் தொடங்குகிறது. பகலில் பூஜையில் உள்ளத்தின் இருளை அகற்ற விளக்கை ஏற்றுவது போல... மேலும் மேலும் பலர் மீண்டும் மீண்டும் இத்தகைய செயல்களைத் தலைமுறை தலைமுறையாய்ச் செய்து வரும்போது, அவையாவும் பழக்க வழக்கங்களாகவும், பின்னர் சம்பிரதாயமாகவும் ஆகிவிடுகின்றன. உண்மையில் நம் திருமண சம்பிரதாயங்கள் எல்லாமே, உள்ளத்தின் உயர்வான உணர்ச்சிகளை, அருமையான நோக்கங்களை மிகச் சிறப்பாகக் குறிக்கின்றன. இதில் வருத்தம் தரும் விஷயம் என்னவென்றால், இவை யாவும் இன்று பொருள் புரியாமலும், காரணம் தெரியாமலும் செய்யப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, நுழைவாயிலில் முழு வாழை மரங்களை வைப்பது எதற்காக என்பது நம்மில் எத்தனை பேருக்குத் தெரியும்? மாவிலைத் தோரணங்கள், நாதஸ்வரத்திலே மங்கள இசை, வாசலிலே மாக்கோலம், பன்னீர் தெளிப்பது, சந்தனம் மற்றும் கல்கண்டு வழங்குவது, ஜானவாசம் இவை எல்லாம் எதற்காக? திருமணத்திற்கு முன்பு கணபதி பூஜை, நவக்கிரக பூஜை விரதம், காசி யாத்திரை இவை எல்லாம் ஏன் செய்யப்படுகின்றன? மாப்பிள்ளைக்குக் குடையும் காலணியும் கொடுப்பது எதற்காக? நிச்சயதார்த்தம், மாலை மாற்றிக் கொள்ளுதல், லாலி பாட ஊஞ்சல் ஆடுதல், பாலிகை தெளிப்பது, வர பூஜை, பொன்னாலான மங்கள சூத்திரத்துடன் செய்யப்படும் கன்னிகாதானம், மணப் பெண்ணுக்குக் கூறைப் புடவை அளித்தல், கங்கண தாரணம், மங்கள இசை ஒலிக்கத் திருமாங்கல்ய தாரணம் இவைகளின் தாத்பர்யம்தான் என்ன? பாணிக் கிரகணம், சப்தபதி, பிரதான ஹோமம், அம்மி மிதிப்பது, அருந்ததி பார்ப்பது, பொரியிடுதல் (லாஜ ஹோமம்), அட்சதை போட்டு ஆசிர்வதிப்பது, கிருகப் பிரவேசம், நலங்கு, ஞபனித ஹோமம், மங்கள ஆரத்தி, சாந்தி முகூர்த்தம், இன்னும் எத்தனையோ... இவற்றை எல்லாம் செய்வது எதற்காக? இத்தகைய சம்பிரதாயங்கள் எல்லாம் அவரவர் வழக்கப்படிப் பலப்பல வேறுபாடுகளுடன் செய்யப்படுகின்றன. எனினும், இவற்றின் மையக்கருத்து சிறிதும் மாறாமல் ஒன்றாகவே இருந்து வருகிறது. மதிப்பு மிக்க நம் பாரம்பரியத்தின் சிறப்புகள், மகத்தான பழக்க வழக்கங்கள் மற்றும் சம்பிரதாயங்களால், ஹார்வெஸ்ட் அமைப்பில் எங்களுக்கு வியப்பும் ஊக்கமும் உண்டாகிறது. அவற்றைப் போற்றிப் பாதுகாக்க, எங்கள் பங்காக ஒரு சிறு முயற்சியை மேற்கொண்டதில் நாங்கள் மிகவும் பெருமை கொள்கிறோம். திருமண சம்பிரதாயங்கள் பற்றிய **சிறு வெளியீடு** ஒன்றை நாங்கள் தயாரித்திருக்கிறோம். திருமண சம்பிரதாயங்களின் அருமை பெருமைகளை நீங்கள் தெரிந்து கொள்ள விரும்பினால் எங்களுக்கு எழுதுங்கள். அதை நாங்கள் உங்களுக்கு **இலவசமாக** அனுப்பி வைக்கிறோம்.






புதுமை எண்ணங்கள் கொண்ட நிதி

**தி. நகர் :** 19, வியாசர் தெரு, (வடக்கு உஸ்மான் ரோடு அருகில்), சென்னை – 600 017. போன் : 8253597, 8281192.

**கிளைகள் : அண்ணா நகர் :** ரூம் நெ. 4, முதல் மாடி, V.S.D. பிளாசா, AA1, 2ஆவது அவன்யூ (ரவுண்ட் டானா அருகில்), சென்னை – 600 040. **திருவான்மியூர்:** B-11, கீழ்த்தளம் (ஹாட் சிப்ஸ் அருகில்), S.D.B. பிளாசா, திருவள்ளுவர் சாலை, சென்னை – 600 041. **ஆழ்வார்பேட்டை :** ரூம் நெ. 6, முதல் மாடி, மூகாம்பிகா காம்ப்ளக்ஸ், 4, லேடி தேசிகா ரோடு சி.பி.ராமசாமி ரோடு), சென்னை – 600 004 போன் 4991552, 4992231, 4991056 **ஜார்ஜ் டவுன்:** 41, செம்புதாஸ் தெரு (முதல் மாடி) சென்னை – 600 001 போன் 5227891. **கோயம்புத்தூர் :** 95-F, இரண்டாவது மாடி, "பிரசாத் சேம்பர்ஸ்", கிழக்கு ஆரோக்கிய சாமி சாலை, R.S. புரம், கோயம்புத்தூர் – 641 002 **பம்பாய் :** 24A, 2ஆவது மாடி, மோகல் பில்டிங், 285, ஷாஹித் பகத் சிங் ரோடு (S.B.S. மார்க்), ஃபோர்ட், பம்பாய் – 400 001. போன் 2656965, 2656970. **பெங்களூர் :** ABC பில்டிங், முதல் மாடி, 134, 11ஆவது கிராஸ், மல்லேஸ்வரம், பெங்களூர் – 560 003. **செகந்தராபாத் :** 161&162 முதல் மாடி, செனாய் டிரேட் சென்டர் (ஹோட்டல் ஹெரிடேஜுக்கு மேல்) பார்க் லேன், செகந்தராபாத் – 500 003.

**அண்ணா நகர், திருவான்மியூர் மற்றும் தி.நகர் அலுவலகங்களில் ஞாயிறன்றும் அலுவல் நடைபெறும்.**
**வேலை நேரம் 9.00 a.m. முதல் 12.30 p.m. வரை.**

இந்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு நிதி நிறுவனம். ஸ்தாபிதம் 1967 'எங்கள் சேவை உறுப்பினர்களுக்கு மட்டுமே.

insight - 1007

சக்தியின் உபாசனைதான் நவராத்திரி. இன்றைய தினம் நம் நாட்டில் பெண்களின் எழுச்சி மறுக்க முடியாதது. 10 லிருந்து 5 என்ற உத்தியோகங்களைத் தாண்டி வியாபாரம், தொழில் எனும் உலகில் பல பெண்கள் வெற்றிகரமாக முன்னேறி வருகிறார்கள். அவர்களில் ஒருவர்தான் முல்லை சுப்பையா. 'ரியல் எஸ்டேட்' உலகில் இவருடைய பணி குறிப்பிடத்தக்கது. அவருடன் பேசிய போது -

"நான் இந்தத் துறைக்கு வந்ததே எதிர்பாராதது என்றுதான் சொல்ல வேண்டும். எனக்கு முதலில் இருந்தே யாருக்குக் கீழும் வேலை செய்ய விருப்பமில்லை. எனவே ஒரு பள்ளி ஆரம்பிக்க வேண்டும் என்ற நோக்கில் அதற்கான தகுதிகளை வளர்த்துக் கொள்ள விரும்பினேன். பி.எட்., எம்.எட் எல்லாம் முடித்து விட்டேன். அதற்குப் பிறகுதான் 'ரியல் எஸ்டேட்'டில் இறங்க வேண்டிய சந்தர்ப்பம் வாய்த்தது.

என் அண்ணன் நடேசன் (அனுபவ் குரூப் நிறுவனங்களின் தலைவர்) மற்றும் நானும்தான் பள்ளி தொடங்க திட்டமிட்டோம். ஆனால் என்னவோ தெரியவில்லை எத்தனையோ முயற்சித்தும் கூடிவரவில்லை. அதே சமயம் கட்டிடப் பணிகள் சில எங்களிடம் வந்தன. ஏன் இந்த பின்னலிலேயே இறங்கக் கூடாது என தொடங்கினோம். அப்படித் தோன்றியதுதான் 'அனுபவ் ஹோம்ஸ்' லிமிடெட். இன்றைக்கு அனுபவ் குரூப் நிறுவனங்கள் பல்கிப்





பெருகிவிட்டாலும் இது முதன் முதலாகத் தொடங்கப்பட்டது என்பதில் எனக்கு மிகவும் பெருமை."

**"நீங்கள் படித்ததோ ஆசிரியர் படிப்பு. ஆனால் இப்போது கட்டிடத் தொழிலில் முழு மூச்சாக இறங்கி விட்டீர்கள். இரண்டுக்கும் சம்பந்தமே இல்லையே...."**

"நிச்சயம் உண்டு. ஆசிரியர் பயிற்சிப் படிப்பில் மனோதத்துவ இயல் உண்டு. அது இப்போது எனக்கு மனிதர்களோடு பழகும் போது மிகவும் உதவுகிறது. என்னிடம் ஃப்ளாட்ஸ் வாங்க வருபவர்கள் உயர்தர, நடுத்தரவர்க்க மக்கள். அவர்களுடைய சைகாலஜி ஒரு மாதிரி இருக்கும். கட்டி

*** முல்லை சுப்பையா**

டம் கட்டும் தொழிலாளர்களின் மனோபாவம் ஒரு மாதிரி இருக்கும். அவர்களிலேயே பல்வேறு நிலையில் உள்ளவர்கள் இருக்கிறார்கள். இப்படி அனைத்து வித மக்களுடனும் கலந்து பழக என்னுடைய படிப்பு எனக்கு மிகவும் உதவுகிறது...."

**"ரியல் எஸ்டேட் துறை நேரம் காலம் இல்லாதது. உங்களுக்குச் சவாலாக இல்லையா....?"**

"எல்லாமே நாம் எடுத்துக் கொள்ளும் விதத்தில்தான் இருக்கிறது. இந்தத் துறையில் நேரம் காலம் பார்க்க முடியாதுதான். ஆனால் என் கணவர், குழந்தைகளையும் நான் ஒரு சதவிதம் கூட மறுப்பதில்லை. குழந்தைகளின் பள்ளிநாள் விழாவிற்கு எல்லாம் ஆஜராகி விடுவேன். வீட்டிற்குப் போனால் முழுமையாக குடும்பத்திற்காகச் செலவிடுகிறேன். என் கணவர், குழந்தைகள் என்னை முழுமையாக புரிந்து கொண்டிருப்பதால் எனக்குப் பிரச்னை இல்லை.

ஆனால் வெளியில் வரும் 'கமெண்ட்'டுகள்தான் வேடிக்கையாக இருக்கும். நேற்று அப்படித்தான் ஒருவர், "பாருங்களேன், இப்ப எங்க பார்த்தாலும் லேடீஸோட ராஜ்யமா இருக்கு. எந்த ஃபீல்டுலயும் அவங்கதான்" என்றார். இங்கேயே நான் எம்.டி. என்றவுடன் 'லேடியா' என யோசிப்பார்கள். இதெல்லாம் நான் சந்தித்து வருகின்றதுதான்...."

**"உங்களிடம் ஃப்ளாட்ஸ் வாங்க வருபவர்கள் கூட அப்படித்தான் நினைக்கிறார்களா?"**

"இல்லை. ஏனென்றால் வீடு என வாங்க வரும்போது கணவன், மனைவியாகத்தான் வருவார்கள். அதிலும் வீடு எப்படி இருக்க வேண்டும் என்பதில் பெண்ணுக்குத்தான் ஆர்வம் அதிகம். இங்கே நானும் பெண்ணாக உட்கார்ந்து இருக்கும் போது அவர்களுக்கு தங்களுடைய தேவைகளைச் சொல்வது எளிதாக இருக்கிறது.

இதனால் எங்களுடைய ஃப்ளாட்ஸ்களில் பார்த்தீர்களானால் ஒவ்வொன்று ஒவ்வொரு மாதிரி இருக்கும். ஒரு ஃப்ளாட் போல மற்றொன்று இருக்காது. சில பேர் டைனிங் ரூமிலிருந்து கிச்சன் பார்த்தால் தெரியக் கூடாது என்பார்கள். சிலர் சாமி ரூமும் கிச்சனும் ஒன்றாக இருக்கக் கூடாது என்பார்கள். முடிந்த வரை அவரவர் விருப்பத்தையும் நிறைவேற்றி வைக்கிறேன். இதனாலேயே நாங்கள் ஃப்ளாட்ஸ் போட்டவுடனேயே தீர்ந்துவிடும். விளம்பரம் கொடுக்கவே வேண்டாம்."

**"பொதுவாக ஃப்ளாட்ஸ் பில்டரிடம் பெரிய ப்ராப்ளம், குறித்த நேரத்தில் முடித்துக் கொடுப்பது இல்லை என்று...."**

"இதனால் எங்களுக்கு என்ன லாபம் சொல்லுங்கள். ஒவ்வொரு நாளும் கட்டிடப் பணி ஆக கட்டு பொருட்களின் விலை ஏறிக் கொண்டே போய்விடும். முடிந்தவரை சீக்கிரம் முடித்துக் கொடுக்கத்தான் நினைக்கிறோம். எம்.எம்.டி.ஏ அப்ருவல், கரெண்ட் கனெக்ஷன், வாட்டர் கனெக்ஷன் என நாள் இழுத்து விடுகிறது.

இது சம்பந்தமாக எனக்கு ஒரு நிகழ்ச்சி மறக்கவே மறக்காது. ஒரு ஓய்வு பெற்ற ராணுவ அதிகாரி 'எனக்கு அதெல்லாம் தெரியாது நான் இன்ன தேதியில் குடியிருக்கும் வீட்டை காலி பண்ணுகிறேன் என வீட்டுக்காரரிடம் சொல்லிவிட்டேன். நீங்கள் கட்டிடத்தை முடிக்காவிட்டால் பரவாயில்லை. அங்கேயே ஓரமாக குடிசை போட்டுக் கொண்டு இருக்கிறேன் என்றார். அவருக்காக அந்த ஃப்ளாட்டை மட்டும் அவசரமாக முடித்துத் தனியாக லைன் எல்லாம் எடுத்துக் கொடுத்தோம்.

அதே போல பெண்கள் என்னிடம் வந்து



# விவசாயமும், சுற்றுலாவும் நம் நாட்டின் இரு கண்கள்!

**அ**னுபவ் குருப் நிறுவனங்களின் தலைவர் திரு. நடேசனுடன் பேசிக் கொண்டிருந்தோம். அப்போது அவரிடம் ஒருவர் வந்து ஒரு விவரத்தைக் கேட்டார். அது தொடர்பாக அவரிடம் நாம் விளக்கம் கேட்டபோது தெரிந்து கொண்ட விஷயங்கள் பிரமிப்பாக இருந்தது. 'பழபல்ப்' குறிப்பிட்ட அளவு வெளிநாடுகளிலிருந்து ஆர்டர் வந்திருக்கிறது, ஆனால் நம்மிடம் அந்த அளவு ஸ்டாக் இல்லை' என்பதுதான் அது.

"ஆமாம். அது உண்மைதான். வெளிநாடுகளில் இப்போது மாம்பழ பல்ப் போன்ற பல்வேறு ஃப்ரூட் பல்புகளுக்கு ஏக டிமாண்ட். எவ்வளவு வேண்டுமானாலும் ஏற்றுமதி செய்யுங்கள், நாங்கள் வாங்கிக் கொள்கிறோம் என்கிறார்கள். ஏனென்றால் இங்கிலாந்து போன்ற குளிர்ப் பிரதேசங்களில் குளிர்காலங்களில் பழங்களுக்கு டிமாண்ட். ஆனால் அவர்கள் கேட்கும் அளவு நம்மிடம் உற்பத்தி இல்லை! நம்முடைய நாட்டில் நிலத்திற்கோ, மனிதக் கைகளுக்கோ பஞ்சமில்லை. விவசாயத்தை விஞ்ஞானப்படுத்தி ஏற்றுமதி தரப்பில் கவனம் செலுத்தினால் நம் நாடு ஏழை நாடு என்ற பேச்சுக்கே இடமிருக்காது!"

**"இதற்கெல்லாம் அரசாங்கம் அல்லவா ஒத்துழைக்க வேண்டும்?"**

"எல்லாவற்றிற்கும் அரசாங்கத்தைக் குறை கூறாதீர்கள், விவசாயத்தை நவீனப்படுத்த அரசாங்கம் வேண்டியதில்லை. நவீன முறையில் நிலத்தைப் பயன்படுத்த வேண்டும், தரமான விதைகளைப் போட வேண்டும். நம்முடைய புராதான முறையை விட்டு விஞ்ஞானமயமாக்க வேண்டும். ஆனால் அதற்கு நிறைய நிலம் ஏக்கரில் வேண்டும். கிராமங்களில் இருப்பவர்கள் ஒன்று சேர்ந்து இதைச் செய்தால் பல விந்தைகளை நம்மால் செய்ய முடியும்! 'அனுபவ் குட்எர்த்'தும் இந்தத் துறையில் தீவிரமாக இறங்கி இருக்கிறது. வெளிநாடுகளில் இருந்து வரும் ஆர்டர்களுக்கு எங்களால் சப்ளை செய்ய முடியவில்லை என்பதுதான் உண்மை..."

**"சரி, இந்த நவீன விவசாயத்திற்கு என்னென்ன செய்யலாம் என உங்களைக் கேட்டால் சொல்லித் தருவீர்களா?"**

"கண்டிப்பாக. என்ன முறையில் விவசாயம் செய்யலாம் என்று யோசனை தரத் தயார். சாதாரணமாக ஏற்றுமதியாளர்களின் லிஸ்ட்டை யாரும் தரமாட்டார்கள். ஆனால் எனக்கு அப்படி அல்ல. யாரேனும் இந்தியன்

ஷேவிங் பிளேடு வரும் பிளாஸ்டிக் தட்டுகளை தூர போடாமல் சேர்த்து வையுங்கள். அவற்றில் 4 தட்டுகளை ஒன்றுடன் ஒன்று இணைத்து பெவிகால் வைத்து ஒட்டவும். அதாவது ஒரு சதுரமான மேஜை வருவது போல் ஒட்டவும். வழவழப்பான பகுதி மேற்புறம் இருப்பது போல் ஒட்டவும். நான்கு மிகச் சிறிய தேன் பாட்டில் (காலியான) மீது வைத்து நிறுத்தி ஒட்டவும். தேன் பாட்டில் இல்லையென்றால் சாதா ஊசி மருந்துபாட்டில் கூட நிறுத்தி ஒட்டலாம். பாட்டில் மீது கிஃப்ட் பேப்பரை ஒட்டியும் வைக்கலாம். இப்பொழுது உங்கள் பொம்மை கொலுவுக்கு அழகான டேபிள் தயார். தீப்பெட்டி (அ) சிகரெட் பெட்டியின் மீது கலர் பேப்பர் ஒட்டி, ஒன்றின் ஓரத்தில் மற்றொரு பெட்டியை ஒட்டி சிறிய நாற்காலிகளாக தயார் செய்து வைக்க, டைனிங் டேபிள்+சேர் தயார். பார்க்க அழகாக இருக்கும்.

— பாலா



பேசி ஃப்ளாட் வாங்கும்போது ரொம்பவும் நண்பர்கள் ஆகிவிடுவார்கள். கணவர்களையே, "நீங்க அவங்க சொல்றதைக் கேளுங்க" என்பார்கள். லோன் வாங்கிக் கொடுத்தாலும் ஒழுங்காகத் திருப்பி அடைத்து விடுவார்கள். இப்படி எத்தனையோ என்னால் மறக்க முடியாத நிகழ்ச்சிகள் உள்ளன. எழுநூறுக்கும் மேற்பட்ட ஃப்ளாட்ஸ் கட்டி விட்டோம். அனைவருக்கும் என்னையும் தெரியும். எனக்கும் அத்தனை பேரையும் தெரியும்...." என்கிறார் நெகிழ்ச்சியுடன்.

**"பெண்கள் அழகுபடுத்துவதில் நிபுணர்கள். நீங்கள் உங்கள் கட்டிடங்களில் ஸ்பெஷலாக ஏதாவது அழகுபடுத்துகிறீர்களா?"**

"ஃப்ரெண்ட் எலிவேஷன் அதாவது கட்டிடத்தின் முகப்புத் தோற்றம்தான் என்னுடைய ஸ்பெஷலாடி. ஃப்ளாட் முன்புறத்

முன்னேறினால் போதும். அவர்களுக்குப் பூரண உதவி செய்யத் தயாராக இருக்கிறேன். நம்முடைய நாடு விவசாய நாடு. அதனால் கிராமப் புறங்களில் விவசாயம் செழித்து வளர்ந்தால் நகர்ப்புறங்களைத் தேடி வரமாட்டார்கள்.

விவசாயம் எப்படி நம் நாட்டின் ஒரு கண்ணோ, அதே போல மற்றொரு கண் சுற்றுலாத்துறை. நம் நாட்டில் இருக்கும் கலைச் செல்வங்கள் போல உலகில் வேறெங்கும் கிடையாது. அதனை நன்கு பாதுகாத்து வெளிநாட்டினர் வந்து கண்டுகளிக்க வழி செய்தால் எவ்வளவோ செல்வம் கொழிக்கும். இயற்கை வளங்கள் கொண்டது நம் நாடு. இதையெல்லாம் போற்ற வேண்டும்.

அதனால்தன் நாங்களும் 'அனுபவ் ரிசார்ட்ஸ்' ஆரம்பித்து இருக்கிறோம். போடி போன்ற இயற்கை வளம் கொழிக்கும் இடங்களில் டைம்ஷேர் முறையில் கட்ட ஆரம்பித்து இருக்கிறோம். சென்னைக்கு அருகிலேயே ஒரு மணி நேரப் பயணத்தில் செங்கல் பட்டு அருகில் மலைகள் சூழ்ந்த பகுதி உள்ளது. அங்கும் ரிசார்ட்ஸ் துவக்க இருக்கிறோம்.

இப்படி விவசாயம், சுற்றுலா இரண்டையும் வளர்த்தாலே போதும், நம்நாடு மிகவும் உன்னத நிலைக்கு வந்து விடும்'' என்றார் நடேசன்.



• நடேசன்

''உங்களிடம் இந்தக் கேள்வியைக் கேட்காமல் இருக்க முடியவில்லை. நிறைய பேர் ஃபைனான்ஸ் கம்பெனி ஆரம்பித்து ஏகப் பட்ட வட்டி தருவதாக விளம்பரப்படுத்துகிறார்கள்.''

சிரிக்கிறார் நடேசன். ''மக்கள்தான் விழிப்புணர்வோடு இருக்க வேண்டும். தங்கள் பணத்தை ஒரு கம்பெனியில் போடுமுன் அவர்களின் பாலன்ஸ் ஷீட் கேளுங்கள். அவர் கள் அந்தப் பணத்தை என்ன செய்கிறார்கள் எனப்பாருங்கள். மொத்தமே மக்களிடமிருந்து வாங்கும் பணம்தானா எனத் தெரிந்து கொள்ளுங்கள். இதையெல்லாம் கேட்க உங்களுக்கு உரிமையுண்டு.

ஆனால் ஒன்று சேமிப்பு என்று வரும் போது பயந்து கொண்டு ஒதுங்கி விடுவதும் சரியில்லை. எனவே சேமிப்பில் 30% நல்ல ஃபைனான்ஸ் கம்பெனிகளில் போடுங்கள். 20% பப்ளிக் லிமிடெட் கம்பெனிகளில் முதலீடு செய்யுங்கள். மீதி 50% நேஷனலைஸ்ட் வங்கிகளில் போடுங்கள். அதுதான் சிறந்தது....'' என்கிறார் நடேசன்.

தோற்றம் பார்ப்பதற்கு அற்புதமாக இருக்க வேண்டும் என்பதற்காகவே கூடுதலாக செலவழிக்கிறேன். அழகழகான முகப்புத் தோற்றத்தைக் கொடுக்கிறேன். ஃப்ளாட் வாங்குபவர்கள் தங்களுடைய ஃப்ளாட்டின் தோற்றத்தையும் பற்றிப் பெருமைப்பட வேண்டும் என்பதுதான் என்னுடைய நோக்கம்''

அவர் கூறியதை அங்கிருந்த மாடல்கள் நிரூபித்ததுடன் கட்டியுள்ள ஃப்ளாட்களும் பேசுகின்றன. அவரைப் பார்த்தவுடன் ஃப்ளாட் சொந்தக்காரர்கள் வந்து அந்நியோன்யமாகப் பேசியது சிறப்பாக இருந்தது. ஃப்ளாட் பில்டர் என்றால் ஒரு வியாபார காண்ட்ராக்டர்தான் என்ற அளவில் நின்று விடாமல் தோழமையை வளர்த்துக் கொண்டிருப்பதுதான் முல்லை கப்பையாவின் தனிச்சிறப்போ!

— வீனா

படங்கள் : சுரேஷ்

முதல் நாள் சுண்டல் மீதமாகிவிட்டால், மறு நாள் காலை, ஒரு உ. கிழங்கு வேகவைத்துப் பொடித்து, ஒரு தக்காளி வதக்கி, சுண்டலுடன் குருமா மாதிரி செய்தால், காலை டிபனுக்குக் குழந்தைகள் தொட்டுக் கொள்ளுமே.

— ஆர். பார்வதி



# வில் போன்ற புருவம் வேண்டுமா?

## மங்கையர் மலர் & மீரா ஹெர்பல் பவுடர் இணைந்து வழங்கும்

பண்டைகால புலவர்கள் பெண்களை கார் மேகக் கூந்தல், பால் போன்ற நிறம் என்றெல்லாம் வர்ணித்த மாதிரி வில் போன்ற புருவம் என்றும் வர்ணித்துள்ளனர். பெண்கள் புருவத்தை ஷேப் செய்து கொள்வது நாகரீக நோக்கு மட்டுமின்றி முகத்திற்கு நல்லதொரு தோற்றத்தையும் கொடுக்கும். மேலும் எந்த வகையான பொட்டு வைத்தாலும் எடுத்துக் காட்டும்.

சிலர் புருவத்தைத் 'த்ரெட்டிங்' பண்ணி ஷேப் கொடுப்பது தவறானது என நினைக்கிறார்கள். நாலாபுறமும் சிதறி ஒழுங்கின்றி இருக்கும் புருவத்தை மிகச் சரியான த்ரெட்டிங் முறையில் ஷேப் கொடுப்பது அழகானதுதானே! இப்பொழுது பெண்கள் புருவத்துக்குத் 'திக்'கான ஷேப் கொடுப்பதையே விரும்புகிறார்கள்.

புருவம் மிகவும் மெல்லியதாக இருப்பதற்குத் தினமும் Castor Oil தடவுவது நல்ல பலன் தரும். இப்பொழுது மேலும் நல்ல விஞ்ஞான முன்னேற்றத்தால் 'eyebrow pigment implanting' என்ற முறை வந்துள்ளது. அதாவது, ஒரு மெஷினை உபயோகப்படுத்தி புருவம் திக்காகும் வரை சிகிச்சை அளிக்கலாம். குறிப்பிட்ட இடைவெளியில் இந்த சிகிச்சையை செய்வதால் நல்ல திக்கான புருவங்களைப் பெறலாம்.

அழகுப்படுத்தப்பட்ட நேர்த்தியான புருவங்கள், இடையே நவநாகரீக ஜொலிக்கும் பொட்டு, ஐ லைனர், கண் இமைகளுக்கு மஸ்காரா, இவையெல்லாம் போட்டு வெளியில் சென்றால் நீங்கள் மற்ற பெண்மணிகளின் நெஞ்சை அள்ளிக் கொண்டு போவீர்கள் என்பதில் ஐயமில்லை!

**? எனக்கு வயது 25. நான் சிறுவயதில் சிவப்பாக நன்றாக இருப்பேன். திருமணமாகி குழந்தைகள் பிறந்த பிறகு என்னுடைய முகம் சற்று நிறம் மாறி உள்ளது. என்னுடைய முகம் பளிச்சென்று இருக்க வீட்டிலேயே செய்யக்கூடிய எளிய அழகுக் குறிப்பைக் கூற முடியுமா?**

**உமா மகேஸ்வரி, சென்னை - 2.**

! முகம் பளிச்சென்று இருக்க நான் ஏற்கெனவே கூறியது போல் எலுமிச்சஞ்சாறு + பாலாடை + கடலை மாவு போட்டுக் குழைத்து முகத்தில் தடவி 10 நிமிடம் ஊற வைத்துப் பின் முகம் அலம்பலாம். (அல்லது) நல்ல கேரட், உருளைக்கிழங்கை அரைத்து முகத்தில் தடவி சிறிது நேரம் ஊற வைத்து முகம் கழுவலாம். நல்ல தரமான சந்தனத்தைக் குழைத்துப் பூசிக் கொள்வது கூட நல்ல பளிச்சென்ற தோற்றத்தைத் தரும்.

**? என் தோழிக்கு உடலில் உஷ்ணை கொப்பளம் பரு போல இருக்கிறது. பரு போல அங்கங்கே தோன்றுகிறது. மூக்கில் வெள்ளையாக பால் பரு போல உள்ளது. நகத்தால் பிடிங்கினால் பரு மறைந்தாலும் hard ஆக கருப்பாக மாறி விடுகிறது மூக்கு. எளிய யோசனை சொல்லுங்கள். வீட்டிலேயே செய்து கொள்வது போல?**

**என். சிவகாமி, திருவாரூர்.**

! மூக்கின் மேல் வெள்ளையாக உள்ளது White heads எனப்படுவதாகும். இதற்கு ஃபேஷியல் செய்து கொள்வது சிறந்ததாகும்.





## பதில்கள் : மைதிலி பாபு

'ஸ்டீம்' கொடுத்து இதை நீக்கலாம். இதன் மேல் நகம் படுவது மிகவும் கெடுதலான தாகும். இதனால் மூக்கு கருப்பாக மாறுவது தோடின்றி முகப் பொலிவு சீரழிந்து விடும். வீட்டிலேயே உங்களால் இதை நீக்க முடியாது. ஒரு முறையாவது இதை நீங்கள் பார்லர் சென்று சிகிச்சை மேற் கொண்டால் நல்ல பலன் தரும்.

**? என் மகளுக்கு எண்ணெய் ஸ்நானம் ஒத்துக் கொள்வதில்லை. முக்கியமாக சீயக்காய் தேய்த்தால் கழுத்து வலி மற்றும் தலைவலி வந்து விடுகிறது. எனவே வாரம் ஒருமுறை தேங்காய் எண்ணெய் தடவிக் கொண்டு சியக்காய் அல்லது தரமான ஹெர்பல் பவுடர் கொண்டு தலைக்கு குளிக்கச் செய்கிறேன். அடிக்கடி ஹெர்பல் பவுடர் உபயோகப்படுத்துவதால் தலை முடிக்கு சேதம் உண்டா? தலை நரைத்து விடுமா? அல்லது வேறு ஏதும் சிக்கல் ஏற்படுமா?**

**சியாமளா ராமசுவாமி, வேலூர்.**

! நல்ல தரமான ஹெர்பல் பவுடர் உபயோகப்படுத்துவதால் தலைமுடிக்கு எந்த சேதமும் உண்டாகாது. ஆனால் சீயக்காய்த் தேய்த்துக் குளிப்பது மிகவும் தலைமுடிக்கு நல்லது. சீயக்காய் தேய்த்துக் குளித்து முடித்த பின் நல்ல தரமான சாம்பிராணி போட்டுத் தலையைக் காயவைத்தால் கழுத்து வலி, தலை வலி பிரச்னையில் இருந்து விடுபடலாம்.

**? என்னுடைய பிரச்னையே கோடை காலம்தான். கோடை காலம் வந்தவுடனேயே என்னுடைய முகத்தில் வியர்க்குரு தோன்ற ஆரம்பித்து விடுகின்றன. இந்த வியர்க்குரு மறைவதற்கு வெகு நாட்கள் ஆகின்றன. அவ்வாறு மாறினாலும் என்னுடைய முகத்தில் பள்ளத்தை ஏற்படுத்தி விடுகின்றன. இந்த பிரச்னை 3 வருடமாகத் தான் உள்ளது. பள்ளம் விழுந்த இடம் மறையுமா? வியர்க்குரு வராமல் தடுப்பது எப்படி.**

**வி. வித்யா,**
**திருவாவடுதுறை.**

! முகத்தில் வேர்க்குரு என்பது பொதுவானப் பிரச்னை. இதற்கு நீங்கள் வெயிலில் வெளியே சென்றுவிட்டு வந்தவுடன் முகத்தை நன்றாகக் கழுவி சுத்தம் செய்து விட்டு பின் நல்ல சந்தனத்தைக் குழைத்துப் பூசி சிறிது நேரம் கழித்துப் பின் முகத்தைச் சுத்தமாகக் கழுவி துடைக்கவும். இதனால் வேர்க்குரு வருவது தடுக்கப்படலாம்.

**? என் மகளுக்கு வயது 10, கலர் கருப்பு, உடம்பு குண்டு, வயிறு பெரியதாக இருக்கிறது. கலர் மாறவும், வயிறு குறையவும் தயவு செய்து ஆலோசனை கூறவும். தாய், தந்தை இருவரும் நல்ல கலர்.**

**ஆர். ஜெயாராஜ், திருவனந்தபுரம்.**

! பத்து வயது பெண்ணுக்கு வயிறு பெரிதாக இருப்பது பிரச்னையல்ல. ஆயினும், வயிறு மிகவும் அசாதாரணமாக இருப்பின், ஒரு மருத்துவரைப் பார்ப்பது நல்லது. கலர்

மாறு. தினமும் எலுமிச்சஞ்சாறுடன் பாலாடையைக் கலந்துத் தேய்ப்பது சிறந்த பலனைத் தரும்.

**? காலை நேர அவசரத்தில் ஈரக் கூந்தலை முடிந்து கொண்டதால், கூந்தலில் அங்கங்கே நீர்க்காய் படிந்து கட்டியாகி விட்டது. ஈரமாக இருந்தால் துர்நாற்றம் வருகிறது. எவ்வளவு நாட்களாக இருக்கிறது எனத் தெரியவில்லை. எனக்குத் தெரிந்தவர்கள் கூந்தலை கொதிக்கும் நீரில் ஊறவைத்து சீப்பினால் சீவினால் வந்து விடும் என்றார்கள். சரியா? நான் என்ன செய்ய?**

! நீங்கள் என்னதான் அவசரத்தில் இருந்தாலும் தலைமுடியை ஈரத்தோடு முடிந்து கொள்வது நல்லதல்ல. ஈரமாக இருந்தால் தலைமுடியில் வேர்வை சேர்ந்து துர்நாற்றம் வரத்தான் செய்யும். கூந்தலை கொதிக்கும் நீரில் ஊற வைப்பது என்பதெல்லாம் உங்கள் பிரச்னையைத் தீர்க்காது. நம் தலைமுடியை நல்லபடியாக பராமரிப்பது நம் கையில் தானே உள்ளது! தலைக்குக் குளித்து முடித்த பின் நன்கு தலைமுடியை உலர வைத்து பின் தலையை முடிவதே சிறந்தது. (அல்லது) மிகவும் அவசரம் இருப்பின் டிரையர் உபயோகிக்கலாம்.

**? என்னுடைய தலைமுடி நரைக்க ஆரம்பித்து விட்டது. நான் ஆரம்பத்திலிருந்தே குறிப்பிட்ட கூந்தல் தைலம்தான் உபயோகித்து வந்தேன். கூந்தலும் நன்றாக வளர்ந்தது. இப்பொழுது சில மாதங்களாக இந்தத் தைலம் தடவிக் கொள்வதால் தலையில் அரிப்பும், தலைவலியும் வந்து விட்டது. போன மாதம் திடீரென்று முடி வேரோடு கொட்டத் தொடங்கியது. பொடுகும் தலையில் உள்ளது. எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அதனால் நரை முடிக்கும், கூந்தல் வளருவதற்கும், பொடுகைப் போக்கவும் வழி சொல்லுங்கள்.**

ஹரிப்ரியா, கரூர் - 1.

! உங்கள் தலையிலுள்ள பொடுகை அடியோடு நீக்கினாலே ஒழிய உங்கள் பிரச்னை தீராது. முடி வேரோடு கொட்டத்தான் செய்யும். இதற்கு நீங்கள் நல்ல தரமான பொடுகை நீக்கக் கூடிய எண்ணெய்யை உபயோகப்படுத்த வேண்டும். மேலும் உடலில் இரும்புச் சத்துக் குறைவாக இருந்தாலும் பொடுகு பிரச்னை அதிகமாகும். இதற்கு நீங்கள் நல்ல மருத்துவரை அணுகலாம்.

**? கூந்தலுக்கு எண்ணெய் இரவே தடவி படுத்து காலை குளிப்பது நல்லதா? அப்படி இரவே எண்ணெய் தடவினால் மறுநாள் குளிக்கும் முன் வெந்தயம் அல்லது வெந்தயக்கீரை விழுதை தலையில் தடவினால் பலன் கிடைக்குமா? (Will the oily skin absorb the methi leaves or methiseeds paste?)**

எஸ். பிரபா, பெங்களூர்.

! கூந்தலுக்கு எண்ணெய் முதல் நாள் இரவே தடவி காலைக் குளிப்பது மிகவும் நல்லது. இதனால் தலையில் சிக்குப் பிரச்னையும், மேலும் முடி நுனி பிளவுபடுவதும் தவிர்க்கப்படும். மறுநாள் வெந்தயம் அல்லது வெந்தயக் கீரை விழுதைத் தடவிக் குளிப்பது மிகவும் நல்லது. இதனால் உடம்பில் உள்ள இரும்புச் சத்து அதிகமாவதோடு மட்டுமின்றி, தலையில் பொடுகுப் பிரச்னை வராது. மேலும் வெந்தயம் உடலுக்குக் குளுமை தரும்.

**பரிசு பெற்ற கட்டுரை**

# நான் கேள்விப்பட்டுப் பயனடைந்த அழகுக் குறிப்பு!

## எண்ணெயா, வேண்டவே வேண்டாம்!

நானும் எத்தனையோ இளம் பெண்கள், நடுத்தர வயது பெண் ஆண்கள் அனைவரையும் பார்த்துள்ளேன். அனைவருடைய முகங்களும் முகப் பருக்கள் வந்து முக அழகையே கெடுக்கும். அதற்குக் காரணம் நிறைய எண்ணெயில் பொரித்த பண்டங்களும், எண்ணெய் நிறைய ஊற்றிச் சாப்பிடுவதாலும்தான் என்பது என்னுடைய அனுபவபூர்வமான உண்மைகள். எங்கள் வீட்டில் எனது மாமியார் எண்ணெயை அதிகமாக பொரியல், தோசை எதில் ஊற்றினாலும் கோபித்துக் கொள்வார். ஆகையால் மிதமாகவே எல்லாவற்றிலும் எண்ணெய் உபயோகிப்போம்.

எனது குழந்தைகள் ஐவர், எனக்கு, என் மாமியார், கணவர், மாமனார் ஒருவருக்கும் பருக்கள் என்றால் என்ன என்றே தெரியாது. யாருக்கும் முகப் பருக்கள் வந்து அழ

| இந்த மாதம் பரிசுக் கட்டுரைக்கு **மீராவின்** அன்பளிப்பு ரூ. 1000 மதிப்புள்ள குக்கர் | அடுத்த மாதம் போட்டிக் கட்டுரை... பொருள் : **குளிர் காலத்திற்கு ஏற்ற அழகுக் குறிப்பு** கடைசி தேதி: 15.9.95 |
|---|---|

மான கறுப்புப் புள்ளிகளோ புண்ணோ வந்து முக அழகைக் கெடுத்ததில்லை. எனக்கும் 55 வயது ஆகிறது. உங்கள் முகம் வழ வழப்பாகவும், சிறப்பாகவும், முகப்பருக்கள் வராமலும் இருக்கும் அழகின் ரகசியமென்ன என்று அக்கம் பக்கம் உள்ளவர்கள் கிண்டலடிக்கிறார்கள்.

அழகுக் குறிப்பு : பாசிப் பயறு பச்சிலை பூலாங்கிழங்கு, கஸ்தூரி மஞ்சள் இவைகளை கடையில் வாங்கி நன்கு காய வைத்து இடித்துச் சிறு குழந்தை முதல் பெரியவர்கள் வரை முகத்தில் பூசிக் கொள்ளலாம். தைமாதம் நிறைய ஆவாரம் பூக்களைப் பறித்து அதனை நிழலில் உலர்த்தி அதையும் இதோடு சேர்த்து குழந்தைகளுக்குப் பூசிக் குளிப்பாட்டினால் கறுப்பாக இருக்கும் குழந்தைகள் சிறிது சிகப்பாக மாறுவர். உடம்பில் கண்ட இடங்களில் இருக்கும் முடிகளும் உதிர்ந்து அழகாக குழந்தைகள் மாறும்.

இதனால் இதுவரை ஒரு சொறி சிரங்கு, பருக்கள் ஒன்றும் எங்கள் குடும்பத்தில் ஒருவருக்கும் வந்ததில்லை. இது சுலபமாக கிடைக்கக் கூடியவைகள்.

— *ஏ. சுலோசனா மணவாளன், குளித்தலை.*

## பிரசுரத்திற்கு

### சிகப்பழகு கிரீம்!

எனக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டு இருந்தது. நான் மாநிறம்தான். சிகப்பாக இல்லையே என்ற குறை எனக்கு உண்டு. சிகப்பழகு கிரீம் போடலாம் என்று வாங்கி வந்தேன். அப்போது ஊரிலிருந்து வந்த என் பாட்டி, "எதற்கு இந்த மருந்து" என்று கேட்டார்கள். "சிகப்பாக ஆக வேண்டும் பாட்டி" என்று வழிந்தேன்.

அதற்கு அவர்கள் சொன்னார்கள் "இந்த மருந்தையெல்லாம் பூசினால் சிகப்பாக ஆகிறாயோ இல்லையோ, நான் சொல்லும்படி செய் நிச்சயம் சிகப்பாவாய்" என்றார்.

"என்ன பாட்டி?" என்றேன். "தினமும் இரவு சிறிது பசும்பாலில் கசகசாவை ஒரு ஸ்பூன் போட்டு ஊறவைத்து காலையில் எழுந்து மைய அரைத்து முகத்தில் பூசி ஒரு 20 நிமிடம் கழித்து அலம்பி வா...." என்றார். என்ன ஆச்சர்யம் இருமணத்திற்கு முதல் நாள் வரை அந்த அழகுக் குறிப்பை விடவில்லை நான்! திருமணத்தன்று என்னைப் பார்த்த அனைவரும், "பெண் நல்ல சிகப்பு... இல்ல?" என்று பேசிக் கொண்டனர். என் பாட்டிக்கு "ரொம்ப தேங்ஸ் பாட்டி" என்றேன்! "போடி சிகப்பி!" என்றார்கள். என் அனுபவம் செம்மையானது!

— *சீதாலட்சுமி, திருப்பரம்பியம்.*

### தலையெல்லாம் பொடுகு....

எனக்கு நீண்ட கூந்தல். ஆனால் பேன் தொல்லையும் முன்பு இருந்தது. மருந்துகளை உபயோகிக்கத் தயக்கமாக இருந்தது. பேன் தொல்லையினால் நிம்மதியாக இருக்க முடியவில்லை. முகமும் ஒளியிழந்து காணப்பட்டது. விடுமுறைக்கு ஒரு மாதம் பாட்டி ஊருக்குச் சென்றிருந்தேன். எனது அவஸ்தையை உணர்ந்த பாட்டி, மறுநாள் 7,8 சோற்றுக் கற்றாழை மடல்களைக் கொண்டு வந்து, தோல்சீவிவிட்டு, உள்ளே இருக்கும் வழவழப்பான பகுதியை நன்கு பிசைந்து தலையில் தடவி ஊற வைத்தார்.

பாட்டி வீட்டிலிருந்து குளம் வெகு தூரத்தில் உள்ளதால் நடந்து செல்வதற்குள் தலை நன்கு ஊறிவிட்டது. அங்கு சென்ற பின் ஆவாரம் செடியின் இலைகளை துவை கல்லில் வைத்துத் தேய்த்து, சாறெடுத்து தலை

## நவராத்திரி டிப்ஸ்



படிக்கட்டுகளுக்கு வேஷ்டி துணியைப் போடும் வழக்கம் இன்றும் நம் மக்களிடையே இருக்கிறது. வேஷ்டியின் இரு பக்கக் கரையும் படிக்கட்டுகளுக்கு இருபுறமாக அமையுமாறு வைத்தால் கொலுவிற்கும் பார்வையாக இருக்கும். (மைல்கண் ஜரிகை வேஷ்டியையும் பயன்படுத்தலாம்)

மலைகள் அமைத்து கோவில் வைப்பவர்கள், அம்மலைகளுக்கிடையே மண்ணில் கொட்டாங்குச்சியை (தேங்காய் ஓடு) புதைத்து மலையில் உள்ள குன்றுகளுக்கு வலுவூட்டலாம்.

அட்டைகளைக் கொண்டு வீடு தயாரிப்பவர்கள் க்ரீம் பிஸ்கட்டுகளின் பெட்டியினுள் வரும் வளைவுகளுள்ள பேப்பரை கூரைகள், வீட்டின் முன்புறம் இவற்றை அமைக்கப் பயன்படுத்தலாம். ஆஸ்பெஸ்டாஸ் தகடுகள் போட்டது போல் அழகாகவும் புதுமையாகவும் இருக்கும்.

— லக்ஷ்மி சிவகுமார்



யில் தேய்த்து குளத்து நீரில் அலசிவிட்டார்.

இப்படியே வாரம் ஒருமுறை செய்த வுடன் பேன்கள் போன இடம் தெரிய வில்லை. கண்களும், முகமும் 'பளிச்'சென்று பிரகாசமடைந்து காணப்பட்டன. முடியோ 'பளபள'!

ஊருக்குப் புறப்பட்ட எனக்குப் பாட்டி சொன்ன அறிவுரை :

சோற்றுக் கற்றாழையின் உள்பகுதியை நன்கு பிசைந்து முகத்திலும் தலையிலும் அடிக்கடி தேய்த்துக் குளிக்க, குளிர்ச்சி உண்டாகும். வெப்பம் தணிந்து நன்மை ஏற் படும். ஆவாரம் பூ மற்றும் இலைகளைத் தேய்த்துக் குளித்தால் பேன்கள் அண்டாது. முடியும் நன்கு வளரும் என்றார்.

அன்றிலிருந்து இன்று வரை நகரப் பகுதி யில் கிடைக்கும் போது சேமித்து வைத்துக் கொண்டு சோற்றுக் கற்றாழை, ஆவாரம் இலைக் குளியல் செய்து வருகிறேன். பேன் தொல்லை 'போயே போச்சு'.

முகமும் நன்றாக இருக்கிறது. இது என் பாட்டி மூலம் கேள்விப்பட்டுப் பயனடைந்த அழகுக் குறிப்பு ஆகும்.

— கே. சரஸ்வதி, புதுக்கோட்டை.

## 'கால்'மேல் பலன்!

அழகுக் குறிப்பு என்றாலே தலைமுடிக் கும், முக அழகிற்கும் மட்டுமே என்று பலர் தவறாக நினைக்கிறார்கள். முடி அழகு, முக அழகு, கையழகு, கால் அழகு, இடுப்பழகு, பல் அழகு இப்படி எல்லா அவயங்களின் ஆரோக்கியமான பராமரிப்பே அழகுக் குறிப்பாகும். இந்த வகையில் என் கால் பாதங்களின் பராமரிப்பை என் சித்தியின் மூலமாகக் கேட்டறிந்து, பிரமாதமான பயனைப் பெற்றேன். சாதாரணமாக உடம்பை குறிப்பிடும் போது, "தலை முதல் கால் வரை" என்றும் "உச்சி முதல் உள்ளங் கால் வரை" என்றும், தலையை முதன்மை யாகவும், காலை கடைசியாகவும் குறிப்பிட் டாலும், தலையால் நடக்க முடியாதல்லவா? (காரைக்கால் அம்மையாரைத் தவிர) பாளம், பாளமாக வெடிப்பு ஏற்பட்ட என் கால்களி னால் நான் தீராத அவதிப்பட்டேன். பித்த வெடிப்பாக இருக்குமோ என்று நினைத்து, காப்பி, டீ, எண்ணெய் பதார்த்தங்களை நிறுத்திப் பார்த்தும் பலனில்லை. எத்தனை களிம்புகள்! எத்தனை ஆயின்ட்மென்டுகள்! ஒன்றும் உதவவில்லை. கடைசியில் என் சித்தி ஒரு உபாயம் தந்தாள். திரவ மெழுகு கடைகளில் கிடைக்கும். அதை வாங்கி அத் துடன் மஞ்சள் தூளை (சுத்தமானது) கலந்து ஒரு டப்பாவில் வைத்துக் கொண்டேன். இரவு படுக்கப் போகும் முன் இரண்டு பாதங் களையும் உப்புக் கலந்த வெந்நீரில் 10 நிமிடங் கள் மூழ்க வைத்துப் பிறகு, இந்த மெழுகு, மஞ்சள் கலவையை வெடிப்புகளில் பூசிக் கொண்டு படுத்தேன். ஐந்தே நாட்களில் கைமேல் பலன் (கால்மேல்) கிடைத்தது. வெடிப்புகள் எல்லாம் ஆறி, வலியும் அடங்கி, மேல் தோல் நன்றாக மூடிக் கொண்டு வளர்ந்தது. இந்த சிகிச்சையை இத் தனை நாட்கள் அறிந்து கொள்ளாமல் அவதிப்பட்டேனே என்று இப்பொழுது நினைக்கிறேன். மயில் போல ஆடினாள், மான் போல ஓடினாள், அன்னம் போல நடந்தாள், ஆகிய எல்லாவற்றுக்கும் கால் தானே பிரதானம்.

— கீதாஞ்சலி, சென்னை - 21.



**சுருகு தொன்னை வாங்கி, அதில் சுண்டலைப் போட்டுக் கொடுத்தால், சிந்தாமல் எடுத்துப் போக வசதி. நமக்கும் பொட்டலம் கட்டும் வேலை மிச்சம்.**

**— ஆர். பார்வதி**



**எந்த சுண்டல் செய்தாலும், கொத்தமல்லித் தழையை அரைத்துக் கடைசியில் போட்டுக் கலந்து பாருங்கள். வாசனையோ, வாசனை, ருசியோ, அபாரம்.**

**— ஆர். பார்வதி**

BINNY
சி ல் க் ஸ்

# நெஞ்சில் நிலைக்கும் நிமிடங்களில் எல்லாம் ''பின்னி'' இருக்கும் உங்களுடன்.

அன்று உங்கள் அழகுப் புன்னகை
பின்னி பட்டுப் புடவையுடன்.

இன்று உங்கள் மகளின் புன்னகை
பின்னி பட்டுப் புடவையுடன்.

BINNY
உங்கள் புதிய கனவுகளின் உருவாக்கம்

Maa Bozell 202-95 Tam

# DBF தீபம் பெனிபிட் பண்ட் லிட்.

எண். 19, கோவிந்தன் தெரு, அய்யாவு காலனி, அமைந்தகரை.
சென்னை - 600 029. போன் : 429595. பதிவு எண் 18-22327.

## PENSIONER'S PARADISE SCHEME

ஓய்வுற்றோர்கள், விதவைகள், ஊனமுற்றோர்கள், முன்னாள் இராணுவத்தினர்கள், கல்வி மற்றும் அறக்கட்டளைகள் மேற்பட்டவர்களுக்கு ரூ. **10,000/-**ம் அதற்கு மேலும் டெபாஸிட் செய்பவர்களுக்கு ஒரு வருடத்திற்கு **20%** சிறப்பு ஆதாயம் வழங்கப்படும்.

## FIXED DEPOSITS

| காலவரை | 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடம் | 3 வருடம் | 4 வருடம் | 5 வருடம் |
|---|---|---|---|---|---|---|
| வட்டி விகிதம் | 15% | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |

உங்கள் முதலீடு **45** மாதங்களில் **2** மடங்குகளாக ஆகிறது
உங்கள் முதலீடு **72** மாதங்களில் **3** மடங்குகளாக ஆகிறது

## AISWARYA LAKSHMI DEPOSIT SCHEME

| ஆண்டு | தொகை | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| 21 | 2,240 | 1,00,000 |
| 15 | 7,000 | 1,02,200 |




குழந்தையின் கல்வி, கல்யாணம் இன்னும் பிற அத்தியாவசிய செலவுகளுக்கு அள்ளித்தரும் ஐஸ்வர்யாவின் அற்புத திட்டங்கள் * உறுப்பினர்களுக்கு மட்டும்!

SIBI ADS

---

குடும்பத்தில் எல்லா வயதினரும் படித்து மகிழ "லக்ஷ்மி" எழுதிய புதினங்கள் - கதைகள்

| | |
|---|---|
| இரண்டாவது மலர் | 58.00 |
| தோட்டத்து வீடு | 16.00 |
| அசோக மரம் பூக்கவில்லை | 19.00 |
| வீரத்தேவன் கோட்டை | 13.00 |
| மீண்டும் பிறந்தால் | 38.00 |
| அடுத்த வீடு | 75.00 |
| பெயர் சொல்ல மாட்டேன் | 23.00 |
| அழகின் ஆராதனை | 29.00 |
| பெண் மனம் (தமிழ்நாடு அரசு பரிசு நூல்) | 30.00 |
| உயர்வு | 28.00 |
| கோடை மேகங்கள் | 48.00 |
| ஸ்ரீமதி மைதிலி | 60.00 |
| பெண்ணின் பரிசு | 17.00 |
| நீலப்புடவை | 21.00 |
| நதிமூலம் | 21.00 |
| ஒரு காவிரியைப் போல... (சாகித்ய அகடமி பரிசு பெற்றது) | 56.00 |
| மீண்டும் வசந்தம் | 57.00 |
| ராதாவின் திருமணம் | 27.00 |
| மண் குதிரை | 13.50 |
| இவளா என் மகள் | 23.00 |
| இரண்டு பெண்கள் | 21.00 |
| நீதிக்குக் கைகள் நீளம் | 30.00 |
| ஜெயந்தி வந்தாள் | 18.00 |
| மீண்டும் ஒரு சீதை | 27.00 |
| நிற்க நேரமில்லை | 39.00 |
| அவள் தாயாகிறாள் | 16.00 |
| உறவுகள் பிரிவதில்லை | 15.00 |
| வாழ நினைத்தால் | 18.00 |
| கடைசி வரை | 19.00 |
| மோகத்திரை | 27.00 |
| துணை | 20.00 |
| வெளிச்சம் வந்தது | 30.00 |
| ராமராஜ்யம் | 12.50 |
| தை பிறக்கட்டும் | 16.00 |
| மாயமான் | 15.00 |
| திரும்பிப் பார்த்தால் | 20.00 |
| நியாயங்கள் மாறும்போது | 40.00 |
| இனிய உணர்வே என்னைக் கொல்லாதே | 75.00 |
| மீண்டும் பெண்மனம் | 27.00 |
| என் வீடு | 28.00 |
| என் மனைவி | 32.00 |
| பண்ணையார் மகள் | 69.00 |
| மறுபடியுமா? | 38.00 |
| இருளில் தொலைந்த உண்மை | 29.00 |
| இன்றும் நாளையும் | 40.00 |
| காவிரியின் கண்கள் | 38.00 |
| கங்கையும் வந்தாள் | 70.00 |
| அரக்கு மாளிகை | 100.00 |
| பவள மல்லி | 30.00 |
| அதிசய ராகம் | 32.00 |
| உறவின் குரல் | 25.00 |
| வனிதா | 27.00 |
| ரோஜா வைரம் | 17.00 |
| புனிதா ஒரு புதிர் | 18.00 |
| கை மாறியபோது | 31.00 |
| நல்லதோர் வீணை | 45.00 |
| மருமகள் | 30.00 |
| வசந்திக்கு வந்த ஆசை | 39.00 |
| புதை மணல் | 35.00 |
| அத்தை | 28.00 |
| ஊன்றுகோல் | 25.00 |
| மரகதம் | 16.00 |
| நாயக்கர் மக்கள் | 100.00 |
| அவளுக்கென்று ஒரு இடம் | 35.00 |
| நிகழ்ந்த கதைகள் | 43.00 |
| வடக்கே ஒரு சந்திப்பு | 15.00 |
| காஷ்மீர் கத்தி | 19.00 |
| இரண்டாவது தேனிலவு | 16.00 |
| கதவு திறந்தால் | 54.00 |
| கழுத்தில் விழுந்த மாலை | 25.00 |
| கணவன் அமைவதெல்லாம் | 50.00 |
| கூறாமல் சன்னியாசம் | 22.00 |
| மனம் ஒரு ரங்கராட்டினம் | 19.00 |
| கூண்டுக்குள்ளே ஒரு பச்சைக்கிளி | 18.00 |
| ஒரு சிவப்பு பச்சையாகிறது | 50.00 |
| பவானி | 30.00 |
| முருகன் சிரித்தான் | 15.00 |
| அவன் ஒரு தென்றல் | 27.00 |




புத்தகங்களை பதிவுத் தபாலில் பெற விலையுடன் ரூ 7.00 சேர்த்து M.O. செய்க V.P.P. க்கு தொடர்பு கொள்க:

**பூங்கொடி பதிப்பகம்,**
14, சித்திரைக்குளம் மேற்கு தெரு, மயிலாப்பூர்,
சென்னை -600 004. தொலைபேசி எண் : 494 30 74

# நுகத்தடியில் சில பக்கங்

ஸ்ரீப்ரியா

மணி ஆறடித்து விட்டது!

வெளியே ஹாலில் அப்பா 'ராம், ராம்' என்று ஜபம் செய்யும் குரல் கேட்டது. ஐந்து மணிக்குள் தூங்கி எழுந்து விடும் அவர் பேப்பர்க்காரன் வரும் வரை ராமஜபத்தில் இருப்பார். அது வந்ததும் உலகமே காலடி யில் வந்து விழுந்துவிட்ட மகிழ்ச்சியில் அதில் ஆழ்ந்து விடுவார். அம்மா இருந்த வரை எப்படியோ அவருக்கு முன் எழுந்து, 'ஃபில்டரில்' இறங்கும் முதல் ஔன்ஸ் 'இக்' டிகாக்‌ஷனில் புதுப்பாலைக் காய்ச்சி மணக்க மணக்கக் காப்பியைக் கொடுத்து விடுவாள். அவருடைய சுவர்க்கம் அந்தக் காப்பி.

அம்மா போய் மூன்று மாதங்களாகின்றன. ராஜியால் ஐந்து மணிக்கு எழுந்திருக்க முடியவில்லை. அவளைச் சொல்லியும் குற்றமில்லை. மத்தியானம் ஓய்வு என்பது அவளுக்குக் கிடைக்காத சுகம். காலையில் எழுந்தால் பத்து மணி ஆபீசுக்கு ஒன்பதரைக்குப் புறப்பட வேண்டும். மாலை ஆறாகும் வீடு திரும்ப. பின் மாலையில் சிறுசிறு வீட்டு வேலைகள்; குழந்தைகளுடன் வீட்டுப் பாடம்; இரவு ஆங்கிலச் செய்திக்குப் பின் வி.சி.ஆரில் ஒரு பாதிப்படம் (மீதிப்படம் மறு நாள்!) படுக்க மணி பதினொன்றாகும். அதிலும் அம்மா போன பின் சமையலறை முழுவதுமாகப் பிடித்துக் கொண்டு விட்டது.

இதற்காகவே ஒரு நாள் நான் எழுந்து, அப்பாவிற்குக் காப்பி போடப் போனேன். 'ஃபில்டர்' சதி செய்து டிகாக்‌ஷன் இறங்காமல் சதி செய்து தட்டித் தட்டிப் பொடி இறங்கி, அப்பாவிற்குக் காப்பி வெறுத்து விட்டது! ஸ்ட்ராங்காகக் காப்பி இருக்க நான் வண்டி பொடி போட்டுவிட்டதாக ராஜி குற்றம் சாட்டினாள். ஒரு மாதம் முன் ஒரு ஞாயிற்றுக்கிழமை என்று நினைவு. (லீவு தானே, மாட்டுப் பெண் தூங்கட்டுமே என்ற எண்ணமோ என்னமோ) அப்பாதானே எழுந்து காப்பி போட்டுக் கொள்ளப் போனார். பிரமாதமாகக் காப்பி கலந்து கொண்ட குஷியில், "காஸை" அணைக்கவே மறந்து கலையான காப்பியுடன் முன் அறைக்கு வந்து விட்டார். ராஜி உள்ளே நுழைந்தபோது வெறும் அடுப்பு எரிய அவள் வயிறு எரிந்தது. முக்கால் மணிநேர எரிவாயு வீண்! அதன் பின் அப்பா உள்ளேயே போவதில்லை! ராஜி எழுந்தவுடன் கொடுக்கும் 'ப்ரூ' காப்பிக்கு அவரும் பழகி விட்டார்!

மணி ஆறரை அடித்தது!

நான் திரும்பிப் பார்த்தேன்! ம்ஹூம், ராஜி அசையவில்லை. எழுப்பலாமா? முதல் நாள் இரவு நடந்த வாக்கு வாதம் நினைவிற்கு வந்து மனதை உறுத்தியது.

"வேலை பார்க்கும் மனைவி, அவள் சம்பாத்தியம் வேண்டுமானால் ஒன்று நீங்கள் கூடமாட உதவி செய்ய வேண்டும். இல்லாவிட்டால் நான் வேலையைத்தான் விட வேண்டும். உங்களோடு படுவதுதான் தீராது. ஆபீசிற்கு அடிமை சாசனம் எழுதிக் கொடுக்கவில்லையே, ஆயுள் பூரா உழைக்க! விட்டு விடுகிறேன்."

"இதோ பார், ராஜி, ஆ. ஊ... என்றால் இது என்ன பயமுறுத்தல்? உங்களுக்கு மட்டும் அடிமை சாசனமா எழுதிக் கொடுத்திருக்கிறேன்" என்று மறைமுகமாகப் பேசுகிறாயா?"

நல்ல வேளை இரண்டு குழந்தைகள். இல்லையென்றால் என்னையும் உதறி விட்டுப் போயிருப்பான் என்றோ!

''புல் ஷிட்! கல்யாணத்தின் போது, பெண்ணானவள் குடும்பத்தை இணையாகச் சுமக்க வேண்டும் என்றுதான் ஒரு நுகத்தடி வைக்கிறார்களாம். நீங்கள் இரண்டு நுகத்தடி எனக்கு வைத்தீர்கள். இரு புறமும் உழைக்க நான்சென்ஸ்!''

''நல்ல வேடிக்கை!'' நான் சிரித்தேன். ''ராஜி, உனக்கெல்லாம் புரோகிதர் முன் காலம் மாதிரி நுகத்தடி எங்கே வைத்தார்? வெறும் ஒரு அடி நீள 'ஸ்கேல்'தானே வைத்



தார்! அதுதான் எந்த வேலையும் வணங்க வில்லை."

"அடடா. இந்த வம்புப் பேச்சுத்தான் மிச்சம்! ஏனெனில் ஏ.ஜீஸ் ஆபீஸ் உத்யோகத்துடன், 'ஃப்ரீலான்ஸ்' எழுத்தாளர் வேறு ஆயிற்றே. நீங்கள் மட்டும் உங்கள் வேலையை எந்த அளவு ஒழுங்காகச் செய்கிறீர்கள்?

என் தங்கை கூடச் சொல்லுவாள் ஒரு ஆபீசில் பொறுப்பான வேலையில் இருப்பவர் இத்தனை கதைகள் நாவல்கள் எழுதித் தள்ள முடிகிறது என்றால், ஒன்று ஆபீசில் வேலை இல்லை என்று அர்த்தம். அல்லது வாங்கும் சம்பளத்திற்கு இவர் வேலை செய்வதில்லை" என்று அர்த்தம் என்பாள்.

"என்ன சொன்னாய். நானா வேலை செய்வதில்லை? அடுத்த 'ப்ரமோஷன்' லிஸ்ட்டில் என் பெயர்தான் முதலில் இருக்கிறது! ஒரு எழுத்தாளனாக, இதோ இன்று கூட ஒரு கடிதம் வந்திருக்கிறது. பார்த்தாயா 'நாரீமணி' பத்திரிகையிலிருந்து என்ன தெரியுமா?"

"தெரியும், தெரியும், பார்த்தேன்! வேலை பார்க்கும் பெண்களின் பிரச்னைகள் என்று ஒரு தலைமை ஆசிரியை, பாங்க் மானேஜர், போலீஸ் அதிகாரி, சொந்த பிஸினஸ் பண்ணுபவள், ரயில்வே அதிகாரி என்று சில பெண்களைப் பேட்டி காணச் சொல்லியிருக்கிறார்கள்! ஆனால் அதற்கு உங்களுக்கு என்ன தகுதி இருக்கிறது? எந்த அளவு நீங்கள் பிரச்னைகளைப் புரிந்து கொள்வீர்கள்? வீட்டில் இருக்கும் என் பிரச்னைகளையே புரிந்து கொள்ளாதவர் நீங்கள். ஏதோ 'போனேன் பார்த்தேன்' என்று பெயர் பண்ணி, உங்களுக்கே உரிய வார்த்தை ஜலங்களைக் கொட்டி எழுதப் போகிறீர்கள்! இது மட்டும் பிரகாரமாகட்டும், மனம் பொருந்தாமல் ஆசிரியர் தயாரித்த வறட்டுச் சொற்கள் என்று நானே விமர்சனம் எழுதுகிறேன் பாருங்கள்." முகத்தைத் திருப்பிக் கொண்டு படுத்தாள் ராஜி.

"ஆமா... பெரிய உத்யோகம் உன்னுடையது. இதைவிட சமூகத்திலும், குடும்பத்திலும், அரசாங்கத்திலும் பெரும் பிரச்னைகளை அனுபவித்து, பிரமாதமாகச் சமாளிக்கும் இன்னும் பல பெண்களையும் கண்டு எழுதி உன்னை 'ஒன்றும் இல்லை' என்று ஆக்கி விடுகிறேன் பார். ஒரு போலீஸ் ஆபீசர், மருத்துவர் என்று இரவு பகல் பாராது பாடுபடும் பெண்களும் இருக்கிறார்கள். ரொம்ப அலட்டிக் கொள்ளாதே. ஏதோ உன் பெண்ணுக்கு 'மார்க்' குறைந்திருக்கிறதே... இன்னும் அக்கறை எடுத்துக் கொண்டு நீ பார்க்கக் கூடாதா என்று கேட்டதற்கு இத்தனை பேச்சா உனக்கு...



## அவசர மேக்கப்



என் பெண்ணின் பள்ளியில், திடீரென்று ஒரு டான்ஸ் நிகழ்ச்சி ஏற்பாடாகி, என் பெண் பங்கேற்க வேண்டி வந்து விட்டது. அவசரமாக வீட்டுக்கு ஓடி வந்து, சீக்கிரம் என்னை மேக்கப் செய்து அனுப்பு என்றாள். முக்கியமாக, விரல்களுக்கு நிறம் தீட்ட வீட்டில் அல்தா போன்ற சாதனம் இல்லை. வீட்டில் இருந்த 'ரோஸ் எஸன்ஸை, எடுத்து பஞ்சில் தோய்த்து விரல்களுக்குப் பூசி விட்டேன். வாசனை ஜமாய்க்க விரல்கள் சிவக்க வெகு அழகாக இருந்தது.

— வி. ஜெயலக்ஷ்மி

சே.... சே...." நானும் முதுகைத் திருப்பிக் கொண்டு படுத்தேன்.

இதோ, பொழுது விடிந்து விட்டது. எனக்கும் அப்பாவிற்கும்... ஆனால் என் ஸ்திரீ, ரத்னத்திற்கு?

கதவு மெள்ளத் தட்டப்பட்டது. அப்பா தான்!

"ரகு, மல்லம்மா வந்திருக்கா பாரு."

நான் போர்வையை உதறிவிட்டு எழுந்தேன்.

"என்ன, மல்லம்மா, இந்தக் குளிரில் இத்தனை சீக்கிரம் வேலைக்கு வந்து விட்டாய்!"

"ஏமி சேயாலண்டி? இங்கே ஆறரைக்கு வந்தால்தான், ஏழரைக்கு மாடி வீடு. அப்புறம் பஞ்சாபிக்காரங்க வீட்டிலே எட்டரைக்குத்தான் எழுந்திருப்பாங்க. பத்து மணிக்கு டாக்டரம்மா வீடு. அம்மா 'நைட் ட்யூட்டி' முடிஞ்சு வருவாங்க. பாவம், கைக் குழந்தை இருக்குன்னு அம்மா ஒரு வருஷமா 'நைட் ட்யூட்டி' பண்ணறாங்க. பகலிலே புருஷன் ஆபீஸ் போனால் இவங்க காவல், ராவுலே அவர் பார்த்துக்குவார் குழந்தையை!. அப்புறம் நான் 'ரெண்டாம் சுற்று' என் மத்தியான வேலைகளை ஆரம்பிக்க வேணும். இப்பக்கூட சாஸ்திரி ஐயா வீட்டிலே வாசல் தெளிச்சு கோலம் போட்டு, வீடு பெருக்கிட்டுத்தான் வரேன்."மல்லம்மா பாத்திர ஓசைக்குச் சரியாகத் தன் வெண்கலக் குரலை எழுப்பினாள்.

"அட..., கையில் கடியாரம் கட்டிக்கிட்டுன்னா வேலை செய்யறே!"

"எனக்கெதுக்குங்க கடியாரமும் ஒண்ணும். நாலு மணிக்குத் தானாக முழிப்புக் கொடுத்துடும். சப்பாத்தி, பாஜி பண்ணி எங்க வீட்டுக்காரரை அனுப்பிட்டுப் பசங்களுக்கும் கட்டி வச்சிருவேன். இப்ப எட்டு மணிக்கு என் மகள் வந்து எல்லார் வீட்டிலேயும் கொடுக்கிற மிச்சம் மீதியை எடுத்துப் போவாள். அதைச் சாப்பிட்டதும் பசங்க பள்ளிக்கூடம் போவாங்க. ம்... ஆமாம் எனக்கு 'சாய்' எங்கே?" மல்லம்மா பேச்சோடு காரியத்திலும் கண்ணாக இருந்து முடித்து காப்பியை எதிர் பார்த்தாள்.

மல்லம்மா நான் தந்த மூன்றாந்தரக் காப்பியைச் சுவைத்தபடி, "இதுதான் நாலு வீட்டிலேயும் எனக்குத் தரும் ஜீவாம்ருதம். இந்தப் பலத்திலே மூணு மணி வரை ஓட்டிடுவேன். ஆமாம். அம்மகாரு எக்கட? கனப்படலேதே!" என்று விசாரணையில் இறங்கினாள். "ம் பெத்தம்மா போனப்பறம் எல்லாமே போச்சு..." அவள் ஏதோ முனகிக் கொண்டே முதல் நாள் மீதி வைத்திருந்த என் வீட்டு உப்புமா பொட்டலத்தை எடுத்துக் கொண்டு பறந்தாள். என் பதிலுக்குக் காத்து நிற்க அவளுக்கு ஏது நேரம்?

"ஏண்டா, ராஜிக்கு உடம்பு சரியில்லையா?" அப்பா மெல்லக் கேட்டார்.

"ஆமாம் அப்பா, கொஞ்சம் தலைவலி."

"நீ காப்பியையும் ஒரு சாரிடானும் கொண்டு போயிக் கொடு." பாவம் அப்பா. அவன் தலைவலியே தான்தான் என்று தெரியாமல் பேசினார்.

"ம்.... ம்.... கொஞ்சம் தூங்கட்டும்." நான் மெல்லிய குரலில் பதிலளிக்கும் முன் வாசலில் குரல் ஒன்று கேட்டது.

"கூரக்காயம்மால்." (காய்கறி).

"ரகு, பாரு, அவளிடம் வாழைக்காய் சொல்லியிருந்தேன்."

"பார்க்கிறேன், அப்பா."

"ம்... 'மோண்டா மார்கெட்'டுக்குப் போனால் கறிகாய் மலி வாயிருக்கும். யாருக்கு நேரம் இருக்கிறது? இவள் தருவது தான் கறிகாய். நம்ம வீட்டுச் சமையலைத் தீர்மானிப்பது அவள்தான்." - அப்பாவின் கூற்று தவறல்ல! ஆனால் யார் அந்த ஈரத்திலும், கூட்டத்திலும், மந்தைகளுக்கு நடுவிலும் போவது?

அவளுடைய கனத்த கூடையை இறக்க உதவினேன்.

"அம்மாலேதா, ஏமி காவாலே? பொட்லக்காயி, பீரக்காயி...." அவள் அடுக்கினாள். நான் அவளையே பார்த்தேன். கூடையை இறக்கிய என் கை வலித்தது. ஆனால் இவள் அதைச் சுமந்து தெருத் தெருவாக...

"ஏமி சூஸ்தாரு? இளசு காய்கறி! காலங்கார்த்தாலே பெரிய மார்க்கெட் போய் எடுத்து வந்தேன். பெரியம்மாதான் போணி பண்ணுவாங்க. மகாலட்சுமி! அந்தப் பழக்கம்தான் இன்னமும் முதலில் இங்கு வரேன். ம். சீக்கிரம் எடு! பத்து மணி வரை தெருவிலே சுத்திட்டு, அப்புறம் வீட்டு வாசலிலே போய்க் கடை போடணும். ஒன்பது வரை என் பையன் இருப்பான். அப்புறம் என் வீட்டுக்காருக்குத் துணை நான் இருக்கணும்.

"ஏன், அவர் வேலைக்குப் போவறில்லையா?"

"ஓ உனக்குத் தெரியாதா, தொரை? மூணு வருஷம் முன்னால் வரை 'அது'தான் தள்ளுவண்டியிலே எடுத்துண்டு போய் தெருத் தெருவா வியாபாரம் பண்ணி வரும். படுபாவிங்க. ஒரு சண்டையிலே, பழைய ஹைதராபாதுலே கூடப் பழகினவனே, ஜாதி வெறியிலே அவர் காலை வெட்டிட்டான்! அப்புறம்தான் நான் சுமக்கறேன். அது வீட்டோடு இருக்கு. அட... எடு சாமி சீக்கிரம்."

"ஏய், ரங்கம்மா, அங்கே என்ன கதை பேசிப் பொழுதைப் போக்கறே. ஒரு எழவும் வேண்டாம் போ! இவர் உன் வாயை வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கிறாராக்கும்!" ஜன்னல் திரையை விலக்கி ராஜி, காளியாகக் காட்சி தந்தாள்.

"துரை சானியம்மாவுக்கு என்ன கோபம்? உடம்பு சரியில்லையா? சரி. சரி பெரிய ஐயா, நீயாவது வந்து நாலணா கொத்துமல்லியாவது எடு. ஜல்தி, ஜல்தி ரா."

அவள் கைக் கொத்துமல்லி இடம் மாறியபோது அப்பா என்னை ஒரு மாதிரி பார்த்துக் கொண்டு உள்ளே போனார்.

"பூஜைக்குப் பூ வரவில்லையா இன்னமும், ரகு?" அப்பா பூஜையறையிலிருந்து குரல் கொடுக்கும் முன் வாசல் மணி ஒலித்தது.

"பூஜைப் பூ... சார்! அம்மானி பிலுவண்டி. ரோஜாப்பூ இருக்கு. வேணுமா. கேளு. அவங்க ஆபீஸ் போயிடுவாங்களேன்னு ஓடி ஓடி வந்தேன்."

பூஜைப்பூ பொட்டலத்துடன் உள்ளே திரும்பினேன். "அம்மாவிற்கு உடம்பு சரியில்லை. அம்மா அவங்க ஆபீஸ் போகவில்லை!" நான் முடிக்கும் முன் பிரசன்னமானாள், ராஜி.

"இது வந்துடுத்தா? இதோ பாரு. நீ பூஜைப் பூவுடன் இரு. உனக்கு இங்கிருந்த சலுகையெல்லாம் காலம் ஆயிடுத்து! ரோஜாவும் வேண்டாம். ஒன்றும் வேண்டாம். உன் கையால... போய்ச் சேர்."

பூக்காரி முகம் வாடியது; மெல்ல படியிறங்கினாள். "லட்சுமி, ரோஜாவை எங்கிட்டக் கொடு, அம்மா. அம்பாளுக்குச் சூட்டுகிறேன்." அப்பாதான் கூப்பிட்டார். கண் நிறைந்த நீருடன் அவள் இரண்டு காலைத் தொட்டுக் கும்பிட்டுச் சென்றாள்.

"ராஜி, உனக்கு அவளிடம் வாங்கப் பிடிக்காவிட்டால், பொதுவாகச் சொல்லி மறுத்து விடு! வைதவ்யத்தைக் 'குத்திக் காட்டாதே. பாவம் சின்னப் பொண்ணு. வாழ்க்கையில் எல்லாவற்றையும் இழந்தவள்தான் அதற்காக வியாபாரத்தை விட முடியுமா? அல்லது பூவும் பொட்டும் வைத்து ஊரை ஏமாற்ற முடியுமா? நாள் பூராத் தெருத் தெருவாகச் சுற்றினால் அரை வயிற்றுக் கஞ்சிக்காகும்." அப்பா மன வருத்தத்துடனேயே பேசினார்.

"உனக்கு உடம்பு முடியவில்லையா? படுத்துக் கொள். சமையலை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்." அவர் பூஜையறைக்குள் புகுந்தார். நான் சமையல் அறைக்குள் செல்வதா வேண்டாமா என்று திகைத்து நின்ற போது, எனக்குக் கை காட்டுவது போல ராஜி மீண்டும் எங்கள் அறைக்குள் நுழைந்தாள். ஆனால், "இந்த வீட்டில் படுக்கையாவது, ஒரே படுக்கைதான். இன்று ஆபீசில் ஒரு 'ஸ்டேட்மெண்ட்' வேறு போயாக வேண்டும்." அவள் உடைகளை எடுத்த வேகம் ஆபீசுக்குப் போகப் போவதைக் காட்டியது. நான் ப்ரட் டோஸ்ட்டரை எடுத்து 'ப்ளக்'



சரஸ்வதி பூஜை கோலம். 13 புள்ளி, 13 வரிசை
— உமா மகேஸ்வரி

**சிக்கு கோலங்களில் கலபமான குழப்பல் கோலங்களை வெளியிட்டிருந்தீர்கள். இரண்டு, மூன்று புள்ளிகளிலேயே போடும் சில சிக்கு கோலங்கள் இதோ -**


















*(பாம்பு கோலத்தை புள்ளிகள் அதிகம் வைத்து நடுபுள்ளியிலிருந்து ஆரம்பித்து அதிகமாக ஆக்கிக் கொண்டே போகலாம்.)*

— ஜி. கன்யாகுமாரி

இல் சொருகினேன், டிபன் தயாரிக்க. குக்கர் சீற ஆரம்பித்து. சிப்ஸ் டப்பா, பொடி வகைகளை எடுத்து மேஜைமேல் அடுக்கினேன். தயிர் இருக்கவே இருக்கிறது. சாப்பாடு ரெடி!

"அம்மா.... அம்மா", என் பெண் உமா பரபரக்க ஓடி வந்தாள். "டாடி, மம்மி எங்கே? அம்மா ட்யூஷனுக்குச் சொன்ன அந்த டீச்சர் வந்திருக்கிறார்."

"ட்யூஷனா? யாருக்கு உமா?"

"எனக்குத்தான் அப்பா. 'நியூமாத்ஸ்' தாத்தாவிற்குத் தெரியாது. அம்மாவிற்குப் புரியாது. அதனாலே...."

ராஜி 'பாத்ரூமில்' இருந்ததால் அப்பா வெளியே வந்தார். நான் உள் வாங்கினேன். இந்த மாதிரி 'லேடீஸ் டம்' நான் வலுவில் பேசப்போய், இன்னொரு குருக்ஷேத்திரத்தை அப்பா முன் உண்டாக்க விரும்பவில்லை.

"நீ எங்கே டீச்சர்?"

"இல்லை, ஸார். நான் எங்கேயும் சொல்லிக் கொள்ளும்படி டீச்சர் இல்லை. வந்தவுடனே நான் இவ்வளவு பேசறேனேன்னு தயவு செய்து நினைக்காதீங்க. எனக்கு ட்யூஷன்ஸ் எவ்வளவு முக்கியம்னு சொல்லணும். கல்யாணத்திற்கு முன் ஏழெட்டு வருடங்கள் வேலை பார்த்தேன். கல்யாணத்திற்காக வேலையை விட்டேன். அப்புறம்தான் தெரிந்தது அவரைப் பற்றி, வேலையை விட்டு விட்டுச் சென்றேன். ஆபீசிலிருந்து வரும்போது குடித்திருப்பார். ஆபீஸ் போகாமலே குடிப்பார்; ஆபீஸ் போய் திரும்பி வராத அளவிற்குக் குடித்தார்! சொந்தப் பணம், கடன் வாங்கிய பணம், நகைகளை விற்ற பணம், ஆபிசில் 'லோன்' எடுத்த பணம், கடைசியில் கையாடிய பணம் வரை போயிற்று! நான்கு வருடங்கள்! இந்த ஊருக்கு வந்து பாடுபட்டோம்! சின்னச் சின்ன வேலைகள். குடிப்பழக்கம் போயும் பணப் புழக்கம் ஏற்படவில்லை. மூன்று குழந்தைகள்! பிள்ளைகளைப் படிக்க வைக்க வேண்டும். பெண் கல்யாணத்தைப் பற்றி நினைக்காவிட்டாலும் படிக்க வைத்து ஒரு வேலையில் அமர்த்த வேண்டும். கடைசியில் மறுபடி நான் வேலைக்குப் போக முடிவெடுத்த போது வயதாகி விட்டது! இனி நிரந்தர சர்க்கார் வேலை இல்லை; தனியார் பள்ளியில் மொத்தமாக ஒரு சிறு தொகை சம்பளம். உழைப்பில் குறைவில்லை; ஆனால் ஊதியம் பிழைப்புக்குக் குறைவாகவே இருந்தது. அதனால் இப்படி காலையில் இரண்டு. மாலையில் இரண்டு ட்யூஷன்கள்."

"அப்போது வீட்டிலே யார்? மாமியாரா?"

"இல்லை, ஸார். காலையில் ஏழு மணி வரை நான் முடித்தது போக மீதியை என் பெண் முடிப்பாள். சாயங்காலம் நான் வேலைகளை முடித்து உட்கார்ந்தால் எட்டு மணிவரை பாடம் எடுப்பேன்."

"அப்படியானால் உங்கள் வீட்டுக்குத்தான் குழந்தை வரவேண்டுமா?" புடைவைக் கொசுவத்தைச் சரி செய்தபடி ராஜி வந்தாள்.

"ஆமாம், அம்மா. வீடு வீடாகப் போவது அவருக்குப் பிடிக்காது."

"ஆகா, அதைச் சொல்ல அவருக்கு ஏது உரிமை?" ராஜி ஆக்ரோஷத்துடன் கூறினாள்.

"அவருக்கு இல்லாத உரிமையா? என்னானாலும் மனைவியின் பாதுகாப்பில் கணவனுக்குக் கவலை இருக்காதா?" அவள்



அண்மையில் எங்கள் வீட்டு விசேஷத்திற்கு நிறைய தேங்காய்கள் 'உடைக்க வேண்டியது' இருந்தது. உடைத்த தேங்காய்கள் மீதமாகி விடவே, அவற்றை வெளியே வைத்தால் அழுகிவிடும், அதே சமயம் பிரிட்ஜில் வைத்தால் காய்ந்து விடுமே. அண்ணி குழம்பிக் கொண்டிருந்தார்கள். நான் அவர்களிடம் தேங்காய்களை பத்தைகளாக்கித் தண்ணீரில் போட்டு பிரிட்ஜில் வைக்கச் சொன்னேன். தேங்காய் காயாமலும், சுவை குறையாமலும் நீண்ட நாட்களுக்கு உபயோகப்பட்டது.

— ஆர். லதா ராமநாதன்

வியப்புடன் பதிலளித்தாள்.

"சே. இவன் ஒரு கணவன்! இவனுக்கு ஒரு பத்தினி!" ராஜி தலைத்துண்டை அவிழ்த்து உதறினாள்.

"என்னமோ நான் அவருக்குள் அடக்கம்... அதனால்தான் அவர் கைநழுவிப் போகாமல் என்னுள் அடங்கினாரோ, என்னமோ."

ராஜி ஒரு கணம் சிந்தித்தாள். "சரி, உமாவிற்குக் கணக்குத்தான் 'வீக்'..." சற்று நிதானித்தாள். "ஆமாம், நீங்கள் எதற்கு இங்கு நிற்கிறீர்கள்?" சட்டென்று என்னை முறைத்தாள். நான் உள்ளே நழுவினேன். அந்தம்மாள் புறப்பட்டது புரிந்தது.

ராஜியின் காலடி இடியோசை என் அறைக்குள் புகுந்தது. "இன்றைக்கு என்ன ஆபீஸ் இல்லையா? அல்லது 'கட்' அடித்து விட்டு உங்கள் பேட்டிக்கு வேட்டையாடப் போகிறீர்களா? எப்படியாவது ஒழியுங்கள் எனக்கு நேரமாகி விட்டது. என்னை ட்ராப் பண்ணிவிட்டு எங்காவது 'உலா' போங்கள்."

"நான் எங்கேயும் போகப் போவதில்லை, ராஜி. தேங்க்ஸ் ஃபார் யுவர் கோபம் அண்டு தூக்கம். என் பேட்டி முடிந்து விட்டது."

"என்ன, எப்படி?"

நான் சிரித்தேன், சின்னதாக. "ராஜி, நாற்காலி, மேஜை போட்டுக் கொண்டு, மின் விசிறி கீழே உட்கார்ந்து வேலை செய்யும் பெண்கள் மட்டுமா, 'உத்யோக புருஷிகள்? ஆனால் நான் கண்டது? தொழில் காரன்டி இல்லாத, நிரந்தர வருமானம் இல்லாத கணவனின் முழு ஆதரவு, சமூகத்தில் மரியாதை இல்லாத, ஆனால் உடலை வருத்தி, பொறுப்புணர்ந்து, உழைப்பில் ஆணோடு பெண் சமமாக நிற்கும் சிலரைப் பார்த்து விட்டேன். அவர்களும் முன்னேற்றப்பட வேண்டிய, அனுதாபப்பட வேண்டிய பெண் உழைப்பாளிகள்தான், ராஜி. ஒரு மல்லம்மாவின் சுறுசுறுப்பு, ரங்கம்மாவின் குடும்பச் சுமை, லட்சுமியின் பேரிழப்பு, குடிகாரனின் மனைவியின் பரிதவிப்பு, கத்திமேல் நடப்பது போல அவள் பெண்ணின் வேலை. இதெல்லாம் உனக்குப் புரியுமா, ராஜி?"

ராஜி ஒரு கணம் திகைத்து நின்றாள். அவள் மனத்திலும் அதே உத்யோக புருஷிகள் நிழலாடியிருக்க வேண்டும். நிஜமாக ஓடி ஓடி உழைத்தும் அரை வயிறு, கால் வயிறு... ஓ அவர்களும் உண்மையாக சம்சாரம் என்ற நுகத்தடியில் பூட்டப்பட்டுள்ளவர்கள்!

"அப்பா, ஒரு நிமிஷம் இருங்கள் நல்ல காப்பி போட்டுத் தருகிறேன். அப்புறம் உபநிஷத் கீதை பாராயணம் ஆரம்பியுங்கள். அதற்குள் சமைத்து விடுகிறேன். நான் இன்று ஆபீசிற்கு லீவு."

நான் வியப்புடன் ராஜியை நோக்கினேன். அவள் அம்பாள் படத்திலிருந்த ரோஜாவைக் கூந்தலில் சூட்டிக் கொண்டு சமையலறைக்குள் நுழைந்தாள்.

சமீபத்தில் எங்கள் வீட்டில் நடந்த ஒரு சுபநிகழ்ச்சியில் சாப்பிட்ட பின் வெற்றிலைப் பாக்கு போட்டவர்கள், வெற்றிலைப் பாக்கு வைத்திருந்த டேபிள் மேல், கீழே என்று பாக்குப் போட்டவர்கள், வெற்றிலைக் காம்பு என்று குப்பைகளைப் போட்டுவிட்டுச் சென்றனர். அவ்வாறு அங்கு குப்பை சேர்வதைத் தவிர்க்க இனி டேபிளின் கீழ் ஒரு குப்பைக் கூடை அவசியம் வைக்க வேண்டும் என முடிவு செய்தேன். இதை மற்ற சகோதர, சகோதரிகளும் பின்பற்றலாம்.

— ஆர். ஜானகி



# ஒரு இழையோடு நெருக்கம்



கச்சிதமான பொருத்தம்
மேனி பேசிடும்
உன்னத உணர்வுகள்






உள்ளாடை

100% பருத்தி

APARNA-M/SF/358/95

வெஸ்ட்கள் : • எக்ஸலண்ட் • இமேஜ்
ப்ரீப்கள் : • ஸ்பானிஷ் • ப்ளூஸ் • சார்ம்ஸ்
பேண்டிகள் • மெலோடி • ஃபேதர்டச்

தயாரித்தவர்கள் : ஸ்நேகா ஃபேப்ஸ். திருப்பூர்.

**விநியோக விசாரணைகளுக்கு தொடர்பு கொள்க :**

M/s. ஆனந்த் அசோசியேட்ஸ், 1212, 2வது குறுக்குத் தெரு.
நாகப்பா பிளாக், பெங்களூர் - 560 021. போன் : 3325258.





# காமதேனு அக்ரோ பார்ம்ஸ்
# IN
# மதுராந்தகம்
## PHASE - II

**தேனு யூனிட்டுகள் முதலீடு 36 மாதங்களில் இரட்டிப்பாகிறது!**

**டெபாசிட்டுகளுக்கு 21% மாத வட்டி வழங்கப்படும்!**

**உங்களது மகிழ்ச்சிகரமான எதிர்கால நல்வாழ்விற்கு வழிகாட்டுகிறது.**
**நாங்கள் உழைக்கிறோம். – நீங்கள் பலன் பெறுகிறீர்கள்.**

காமதேனு அக்ரோ பார்ம்ஸ் திட்டத்தின்படி உங்கள் பெயரில் ஒரு யூனிட் 6000 சதுர அடி நிலம் வாங்கி எங்களுக்கு 10 வருடங்கள் குத்தகைக்கு அளிக்கிறீர்கள். நாங்கள் முதல் வருடத்தில் இருந்து வரியில்லாத வருமானம் பெற்றுத் தருகிறோம். 10 வருட முடிவில் உங்களது முதலீட்டைவிட 2½ மடங்குக்கும் அதிகமான வருமானத்தைப் பெறுவதுடன் மூன்று மடங்கு விலைமதிப்பான நிலத்தையும் சொந்தமாகப் பெறுகிறீர்கள்.

மதுராந்தகத்திற்கு அருகில் காமதேனு அக்ரோ பார்ம்ஸ் நிறுவனத்திற்குச் சொந்தமான வளமான பண்ணை நிலத்தில் விவசாய தொழில் நுட்ப வல்லுநர்களின் மேற்பார்வையில் சூரியகாந்தி மற்றும் ஏற்றுமதி மதிப்புமிக்க தாவர பணப்பயிர் வளர்க்கும் திட்டத்தை மேற்கொண்டு இருக்கிறோம்.

### எங்களது வெற்றிகரமான இரண்டாவது திட்டம்.




ஏற்கனவே ஓம் சக்தி கார்டன் தென்னந்தோப்பு பண்ணை திட்டத்தை மேல்மருவத்தூருக்கு அருகில் வெற்றிகரமாக செயல்படுத்திய எங்களது இரண்டாவது திட்டம் இது.

ஒரு யூனிட் 2½ கிரவுண்ட் – 6000 சதுர அடி விலை ரூ. 23,500/– மட்டுமே.

முதல் வருடமே முன் தேதியிட்ட செக் வழங்குகிறோம்.

- 1 முதல் 3வது வருடம் வரை வருடத்திற்கு ரூ. 3,500/–
- 4ஆவது முதல் 8ஆவது வருடம் வரை வருடத்திற்கு ரூ. 4,500/–
- 9ஆவது முதல் 10ஆவது வருடம் வரை வருடத்திற்கு ரூ. 5,500/–
- வரி விலக்கு பெற்ற வருமானம்.
- விரும்பினால் 5 வருட முடிவில் கம்பெனிக்கே விற்கும் வசதி.

**☐ தவணை முறையில் வாங்கும் வசதியும் உண்டு**

விவரங்களுக்கு
**காமதேனு ஹாலிடே ரிசார்ட்ஸ் (பி) லிட்**
தலைமை அலுவலகம் :
108, செமியர்ஸ் ரோடு,
தேனாம்பேட்டை, சென்னை – 600 018.
போன் : 493 78 56
கிளை அலுவலகம் :
3, கீழ் தளம்,
ஹாங்காங் காம்ப்ளக்ஸ், 9, ராமநாதன் தெரு,
சென்னை – 600 017.

நான் காமதேனு அக்ரோ பார்ம்ஸ் திட்டத்தில் சேர விரும்புகிறேன். எனக்கு விண்ணப்ப பாரம் / பிரதிநிதி அனுப்பவும்.

பெயர்.........................................

தொழில்.........................................

முகவரி.........................................

.........................................

ADVT.

# சொல்ல விரும்புகிறோம்

❖ "முதல் பக்கக் கட்டுரையில் சாதனை படைத்த அத்தனை பேருடைய வாழ்க்கையிலும், யாரும் அதை அவர்களுடைய கையில் கொண்டு வந்து தரவில்லை. மிகப் பெரிய போராட்டம் நடத்தித்தான், மனவுறுதி, தன்னம்பிக்கையுடன் செயல்பட்டுத்தான் சாதனை படைத்தார்கள்" இந்த வரிகள் மிகச் சிறப்பானவை. உண்மையில் உயர்ந்த நிலையில் இருக்கும் எல்லோரை யும் பார்த்து பொறாமைப் படத்தான் தோன்றுமே தவிர, சிந்திக்கத் தோன்றாது. சிந்திக்க வைக்கும் வரிகள்.

**ஈஸ்வரி, சென்னை - 41**

❖ கண்ணை "கண்" போல பாதுகாக்கணும் அதே போல மங்கையர் மலர் இணைப்பையும் பாதுகாக்கணும். எத்தனை, எத்தனை நோய்களுக்கு விளக்கங்கள், தடுப்பு முறைகள். இதுபோல 'காது' பற்றி சிறப்பிதழ் விரைவில் வரும் என்று எதிர்ப்பார்க்கிறேன்.

**மாலதி, சென்னை - 41**

❖ நாங்கள் திருநள்ளார் சென்று 'சனீஸ்வரன்' தரிசனம் செய்தும் அப்போது கிடைக்கப் பெறாத திருப்தி இம்மாதம் மலரில் அத் திருத்தலத்தைப் பற்றிய செய்திகளைப் படித்தவுடன் ஏற்பட்டது. மேலும் புறங்கால் விட்டு கால் கழுவுவது தவறு என்று அரைகுறையாக அறிந்திருந்த நான் இப்போதுதான் முழுமையாகத் தெரிந்து கொண்டேன். அத்துடன் 7½ ஆண்டு சனியின் விபரங்களையும், அதன் மந்த நடையை விஞ்ஞான பூர்வமாக விளக்கியமையும் அறிந்தேன். மகிழ்ந்தேன்.

**த. சாந்தி, திருவாரூர்.**

❖ 'மங்கையர் மலர்' வந்த உடன் மிகவும் ஆவலுடன் படிக்கும் பகுதி நவக்கிரக நாயகர்கள் தலைப்பில் வரும் ஆன்மீக தெய்வ தரிசனக் கட்டுரைகள். வரப்போகும் இரண்டு மாதத்துடன் (ராகு+கேது) இப்பகுதி முடிந்துவிடுமே என நினைக்கும் போது வருத்தமாகவே உள்ளது.

**விஜயா முரளி, சென்னை - 33.**

❖ "முதியோர் பிரச்னைக்கு ஒரு வித்தியாசமான தீர்வு!" மிகவும் சுருக்கமாக, எளிமையாக, இனிமையாக யாரொருவர் மனமும் புண்படாதவாறு இருந்தது.
கடமை, பொறுப்புணர்வு இவைகளை நினைவில் கொண்டால் மன நிம்மதி கிடைக்கும் என்ற அறிவுறுத்தலும், புளியம்பழ ஓட்டுக்கிணையாக ஒட்டியும் ஒட்டாமலும் பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்ற வாசகமும் கட்டுரைக்கு முத்தாய்ப்பாக அமைந்தது பாராட்டுக்குரியது.

**வைதேகி, பாண்டிச்சேரி.**

❖ தனது வயிற்றைத்தானே கிழித்துக் கொண்ட பெண்ணைப் பற்றி படித்து மனம் கனத்துப் போனது! எவ்வளவோ பெண்கள் முன்னேற்றம் கண்டபோதிலும், 'இப்படியும் சில சகோதரிகள்' பலியாவதற்குக் காரணம் கல்வியறிவு இல்லாமைதானே? உலகம் முழுவதும் பெண்களின் நிலை பற்றிய கட்டுரை படித்து கஷ்டமாக இருந்தது!

**கி.உமாமகேஸ்வரி, பன்னீர்புரம்.**

❖ ஆயிரக்கணக்கில் கொட்டி மருத்துவம் செய்துவரும் பெண்களுக்கு, குறைந்தவிலையில் மூலிகை மூலம் குணமடைய வழிகாட்டிய மங்கையர் மலருக்குப் பாராட்டுக்கள்! கர்ப்பபை கோளாறுகளுக்குத் தந்த விளக்கங்களும் மருத்துவக் குறிப்புகளும் மிகவும் பயன் உள்ளதாக இருந்தது!

**கி.பார்வதி, குரும்பூர்.**

❖ அறுபது வயது மடிசார் மாமி தன்னம்பிக் கையுடனும், விடாமுயற்சியுடனும் இருந்து தோல் பொருள் தயாரிப்புப் பயிற்சியை முடித்த செயல் பாராட்டுக்குரியது என்றாலும் தொட்டதற்கெல்லாம் வயதைக் காரணம் கூறும் பெரியவர்களுக்கு இது ஒரு படிப்பினையும் கூட!

**ஆரூர் தெட்சி பவித்திரமாணிக்கம், திருவாரூர்.**

❖ 'குப்பையிலே குருக்கத்தி பூப்பதில்லையோ' எனக் குறிப்பிடுவார்கள். அக்கா அக்கா என சீனியர்களை அன்பினால் இக்குமுக்காட வைத்து பின் அவர்களுக்கு விடலைப்பசங்களால் இன்னல் நேரிட்ட போது தன் கிராமத்து வீரத்தைக் காட்டி பிரமிக்க வைத்த தேவகி ஓர் புதுமை, புரட்சிப் பெண்.

**க. சுந்தரா, சென்னை - 44.**

குப்பையிலே இருக்கத்தி பூப்பதில்லையோ...


அட்டை வண்ணப்படம்: டி.சி.நாகேஷ்
உள்படம்: சுரேஷ் படத்தில்:நளினி ஷ்யாம்
இணைப்பு அட்டைப்படம்: கஜலக்ஷ்மி
ஓவியம்: வேதா



# விவேகானந்தர் நடத்திய காளி பூஜை

இந்திய கலாசாரத்தின் மகிமையை அந்நிய மண்ணிற்கு அறிமுகப்படுத்தியவர்களின் பெயர் வரிசையில் சுவாமி விவேகானந்தருக்கு முதல் இடம் உண்டு. இம் மகான் தம் வாழ்நாளின் முற்பகுதியில் உருவ வழிபாட்டு முறைக்கு எதிர்ப்பு தெரிவித்ததோடு மட்டுமல்லாமல், ராம கிருஷ்ணரிடமும் தன் சக சந்நியாசிகளிடமும், தெய்வ உருவ வழிபாடு முறை தேவையில்லாத ஒன்று என்று பலமுறை வாதிடவும் செய்திருக்கிறார். பிறகு பலவித சம்பவங்களாலும், குரு ராமகிருஷ்ணரின் உபதேசங்களாலும் தன் கருத்தை மாற்றிக் கொண்ட சுவாமி விவேகானந்தர் அத்வைத சித்தாந்தத்தில் தீவிர ஈடுபாடுடையவரானதுடன் முதன் முறையாக காளி பூஜையினை பேலூர் மடத்தில் தான் இறக்கப் போவதற்கு சில மாதங்கள் முன்பு நடத்தினார்.

ஆன்மீகத்தின் மிக உயர்ந்த நிலையை அடைந்த அந்த மகான் சாதாரண மக்களையும் திருப்தி படுத்தும் எண்ணத்துடன், சாஸ்திர சம்பிரதாயப்படி மூன்று நாட்களும் (அஷ்டமி, நவமி, தசமி) காளி பூஜையினை தன் மேற்பார்வையில் மிக விமரிசையாகக் கொண்டாடினார். பேலூர்மட சுற்று வட்டாரம் முழுமையும் விழாக் களைகட்டியது.



தீயசக்திகள் அனைத்தையும் சம்ஹரிக்கும் பத்துக் கைகளையுடைய காளி சிலையை வாங்குவதிலிருந்து, பூஜைக்குரிய அனைத்துக் காரியங்களும் மட சந்நியாசிகளாலும், இல்லறத்தில் ஈடுபட்ட சிஷ்யர்களாலும் பகிர்ந்து கொள்ளப் பட்டு காளி பூஜை பலரும் வியக்கும் வண்ணம் விமரிசையாக நடந்தேறியது.

- கீதா மோஹன்

# ஆரோக்கியம் மட்டுமல்ல!
# பல ஆதாயங்களும் கூட...



## Supreme

Pure, double refined
Vegetable Oil

சுப்ரீம் சமையல் எண்ணெய்
நலம் பல தந்திடும்
சமையலின் தரம்
உயர்ந்திடும்.




- வைட்டமின் 'ஈ' நிறைந்திருப்பதினால் சமைத்த உணவு பொருட்களை கெடாமல் அதிக நேரம் பாதுகாக்கிறது.
- மணமற்றது. உணவின் ருசியை மாற்றாதது.
- மெழுகுத்தன்மையற்றது. ஆகையால், குறைந்த அளவே தேவைப்படுகின்றது.
- பொரிப்பதற்கு மிகவும் சிறந்தது, சுப்ரீம்.



**சுகம்... மேலான நலம்... சுப்ரீம்.**

**S.S.D. OIL MILLS COMPANY LTD.**
• Madras Ph: 8281803 • Cochin Ph: 350640 • Bangalore Ph: 367330 • Guntur Ph: 223572 • Orissa Ph: 410362

Calibre 19-8-95

**பொருள் : லஞ்ச் பாக்ஸுக்கு ஏற்ற உணவு**


• சரஸ்வதி

# இம்மாத இல்லத்தரசி

## முதல் பரிசு
## ரூ. 300/-
## திடீர் புளியஞ்சாதம்

உங்களது மகனோ (அ) மகளோ 8 மணி ஸ்கூலுக்குப் புறப்படுவதற்கு 7½


• ஜெயலட்சுமி

மணிக்கு இன்றைக்கு லஞ்சுக்கு புளியஞ்சாதம் தான் வேண்டும் என்று அடம்பிடிக்கிறார்கள் நீங்கள் 'என்னடா இனி மேல் புளிக்காய்ச் சல் காய்ச்சி சாதம் பிசைய நேரமில்லையே' என்று கவலைப்பட வேண்டாம். 5 நிமிடத்தில் சுவையான புளிக்காய்ச்சல் சாதம் ரெடி செய்து விடலாம்.


• சியாமளா


• காவேரி

*தேவையான பொருட்கள் :*

கொட்டை நீக்கிய புளி – சிறிது (தேவையான அளவு),
கடுகு – 1 டீஸ்பூன்,
உ. பருப்பு – 1 டீஸ்பூன்,
கடலைப் பருப்பு – 1 டீஸ்பூன்,
மிளகாய் வற்றல் – 5,
மஞ்சள் தூள் – சிட்டிகை (அ) ½ டீஸ்பூன்,
கருவேப்பிலை – சிறிது,
வேர்க்கடலை (தோல் நீக்கியது) – 10 அல்லது 15 பருப்பு (இரண்டாக உடைத்து வைத்துக் கொள்ளவும்),
உப்பு – தேவையான அளவு,
ந. எண்ணெய் – 3 (அ) 4 டீஸ்பூன்.

*செய்முறை :*

அம்மியில் அல்லது மிக்ஸியில் புளி, உப்பு, மிளகாய் வற்றல் மூன்றையும் நன்றாக மைய அரைத்துக் கொள்ளவும். பிறகு வாணலியில் ந. எண்ணெய் ஊற்றி, எண்ணெய் நன்கு காய்ந்ததும் அதில் முதலில் கடுகைப் போடவும். கடுகு நன்கு வெடித்து பின்பு அதில் உளுத்தம் பருப்பு, கடலைப் பருப்பைப் போட்டு மஞ்சள் தூளையும் போட்டு மிதமான சூட்டில் அடுப்பை வைக்கவும். பிறகு அதில் புளி, உப்பு, மிளகாய் அரைத்த கலவையைப் போடவும். பிறகு அதை 3 (அ) 4 நிமிடம் நன்கு வதக்கவும். பிறகு இறக்கி கருவேப்பிலையைப் போடவும். பிறகு அந்தக் கலவையில் உதிர் உதிராக வடித்த சாதத்தைப் போட்டுக் கரண்டியால் கிளறி லஞ்சுக்குக் குழந்தைகள் டப்பாவில் வைத்து விடவும். சுவையான புளியோதரை தயார்.



– சரஸ்வதி சுவாமிநாதன்,
சென்னை – 40.

## இரண்டாவது பரிசு
## ரூ. 200/-
## பச்சரிசி பத்திரி

*தேவையான பொருட்கள் :*

பச்சரிசி – 1 ஆழாக்கு,
தேங்காய் – 1 மூடி,
தே. எண்ணெய் – 200
ருசிக்கேற்ப உப்பு.

**செய்முறை :**

முதலில் பச்சரிசியை ஒரு மணி நேரம் ஊறவைத்து பின்பு வடிகட்டி மிக்ஸியில் நைசாக அரைத்து மாவாக்கிக் கொள்ளவும். கட்டி, குருணை இல்லாமல் சல்லடையில் சலித்துக் கொள்ளவும். பின்பு வாணலியில் இட்டு வாசனை வரும் வரை நன்றாக வறுத்துக் கொள்ளவும். சிவக்க வேண்டாம்.

சூடு ஆறியபின் தேங்காய்த் துருவிப் போட்டு உப்பு நீர் ஊற்றி, சப்பாத்தி மாவு போல பிசைந்து கொள்ளுங்கள். சிறிது கெட்டியாக இருக்கும். 10 நிமிடம் கழித்து சப்பாத்திக் கல்லில் சிறிது எண்ணெய் தடவி கொஞ்சம் கனமாக உருட்டவும். ஜக் மூடி, அல்லது ஹார்லிக்ஸ் பாட்டில் மூடி வைத்து அழுத்திப் பிசிறு இல்லாத வட்டமாக எடுத்துப் பரத்திக் கொள்ளுங்கள். சுமார் 15 எண்ணல் வரும்.

பின்பு வாணலியில் எண்ணெய் விட்டு இரண்டு, மூன்றாகப் பொறித்து எடுக்கவும். குழந்தைகளுக்குச் சூடாக இருக்கும் பொழுதே சிறிது சர்க்கரை தூவி லஞ்ச் பாக்ஸில் வைத்து விட்டால் மதிய நேரம் சர்க்கரை இளகி கலந்து பத்திரி சாப்பிட சுவையாக இருக்கும். பெரியவர்கள் தக்காளி குருமாவுடன் சாப்பிடலாம்.

பச்சரிசி நன்கு பசி தாங்கும். கிராமத்துப் பாட்டி வீட்டில் காலை டிபனுக்குச் செய்து மீந்து போனதை (ஏகமாகச் செய்வார்கள்) மதிய சாப்பாட்டுக்குச் செய்யும் மட்டன் குழம்பில் போட்டு விடுவாள். மத்தியான சாப்பாடு சாப்பிடும் பொழுது அதிர்ஷ்டம் இருந்தால் ஒன்றோ, இரண்டோ கிடைக்கும். குழம்பில் ஊறிய பத்திரிக்கு ஈடுஇணையே கிடையாது.

– கே. ஜெயலக்ஷ்மி,
திருநெல்வேலி – 7.

## மூன்றாவது பரிசு ரூ. 100/- கோதுமை கீரை அடை

**தேவையான பொருட்கள் :**

கோதுமை மாவு – 1½ கப்,
கடலை மாவு – ½ கப்,
வெங்காயம் (பெரியது) – 2,
பச்சை மிளகாய் – 2,
மாங்காய் இஞ்சி – 1" துண்டு,
அரைக்கீரை, முளைக்கீரை (அ) முருங்கைக் கீரை – 1 கட்டு,
வெண்ணெய் – 1 மேசைகரண்டி,
ரீபைண்டு எண்ணெய் – தேவையான அளவு,
மிளகாய்த் தூள் – 1 டீஸ்பூன்,
உப்பு – தேவையான அளவு.

**செய்முறை :**

கோதுமை மாவு, கடலை மாவு ஆகியவற்றுடன் மிளகாய்த் தூள், உப்பு, எண்ணெய் சேர்த்துக் கலந்து கொள்ளவும். இத்துடன் பொடியாக நறுக்கிய கீரை, வெங்காயம், பச்சை மிளகாய், இஞ்சி ஆகியவற்றைச் சேர்த்து திட்டமாக தண்ணீர் விட்டுத் தளர்த்தியாக பிசைந்து கொள்ளவும். முருங்கைக்கீரையை சிறிது வதக்கியோ, வேக வைத்தோ கூடச் சேர்க்கலாம். தோசைக் கல்லை அடுப்பில் வைத்துக் காய்ந்தவுடன் சிறிது மாவை எடுத்து நமது லன்ச் பாக்ஸுக்கு ஏற்றவாறு அளவாகத் தட்டவும். சுற்றிலும் எண்ணெய் விட்டு வெந்தவுடன் திருப்பிப் போட்டு நன்கு வெந்தவுடன் எடுத்து விடவும். இலேசாக ஆறியபின் லன்ச் பாக்ஸில் அடுக்கவும். இதற்கு ஊறுகாய் அல்லது தக்காளி கெட்சப் தொட்டுச் சாப்பிட சுவைகூடும். விருப்பப்பட்டால் தயிர்ப் பச்சடியும் சேர்த்துச் சாப்பிடலாம்.

செய்வதற்கு எளிய இந்த கோதுமை கீரை அடை தானியம், பருப்பு மற்றும் கீரை சேர்ந்த மிகவும் சத்துள்ள உணவாகும்.

– எஸ். உமாமகேஸ்வரி,
கோயம்புத்தூர் – 2.



எந்த வகை சுண்டல் செய்தாலும் அத்துடன் நொறுக்கிய சிப்ஸ் கலந்து வழங்கினால் சுண்டல் கரகரவென்று சுவையாகவும் இருக்கும். கையில் ரெடிமேடாய் சிப்ஸ் இருந்தால் எவ்வளவு விருந்தினர் வந்தாலும் சாமர்த்தியமாய் சமாளித்துப் பாராட்டும் பெறலாம்.

– என். சாந்தா

## ஆறுதல் பரிசு ரூ. 50/- நவீன இடிமாஸ்

**தேவையான பொருட்கள் :**

புழுங்கலரிசி ரவை – 1 கப்,
பயறு – ¼ கப்,
உ. பருப்பு – ¼ கப்,

துவரம் பருப்பு – ¼ கப்,
கடலைப் பருப்பு – ¼ கப்,
மிளகாய் வற்றல் – 2,
கேரட் துருவல் – ½ கப்,
முட்டைகோஸ் துருவல் – ¼ கப்,
வெங்காயம் (நறுக்கியது) – ¼ கப்,
இஞ்சி – ஒரு சிறிய துண்டு நறுக்கியது,
பச்சை மிளகாய் –
3 நீளவாட்டில் நறுக்கியது,
கடுகு – 1 ஸ்பூன்,
உ. பருப்பு – 1 ஸ்பூன்,
பெருங்காயப் பொடி – ½ ஸ்பூன்,
எண்ணெய் – 2 டேபிள் ஸ்பூன்,
மோர் – 2 கப்.

**செய்முறை :**

பயறு, உளுத்தம் பருப்பு, துவரம் பருப்பு, கடலைப் பருப்பு, மிளகாய் முதல் நாள் இரவே இரண்டு மணி நேரம் ஊறவைத்து சிறிது நறநறப்பாக அரைத்து, புழுங்கலரிசி ரவையை மோருடன் கலந்து அரைத்த விழுதையும் உப்பையும் கலந்து மூடிவைக்கவும்.

மறுநாள் காலை அதை இட்லியாக வார்த்து வேகவைத்து ஆறிய பிறகு உதிர்த்தெடுத்து வைக்கவும்.

வாணலியில் எண்ணெய் விட்டுக் காய்ந்த பிறகு கடுகு, உளுத்தம் பருப்பு, பெருங்காயம் சேர்த்துத் துருவிய காய்கறிகள், பச்சை மிளகாய், இஞ்சி சேர்த்து, வதக்கி உதிர்த்தெடுத்த வைத்தவற்றையும் கலந்து கீழே இறக்கவும்.

இச் சரிவிகித உணவு லஞ்ச் பாக்ஸுக் கேற்றதாகும்.

– டி. சியாமளா, சென்னை – 50.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

என் கணவருக்குத் தினமும் மதிய உணவு கொடுத்தனுப்புவது பெரும் பிரச்னைதான். மாலை வந்தவுடன் தினசரி 'கம்ப்ளையண்ட்'தான். ஒருநாள் எழுந்தது லேட்டான காரணத்தால் முதல் நாள் இரவு செய்த சப்பாத்தியில் எஞ்சியவற்றைக் கொண்டு "பிரெட் சப்பாத்தி புட்டிங்" செய்து லஞ்ச் பாக்ஸில் போட்டு அனுப்பி விட்டேன். அன்று மாலை எனக்குக் கிடைத்த பாராட்டுக்கு அளவே இல்லை.

## பிரெட் சப்பாத்தி புட்டிங்

**தேவையான பொருட்கள் :**

சப்பாத்தி – 5,
பிரெட் ஸ்லைஸ் – 3,
பெரிய வெங்காயம் – 3,
பச்சை மிளகாய் – 4,
தக்காளி – 2,
காரட் துருவல் - 3 ஸ்பூன்,
தேங்காய்த் துருவல் – 5 ஸ்பூன்,
முந்திரிப் பருப்பு – 5,
கடுகு – ½ ஸ்பூன்,
உளுத்தம் பருப்பு – 1 ஸ்பூன்,
க. எண்ணெய் – 100 மில்லி,
நெய் – 1 ஸ்பூன் (வாசனைக்காக),
கருவேப்பிலை – சிறிதளவு,
உப்பு – தேவையான அளவு.

**செய்முறை :**

முதலில் சப்பாத்தி, பிரெட், வெங்காயம், தக்காளி, பச்சை மிளகாய் இவற்றைச் சிறு சிறு துண்டுகளாக வெட்டிக் கொள்ளவும். பின் வாணலியில் எண்ணெய் விட்டு பிரெட்டையும், முந்திரிப் பருப்பையும் பொரித்து எடுத்துத் தனியே வைத்துக் கொள்ளவும். பின்னர் வாணலியில் கடுகு, உளுத்தம் பருப்பைத் தாளித்து அத்துடன் வெங்காயம், பச்சை மிளகாய், காரட் துருவல், தேங்காய்த் துருவல், கருவேப்பிலை ஆகியவற்றைப் போட்டு நன்கு வதக்கவும். தேவையான அளவு உப்பை எடுத்துக் கொண்டு சப்பாத்தி துண்டுகளையும், உப்பையும் அதனுடன் சேர்த்து சப்பாத்தி கருகாமல் வதக்கவும். பின்னர் அடுப்பை அணைத்து விட்டு அந்தச் சூட்டிலேயே பொரித்து வைத்திருக்கும் முந்திரிப் பருப்பையும், பிரெட்டையும் போட்டுக் கிளறி நெய்யை விட்டு நன்கு கிளறி இறக்கி வைக்கவும். இதுவே "பிரெட் சப்பாத்தி புட்டிங்" ஆகும். இதற்குத் தொட்டுக் கொள்ள எதுவும் தேவையில்லை. சுவையாக இருக்கும்.

– காவேரி ஜவஹர்,
தூத்துக்குடி – 1.

எந்த வகை தான்யமாக இருந்தாலும் அதை முளைகட்டி நிழலில் உலர்த்தி வைத்துச் சுண்டல் செய்தால் சட்டென வெந்து விடும். அளவும் அதிகம் வரும். விருந்தினரிடம் பேசிக் கொண்டே எவ்வளவு பேர் வந்திருக்கிறார்களோ அந்த அளவு சுண்டலை எளிதாகத் தயாரிக்கலாம்.

– என். சாந்தா



## இந்த மாதம் எப்படி? செப். '95



### மேஷ ராசி :

அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம்.

மாதம் பூராவும் ஏதோ ஒரு விதத்தில் புதன் அனுகூலமாக இருப்பார். குழந்தைகளின் கல்வியில் முன்னேற்றம் காணலாம். விழா ஒன்றில் உங்களுக்கு வஸ்திர லாபம் ஏற்படும். இது அரசியல், ஆன்மீகம், மற்றும் கோயில் திருவிழாக் குழுவினர் ஆகியவர்களுக்கும் கூட பொருந்தும். பொன்னாடைப் போர்த்தப்பட்டாலும் வஸ்திர லாபம் தானே! தொழிலில் இலாபம் வருவதற்கு தடை இராது. குடும்பத்தில் குதூகலத்திற்குக் குறைவில்லை. எனினும் எட்டாம் வீட்டில் உள்ள குருவும், பாம்புக் கிரகங்களும் சில சிரமங்களைத் தரலாம். எனவே அரசு ஊழியர்கள், மற்றும் வாகனங்கள் வைத்திருப்போர் ஆகியவர்கள் மேலதிகாரிகளிடம் தர்க்கம் செய்வதைத் தவிர்த்தல் நலம். குறிப்பாகக் காவல் துறையினரிடமும், வரிவசூல் அதிகாரிகளுடனும் சுமுகமாகப் பேசுவது நல்லது எனத் தோன்றுகிறது. செல்வந்தர்களும், மிகப் பெரிய தொழிலதிபர்களும் வருமானவரி இலாகாவினரின் திடீர்ச் சோதனைக்கு ஆளாகலாம். மாத ஆரம்பத்தில் நடைபெற இருக்கும் சுப நிகழ்ச்சி ஒன்றுக்குத் தற்காலிக தடை உண்டாகலாம். ஆக இந்த மாதம் நல்லதும் நடக்கும். சில சிரமங்களும் இருக்கும். பாகப்பிரிவினைக்கோ அல்லது இடமாற்றத்திற்கோ ஏற்ற மாதமில்லை. சிவஸ்தலங்களுக்குச் சென்று, அம்மை அப்பனையும், அண்ணன் தம்பிகளையும் மனதாரச் சேவித்து அருள் பெறுவது நல்லது. சனீஸ்வரத் தலங்களுக்கும் சென்று வரலாம்.

### ரிஷப ராசி :



கிருத்திகை 2, 3, 4 ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 ஆம் பாதங்கள்.

கேது கெடுக்கும் நிலையில் இருந்தாலும் ராகு தடுக்கும் நிலையில் இருக்கிறார். அத்துடன் லாபாதி பதியான குருவின் பார்வை ராசிக்கு இருப்பதாலும், இந்த இராசிக்கு யோக காரனாகிய சனீஸ்வரன் 10ல் பாக்கியஸ்தானத்தில் இருப்பதாலும், அதுவும் ஆளுகின்ற நிலையில் உள்ளதாலும், உங்களது பிரச்னைகள் இந்த மாதத்தில் ஏதும் செய்திட முடியாது. நாலில் சுக்கிர சூரிய சேர்க்கை. எந்தச் செயலையும் நினைத்தபடி செய்து முடித்திட தடங்கல்கள் சூரியனால் ஏற்பட்டாலும் சுக்கிரனால் நல்ல விதமாகவே நிறைவேறும். ஆறில் உள்ள புதன் திடீர்ப் பதவி உயர்வு, அயல் நாட்டு யாத்திரை, மற்றும் இரசாயனத் தொழில் சம்பந்தமான பொருட்களைத் தயாரிப்பாளர்களுக்கு நல்ல இலாபம் இவை ஏற்படும்படி செய்வார். சந்திரகாந்தக்கல் மோதிரம் அணிபவர்களுக்கு எதிர் பாராத தனலாபம் கிடைக்கும். சுக்கிரனுக்குரிய வைரமும் அணியலாம். வசதியைப் பொறுத்துச் செய்யும் பரிகாரமே பலன் அளிக்கும். மற்றபடி குடும்பத்தில் அமைதியும் மகிழ்ச்சியும் நிலவும். சுபச் செலவு ஒன்று ஏற்படும். அது திருமணமாகவோ அல்லது வீடு வாங்கும் விஷயமாகவும் கூட இருக்கலாம். பொன் ஆபரணங்கள் கூட வாங்கிட முடியும். கிருத்திகை நட்சத்திரக்காரர்களுக்குச் சற்றுச்



ஒரு சகோதரி எழுதியது போல் ஜாமை தண்ணீர் விட்டு ஜூஸாக ஆக்கலாம். இது தவிர செலவாகாத ஜாமை சிறிது தண்ணீர் விட்டு (ஆனால் கெட்டியாக இருக்கட்டும் அதிகம் தளரக்கூடாது) இவற்றுடன் வாழைப்பழங்களை வில்லைகளாக நறுக்கி, முந்திரிப் பருப்பு, திராட்சைகளைப் போட்டு ஸ்வீட் பச்சடி செய்யலாம்.

– கே. நீலா

சோதனை உண்டு. அதுபோலவே மிருக சீரிஷ நட்சத்தில் பிறந்தவர்களுக்கும் சில பிரச்னைகள் தோன்றலாம். எனினும் ரிஷப ராசி என்பதால் பாதிப்பு அதிகம் ஏற்படாது. அத்துடன் ரோகஸ்தானத்தில் உள்ள ராகு வால் ரோக நிவர்த்தியும், எடுத்த காரியத்தில் வெற்றியும் ஏற்படும்.

## மிதுன ராசி :



மிருகசீரிஷம் 3, 4 ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர் பூசம் 1, 2, 3 ஆம் பாதங்கள்.

இராசி நாதன் நாலாமிடத் தில் உச்சம் பெற்று குடும்பத்தில் சுபநிகழ்ச்சி ஏற்பட உதவுவார். நீங்கள் திருமணத்திற்குக் காத்திருப்பவரானால் அது கைகூடிவரும். செய்யும் செயல்களில் ஜெயமும், தனலாப மும் ஏற்படலாம். குழந்தைகளால் மனச்சஞ் சலம் உண்டாகலாம். அது அவர்களது கல்வி விஷயத்திலும் ஏற்படலாம். அல்லது நடத்தை காரணமாகவும் உண்டாகலாம். எனவே புத்திரகாரகனாகிய குருவுக்கு அர்ச் சனை செய்யலாம். அல்லது மேதா தக்ஷிணா மூர்த்தி ஜெபம் செய்யலாம். பணிக்குச் செல்லும் பெண்களுக்குப் பதவி உயர்வு அல்லது எதிர்பார்க்கும் இடத்திற்கு மாற்றம் வரலாம். ராகு, செவ்வாய் ஆகியவர்களின் சஞ்சாரம், வீண் விரயத்திற்குக் காரணமாக இருக்கும். எனவே சற்று எச்சரிக்கையுட னேயே செலவு செய்யுங்கள். நீங்கள் எழுதும் எந்தத் தேர்விலும் உங்களுக்கு வெற்றி ஏற் பட கேது உதவுவார். அது வேலை விஷய மாக பேட்டிகளுக்குக் கூட பொருந்தும். மாதத்தின் பிற்பகுதியில் சுக்கிரனால் குடும் பத்தில் சில சிறு சிறு பூசல்கள் ஏற்படினும், அதன் முடிவுகள் நன்மையாகவே இருக்கும். ஆசிரியர்கள் மற்றும் நடிப்புத் துறையினர், வழக்கறிஞர்கள், மருத்துவர்கள் ஆகியவர் களுக்குக் கூடுதலான வேலை பளுவும், அதற் குரிய பண வரவும் உண்டாகும். அவசரப் பட்டு வீடு வாங்க முயற்சிக்க வேண்டாம். ஸ்ரீ ஆஞ்சநேயரையும், சுப்ரமணியரையும், துர்க்கையையும் மனதார நினைந்து மானசீகமாக வேண்டிக் கொள்ளுங்கள். வேலும், துர்க்கையின் சூலமும் ஆஞ்ச நேயரின் ஆசியும் உங்களுக்குக் கவசமாக நின்று காக்கும். பக்தியினால் எதையும் சாதிக்கும் சக்தியைப் பெற முடியும் என் பதை மனத்தில் கொள்ளுங்கள்.

## கடக ராசி :



புனர்பூசம் 4 ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

தசாபுத்தி சரியில்லாவிடி னும், குருவின் அருள் கோட்ச் சாரப்படி இருப்பதால் கவலை வேண்டாம். தட்டிச் சென்ற திரு மணம் மீண்டும் தடையின்றி நடக்கும். சந்திரன் உச்சம் பெறுகின்ற கிருத்திகை, ரோகிணி, மிருக சீரிஷம் ஆகிய நாட்களில் எதிர்பாராத தனலாபம், உத்தியோகம், கௌரவப்பட்டம் என ஏதோ ஒரு விதத்தில் நன்மையுண்டு. கடக ராசிக்காரர்களுக்கு அரிசி வியாபாரம் இலாபம் தரும். எனவே அந்த வகையில் ஏதேனும் புதுத் தொழி லுக்கு முயற்சி எடுக்கலாம். இலாபம் கிடைக் கும். அரிசிக்கு உரியவன் சந்திரன். எனவே இந்த இராசிக்குக் குருபார்வை இருப்பதால் இந்தத் தொழிலில் தைரியமாக இறங்கலாம். புனர்பூச நட்சத்திரக்காரர்களுக்குச் சற்று பொருளாதாரத் தட்டுப்பாட்டையும், அதே சமயம் சில இடங்களில் ஏமாற்றத்தையும் அளிக்கும். தசாபுக்தி சரியில்லாதவர்கள் அனுபவித்துக் கழிக்க வேண்டியதுதான். எனினும் சுப விரயத்திற்கு யோகம் இருப்ப தால் மனத்தில் நிறைந்துள்ள அபிலாஷை கள் நன்கு நிறைவேறும். சந்திரகாந்தக்கல் கலந்த வெள்ளி மோதிரம் கல் கையில் படி யும்படி கட்டி மோதிர விரலில் அணிந்து பாருங்கள். அதிர்ஷ்டம் கதவைத் தட்டும். இது பெண்களுக்கு மிகவும் அவசியமான பரிகாரமாகும்.. சந்திரகாந்தக்கல் விலை மிகக் குறைவு என்பதையும் தெரிந்து கொள் ளுங்கள்.

# தண்டபாணி
# உங்கள் வாழ்வின் விடி வெள்ளி



வாழ்க்கை வளம்பெற, கனவுகள் நனவாக சேமிப்பே சிறந்த வழி. நம்பகமான நிறுவனத்தில் சேமிப்பதுதானே விவேகம்.

**நேர்மை, திறமை, வலிமை, பாரம்பரியம் - தண்டபாணி.**

தொண்ணூறு கோடிக்கு
மேல் மதிப்புள்ள,
பலதொழில் சாதனையாளர்களிடம்
எப்போதும் உங்கள் பணம் பத்திரம்.
சேமிப்போடு மற்றும் பல சேவைகள்.
தண்டபாணி - உங்களுக்கென்றே
தனியொரு நிதி இலாகா.

- ஹையர் பர்சேஸ், லீசிங்
- மெர்ச்சண்ட் பேங்கிங்
- பில் டிஸ்கவுண்டிங்

மிகவும் பாதுகாப்பானது என்பதற்கான CRISIL FA + அந்தஸ்து பெற்றது

ஃபிக்சட் மற்றும் குமுலேடிவ் டெபாசிட் செய்வதற்கான விண்ணப்பம் மற்றும் விவரங்களுக்கு எமது அலுவலகம் அல்லது பிரபல டெபாசிட் புரோக்கர்களை அணுகவும்.



**Dhandapani**
Finance and Investments Ltd.

**பதிவு அலுவலகம்** : 141 லிங்கி செட்டி தெரு, சென்னை - 600 001.
**நிர்வாக அலுவலகம்** : 645, மவுண்ட் ரோடு, சென்னை - 600 006.
ஃபோன் : 8268285, 8259264, 8241304.

**தண்டபாணி உங்கள் நல்வாழ்விற்கு உறுதுணை**

● **<u>சென்னை கிளைகள்:</u>** மவுண்ட் ரோடு: 645, அண்ணா சாலை, பின்-600 006. ஃபோன்: 8268285, 8259264, 8241304. ● **மேற்கு மாம்பலம்:** 33, ஆர்யகௌடர் ரோடு, முதல்மாடி, பின்-600033. ஃபோன்: 427795. ● **தி.நகர்:** 35, திருமலைப்பிள்ளை சாலை, முதல் தளம், பின்-600 017. ஃபோன்: 8263343, 8265335. ● **<u>தமிழ்நாடு:</u> கோயம்புத்தூர்:** 391, பாரதியார் தெரு, நியூ சித்தாபுதூர், பின்-641044 ஃபோன்: 435414, 435663. ● **திருச்சி:** பி-13, பேஸ்மெண்ட், சித்ரா காம்ப்ளெக்ஸ், சிந்தாமணி, பின்-620002. ஃபோன்: 469945 ● **மதுரை:** 7, மேற்கு மாடவீதி, இரண்டாவது மாடி, பின்: 625001. ஃபோன்: 37977 ● **சேலம்:** 102, லைட் ஹவுஸ் காம்ப்ளெக்ஸ், எல்.எஃப்.ஜி.எஸ். ஸ்கூல் எதிரில், ஃபோர் ரோடு, பின்-636009. ஃபோன்: P.P. 50164 ● **<u>ஆந்திரா:</u> ஹைதராபாத்:** 1-2-272 & 273, மினர்வா காம்ப்ளெக்ஸ் எதிரில், சரோஜினி தேவி சாலை, பின்-500003. ஃபோன்: 844134. ● **கடப்பா:** 7/153-3பி, என்.ஜி.ஓ. காலனி, பின்-516002. ஃபோன்: 44496 ● **<u>கர்நாடகா:</u> பெங்களூர்:** 26/6, என்.ஆர். ரோடு க்ராஸ், பின்-560 002. ஃபோன்: 2239677 ● **<u>கேரளா:</u> கொச்சின்:** 41/406, சித்தூர் ரோடு, எர்ணாகுளம், பின்-682035 ஃபோன்: 369437

★ In continuation of our statutory ad appeared in News Today and Dinamani on 6-7-95

EFFICIENT/DFI/101/95



## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம்.

உத்திர நட்சத்திரத்தில் பிறந்துள்ளவர்களுக்கு மாதத்தின் முதல் பகுதி சிறப்பாக அமையும். ஆனால் மகம், பூரம் ஆகிய நட்சத்திரங்களில் பிறந்துள்ள வர்களுக்கு உங்களது நட்சத்திர நாயர்களா லேயே சில சிரமங்கள் ஏற்படலாம். பிறர் சொல்லுக்குக் கட்டுப்பட வேண்டிய நிலை ஏற்படும். குறிப்பாக அரசுத்துறை, அரசியல், மற்றும் காவல் துறையில் பணிபுரிபவர் களுக்கு மிகவும் சோதனை உண்டு. இது குடும்பச் சூழ்நிலைக்குக் கூட பொருந்தும். சுக்கிரன் நீச்சம் எனினும் புதன் உச்சம் பெற்றதால் அப்படி வரும் சோதனைகள் அனைத்தும் புஸ்வாணமாகிவிடும். ஆயினும் சோதனை வரும் நாட்களில் ஏற்படும் மனவேதனை சற்று சோர்வைத் தரலாமல்லவா? மற்றபடி உங்கள் உறவினர்கள் மூலம் குறிப்பாக சகோதரர் மூலமே கூட சில பிரச்னைகள் ஏற்பட்டு அதன் பயனாக வருத்தமடைய வேண்டிய சூழ்நிலை. வக்ர சனியும், சற்று உடலைப் பாதிக்கலாம். ஆனால் அங்காரகனும், இராகுவும் எந்த நிலையிலும் உங்களுக்கு ஆபத் உதவிகளாக இருக்கிறார்களே! பின் என்ன தயக்கம்? அப்படியிருக்க பயம் ஏற்படும்படி ஏன் எழுத வேண்டும் எனக் கேட்கத் தோன்றும். சொல், செயல், சிந்தனை இவைகளில் சற்று எச்சரிக்கை யுடன் இருக்கவே, கிரக சஞ்சாரங்களுக்கு ஏற்ப பலன் எழுத வேண்டுமல்லவா? பொருளாதாரப் பற்றாக் குறைக் கூட இருக்கலாம். அரசுப் பணியில் உள்ளவர்கள், மற்றும் தனியார்த்துறையில் உள்ளவர்கள் சற்று இடமாற்றத்திற்கு ஆளாக வேண்டி வரும். ஞாயிற்றுக் கிழமையன்று சூரியோ தயத்தில் சர்க்கரைப் பொங்கல் வைத்து, அதை விநாயகருக்கும், சூரியனுக்கும் நிவேதனம் செய்து, பிறகு ஏழைகளுக்கும் பசு மாட்டிற்கும் அளிப்பது நல்லது. மீதியை வீட்டில் உள்ளவர்களுடன் சேர்ந்து நீங்களும் சாப்பிடலாம். பரிகாரத் துக்குப் பரிகாரம். ஆகாரத்துக்கு ஆகாரம். சரிதானே!

## கன்னி ராசி :



உத்திரம் 2, 3, 4 ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 ஆம் பாதங்கள்.

சனீஸ்வரனும், இராசி நாதனும் உறு துணையாக இருக்கிறார்கள். அதனால் உங்கள் பொருளாதார நிலை சற்று உயரலாம். ஆயினும் 2 ல் உள்ள ராசியும் 8 ல் உள்ள கேதுவும் கடந்த சில மாதங்களாகவே உங்கள் குடும்ப நிலையையும், பொருளாதார நிலையையும் பாதித்திருக்கும். தற்போது புதன் உச்சம் பெற்றுள்ளதாலும், சுக்கிரன் நீச்ச பங்க இராஜயோகம் தருவதாலும் எதிர் பாராத நல்லதொரு நிலை உங்களுக்கு ஏற்படலாம். அதனால் இதுவரை நீங்கள் இழந்திருந்த மனநிம்மதியைப் பெறலாம். மாதத்தின் எல்லா நாட்களிலும் சூரியனின் சஞ்சாரம் சாதகமாக இல்லை என்றாலும் இராசிநாதனின் அருளால் பாதகம் ஏற்படாது. ஒருமுறை கண் மருத்துவரைப் பார்த்து கண்களைப் பரிசோதிப்பது நல்லது. பண நஷ்டமும், மனக்கஷ்டமும் யாருக்கு இல்லை? உங்களுக்குச் சற்று கூடுதலாக இந்த மாதம் செலவழியும். தற்போது அவசியமில்லாத எந்தப் பொருளையும் தவணை முறையில் கிடைக்கிறதே என்றோ, அல்லது சலுகைவிலையில் தரப்படுகிறது என்றோ வாங்கிக் கூடுதலான செலவினைப் பெருக்கிக் கொள்ளாதிருப்பது நல்லது. ஏனெனில் உங்களுக்கு வேண்டிய ஒருவரால் அத்தகைய நிர்ப்பந்தத்திற்கு ஆளாக இருக்கிறீர்கள். இது வீடு, வாகனம் ஆகியவைகளை வாங்குவதற்

### மலையோ மலை!

மலை பண்ணுகிறேன் பேர்வழி என்று ஒரு வண்டி மண்ணை பிசைந்து மலை செய்து அல்லாடாமல் ஒரு சிறு பிடியில்லாத 'ப்ளாஸ்டிக் பக்கெட்டை கவிழ்த்துப் போட்டு அதன் மேல் அளவாக ஈரக் களிமண்ணை பூசுங்கள். நிமிடத்தில் மலை ரெடி. இந்த மலையை ஒரு அட்டையின் மேல் கட்டவும். சுலபமாக நகர்த்தலாம். தரை கெடாது.

— உஷா



மைசூர்பாகு செய்யும் போது ஒரு கப் காரெட் துருவலை முதலில் பாகிட்டுக் கிளறிவிட்டு, கடலைமாவைப் போட்டுச் செய்தால் கலர் நன்றாக இருக்கும். ருசியும் கூட. பீட்ரூட்டையும் கடலைமாவுடன் சேர்த்து மைசூர்பாகு செய்யலாம்.

— கே. நீலா



குக் கூட கொடுக்கப்படும் முன்னெச்சரிக்கை என எண்ணுவது நல்லது. முடிந்தால் வைணவஸ்தலம் ஒன்றிற்குச் சென்று வருதல் நன்று.



## துலா ராசி :

சித்திரை 2, 3 ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதியில் செல்வாக்கும், கௌரவமும் நன்கு அமையும். அரசு விருது கூட பெறலாம். உத்தியோகமும் கிடைக்கும். வீடு ஒன்று வாங்கும் முயற்சியில் சற்று தடங்கல் ஏற்படலாம். அதற்குத் தாய் மாமனே கூட காரணமாகலாம். உச்ச புதன் விரயத்தில் இருப்பது சரியல்ல. வீடு அல்லது மனை கட்டாயம் அமையும் என்றாலும் எதிரிகளால் தூண்டப்பட்டு, போட்டிகள் ஏற்பட்டு சராசரி விலையை விட அதிக விலையைக் கொடுத்தாவது வாங்க வேண் டிய நிலை ஏற்படலாம். கூடிய மட்டும் மாதத்தின் முதல் வாரத்திலேயே உங்கள் செயல்களைச் சாதிக்க முயல்வது நல்லது. திருமணம், வெளிநாட்டு வேலை வாய்ப்பு, கூட்டு வியாபார ஆரம்பம் ஆகியவைகள் அனைத்திற்கும் ஏற்ற தருணம் முதல் 10 நாட்கள்தான் என்பதை மனதில் கொண்டு முயலுங்கள். வெற்றி உண்டு. 7 ல் உள்ள கேது கணவன் மனைவிக்கிடையேயுள்ள அன்னியோன்னியத்தைப் பாதிக்கக் கூடிய வகையில் ஏதாவது செய்யலாம். அதற்குச் சனீஸ்வரனும் துணை போகலாம். இவ்விரு கிரகங்களுக்கும் அர்ச்சனை செய்வது நல்லது. குருவினால் தனலாபமும், சத்துருக்களை வெல்லும் வாய்ப்பும் உண்டு. ஆகவே எதையும் துணிந்து செய்யலாம். தசாபுக்தி நன்கு அமைந்தவர்களுக்கு இதுவரை நிறைவேறாமல் தட்டிச் சென்றதொரு செயல், இம்மாதம் கட்டாயம் நிறைவேறும். அது பதவி உயர்வாகக் கூட இருக்கலாம். அல்லது திருமணமாகக் கூட அமையலாம். அல்லது நீண்ட தூரயாத்திரையாகக் கூட இருக்கலாம். வெளிநாட்டுப் பிரயாணமாகக் கூட இருக்க நேரலாம்.



## விருச்சிக ராசி :

விசாகம் 4 ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

மாதத்தின் பிற்பகுதி எல்லா விதத்திலும் ஏற்ற நிலையைத் தரும். எடுத்த காரியத்தில் வெற்றி, முயற்சி ஒன்றில் முன்னேற்றம், புதியதொரு தொழில் ஆரம்பம், சுப நிகழ்ச்சிக்கு ஆயத்தம் ஆகிய அனைத்திலும் வெற்றி உண்டு. இந்த இராசிப் பெண்கள் தங்கள் எண்ணம் போல் தங்க நகை வாங்கும் தருணம் வந்துள்ளது. எனவே பொன்னகை அணிந்து புன்னகை பூக்க வேண்டியது தானே! வாகனம் வாங்கும் நிர்ப்பந்தம் வந்தாலும் அதைத் தவிர்ப்பது நல்லது. ராகு கன்னிக்குப் போகும் போது கார் கூட வாங்கலாம். தாயின் உடல் நிலை சற்று கவலை தரலாம். நாலாமதிபனின் தசாபுக்தி நடப்பவர்களுக்குத் தாயின் நிலை சற்றுச் சோதனை கொடுக்கக் கூடிய நேரம். மிகவும் வயதானவராக இருந்து, அவரது உடல் நிலை சற்று பாதித்தால் மருத்துவமனைக்கு அனுப்பி அவர்களைத் தொந்திரவு செய்யாமல் விட்டு மனையுடன் வைத்திருப்பது நல்லது. உள்ளது உள்ளபடி கூறுவது நல்லது தானே! மற்றபடி சுக்கிரனாலும், புதனாலும் நல்லதும் உண்டு. விரயமும் உண்டு. துணி வியாபாரிகளுக்கு நல்லதொரு நிலை ஆரம்பம். அது போலவே தனலாபத்தை அடையும் வாய்ப்பு உண்டு. பாராட்டுப் பத்திரமும், பரிசும் கூட பெறலாம். ஸ்ரீ லக்ஷ்மி ஸ்தோத்திரம் படிப்பது நல்லது.



## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம்.

நல்லதொரு மாதம் என்று கூறலாம். வாகன இலாபம் உண்டு. காவல் துறையில் உள்ளவர்களுக்கு ஏற்றதொரு சூழ்நிலை. இதுவரை சாதிக்காத ஒன்றை, இந்த ராசியில் பிறந்துள்ள சுங்க அதிகாரிகளோ, வருமான வரி ஆய்வாளர்களோ சாதிக்கும்படியான நிலை. எனவே நன்கு பயன்படுத்திப் பலரின் பாராட்டைப் பெறமுயலலாமே! உங்களுக்கு வரும் ஆதாயத்துடன் சமுதாயத்தின் பாதுகாப்பும் நன்கு அமையும். சனீஸ்வரன் உங்களுக்கு உறுதுணையாக நின்று, வர இருக்கின்ற எத்தகைய தீமையையும் நிக்ரகம் செய்யும் நிலை உண்டு. அரசுப் பணிக்கு விண்ணப்பித்துள்ளவர்களுக்குக் கட்டாயம் வேலையில் சேரும்படி உத்திரவு வரும். தனியார்த் துறைக்கும் இது பொருந்தும். பணிபுரியும் பெண்களுக்கும் சரி, குடும்பப் பெண்களுக்கும் சரி நல்லதொரு கால கட்டம், ஆடையாபரண லாபம் உண்டு. எதிர்பார்த்துக் காத்திருக்கும் திருமண வைபவம், மகளுக்கோ, மகனுக்கோ நடந்து விடும். அல்லது குறைந்த பட்சம் நிச்சயதார்த்தமாவது நடக்கும். ஆயினும் பெண் ஒருத்தியின் நடத்தையால் உங்களுக்குத் தலைகுனிவு ஏற்படலாம். எனவே கூடிய மட்டும் வம்புக்கிழுப்பவர்களிடமிருந்து சற்று தூரமாக இருப்பது நல்லது. ஆகையினால் பிற பெண்களிடம் பேசும் போது சற்றுக் கவனமுடன் பேசுவது, நடந்து கொள்வது நல்லது. உண்மையை எழுதுவதற்குத் தயக்கமேன்? அதன் நன்மையை நீங்கள்தானே அடையப் போகிறீர்கள். எதிலும் எச்சரிக்கையுடன் நடந்து கொள்பவர்களுக்கு நல்லதொரு மாதமே.

### புத்தகத் தாம்பூலம்

**ஒவ்வொரு வீட்டுக் கொலுவிலும் தாம்பூலத்துடன் ஒரு ஸ்டெயின் லெஸ் ஸ்டீல் தட்டு, ப்ளாஸ்டிக் பேசின் தருகிறார்களே... நீங்கள் மாறுதலுக்குச் சிறிய ஸ்லோகப் புத்தகங்களையோ, ஆன்மீகப் புத்தகங்களையோ கொடுக்கலாமே! அதே செலவுதான் ஆகும். ஆனால் யாரும் அவற்றை அலட்சியப்படுத்தி எறிந்து விடமாட்டார்கள்.**

**— உஷா**



## மகர ராசி :



உத்திராடம் 2, 3, 4 ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 ஆம் பாதங்கள்.

குருவும், சுக்கிரனும் உதவும் நிலையில் உலாவினாலும் மற்ற கிரகங்கள் அனைத்துமே பாதகமான பாதையிலேயே சஞ்சரிக்கிறார்கள். குழந்தைகளின் கல்வி நலனும், குடும்பத்தில் தலைவன், தலைவி உறவும் சீராக இருந்த போதிலும், இதர விஷயங்களில் இடைஞ்சல் ஏற்படலாம். தோல் சம்பந்தமாக ஏதேனும் அலர்ஜி ஏற்படலாம். எனவே உடலுக்கு ஒவ்வாத எந்த மருந்தையோ, ஆகாரத்தையோ சாப்பிடாமல் இருப்பது நல்லது. அரசுப் பணியில் இருப்பவர்களுக்கு அடிக்கடி மேலாளர்களால் கெடுபிடி ஏற்படும். சூரியனை ஆதித்ய ஹிருதயத்தின் மூலம் வழிபடுங்கள். நாடி வரும் இடர்கள் ஒழியும். தாய்வழி உறவினர்க்கு உடல் நிலை குன்றலாம். வயிற்று வலி, இரத்தப் போக்கு இவை ஏற்படவும் வாய்ப்பு உள்ளது. எனினும் இராசி நாதன் ஆட்சியில் இருப்பதால் பயப்படத் தேவையில்லை. அஜீரணம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள். அலட்சியமாக இருந்தால் சாப்பிடும் உணவை மட்டுமல்ல, அதனால் ஏற்படும் செலவையும் உங்களால் ஜீரணம் பண்ண முடியாமல் போகலாம். அங்காரகனும் ராகுவும் கூட உடலைப் பாதிக்கும் நிலையில்தான் உலாவுகிறார்கள். எதிர்த்துப் போராடும் சக்தி தானாகக் கிடைக்கும். கந்தர் சஷ்டி கவசம், துர்க்கா ஸ்தோத்திரம் படிப்பது நல்லது.



## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 பாதங்கள்.

கேது ஒருவனே மாதம் பூராவும் முருகனது அருளைப் பெற்றுத் தருவார். அதனால் தனலாபம், எதிலும் வெற்றி, எதையும் சமாளிக்கும் திறன் இவை

# வராமல் போன போது...

மாதங்கள் பதின்மூன்று
எல்லாமே பிப்ரவரி
எனக்கு மட்டும் விதி 'விலக்கு'
பல சமயம் மாதக் கணக்கு
சில சமயம் நாட் கணக்கு
நாட்கள் கூடி விடும்
நாங்கள் கூடாதிருந்தும்
நாத்தியின் நமட்டுச் சிரிப்பு
அத்தையின் அம்புப் பார்வை
எனக்கு மட்டும் எரியும் (தெரியும்)
பாதுகாப்பு நாட்களெல்லாம்
பல்லைக் காட்டிவிடும் சில நேரம்
வழக்க மென நினைத்திருக்க
வழக்காகிப் போனதுமுண்டு
ஒழுங்குமுறை விலக்கிற்கு
'ஓவரால்' ஓராறுமாதம்
ஏழாம் மாதம் நிறுத்திய உடன்
'பழைய குருடி கதவத்திறடி'
ஒனக்கும் பேப்பே! ஒப்பனுக்கும் பேப்பே!!
திரும்பவும் டி-ஜி-ஓ.



அப்படி இப்படி என்று
கொஞ்ச நாளில் எல்லாம் சரியானது
எல்லாமே மறந்து விட்டது புரிந்தது
நிரந்தரமாய் நின்றுவிட்டது!
முடிவுக்கு ஒரு முற்றுப் புள்ளியாம்
தொலைந்தது சனியன் என்று
மறந்து விட முடியவில்லையே
பூப்பிற்குப் பின் வரும்
புது வசந்தம் சுகந்தானே!

— இராஜேஸ்வரி

உள்ளதால் கவலை வேண்டாம். சதய நட்சத்திர நாயகனாகிய இராகு ஒன்பதில் செவ்வாயுடன் சம்பந்தப்பட்டிருப்பதால் எந்த ஒரு முயற்சியிலும் தோல்வி இருக்க லாம். ஆயினும் எட்டில் புதனும் சுக்கிரனும் மாதத்தின் 2 வது வாரத்திலிருந்து வெகு நேர்த்தியாகச் சஞ்சரிப்பதால் சகல, சஞ்சல மும் சூரியனைக் கண்ட பனிபோலப் போய் விடும். எனவே எதையும் தைரியமாகச் சமா ளிக்கும் ஆற்றல் உண்டு என்பதால் கோட் சாரத்தைப் பற்றிக் கவலை வேண்டாம். முடியுமானால் சனீஸ்வர ஸ்தோத்திரம், துர்க்கா ஸ்தோத்திரம், ஷண்முகக் கவசம் இவைகளைப் படியுங்கள். காளஹஸ்திக்குக் கூட சென்று வரலாம். அல்லது சோழ நாட்டு யாத்திரை ஒன்றை மேற்கொண்டு சூரியனார் கோவில், ஆலங்குடி ஆகிய தலங் களைத் தரிசித்து விட்டு வாருங்கள். அதன் பிறகு பாருங்களேன். சிறந்த முன்னேற்றத்தை எதிலும் காண்பீர்கள். உபநயனம், கிருகப் பிரவேசம் என சுபநிகழ்ச்சிகளுக்கும் வாய்ப்பு உண்டாகும். மகனின் திருமணம் கூட கை கூடிவரலாம்.

## மீன ராசி :



பூரட்டாதி 4 ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

புதன் பார்வை, குரு பார்வை, 2 வது வாரத்தி லிருந்து சுக்கிரனின் பார்வை என சுப கிரகங்களின் பார்வை உங்கள் இராசிக்கு இருக்கும் போது இதர கிரகங்களைப் பற்றிய கவலை தேவையில்லை. மாதத்தின் முற்ப குதியில் சூரியன், நீங்கள் எதிர்பார்த்த அரசு சம்பந்தமான உதவியைத் தர இருக்கிறார். அது உத்தியோகமாகக் கூட இருக்கலாம். அல்லது ஏதேனும் பட்டமாகக் கூட அமையலாம். சுபநிகழ்ச்சிகள் நடக்கலாம். அது திருமணம், உபநயனம் போன்றதாக இருக்கும். பாம்புக் கிரகங்கள் உங்களுக்குச் சாதகமாக இல்லை என்றாலும், இராசி நாத னாகிய குருவின் பார்வை உங்கள் இராசிக்கு இருக்கும் போது, பாதகமாக ஒன்றும் ஏற் பட்டுவிடாது. உறவினர் ஒருவர் உங்களை விட்டுச் செல்லலாம். தூரதேசத்துக்கே கூட போகலாம். அவ்வளவு ஏன்? உங்களது மகளே திருமணத்தின் காரணமாக தன் கணவர் வீட்டுக்கு அல்லது கணவருடன் அயல் நாட்டிற்குக் கூட போக நேரிடலாம். இரத்த அழுத்த நோய் உள்ளவர்கள் அதற் குரிய மருந்தை மருத்துவர் கூறியபடி காலம் தவறாமல் சாப்பிடுவது நல்லது. இல்லை யேல் தலை சுற்றல் போன்ற நிலைக்கு ஆளா கலாம். மற்றபடி ஸ்ரீ சுப்ரமணிய புஜங்கத் தைப் படியுங்களேன். மனதிற்குத் தெம்பு ஏற் படும்.

— ஜெயலட்சுமி கிருஷ்ணன்




**2000 பொது அறிவு வினாடி-வினா விடைகள்**

ஆசிரியர் - கே. எஸ். சுப்ரமணி

விலை ரூ. 54.00

**ஒரு பக்கக் கட்டுரைகள் - பாகம் 12**

'ஏனோதானோ மன நிலை ஏன்', அணுகுமுறையில் மாற்றம் எனப் பல பயனுள்ள செய்திகளைச் 'சுருக்'கமாகக் கூறுபவர் லேனா தமிழ்வாணன்.

விலை ரூ. 21.00

**உங்கள் கணவரை சமாளிப்பது எப்படி?**

மாறிவிட்ட இந்திய மனைவிகள், இன்னும் மாறாத இந்தியக் கணவன்மார்களை ஜெயிப்பது எப்படி எனப் பல படங்களாகப் போட்டுச் சுவாரஸ்யமாகக் கூறுகிறார். ஆசிரியர் சாயா ஸ்ரீவத்ஸா. தமிழில் - ஜார்ஜினா பீட்டர்.

விலை ரூ. 19.00

**பணிபுரியும் பெண்களின் பிரச்னைகள்**

பல்வேறு பணிகளுக்குச் செல்லும் இன்றைய பெண்களுக்குப் பிரச்னைகள் எப்படியெல்லாம் வரலாம், அவற்றை எப்படிச் சமாளிக்கலாம் எனக் கூறுகிறார் ஜார்ஜினா பீட்டர்.

விலை ரூ. 21.00

(இரண்டும் - கண்ணதாசன் பதிப்பகம், 12, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 600 017.)

**சுவாசினி பூஜை**

சுவாசினி பூஜையின் காரணம், செய்முறை, ஸ்தோத்திரங்களுடன் விளக்கி இருப்பவர் ஸ்ரீதுர்க்கைச் சித்தர்.

விலை ரூ. 6.00

**ஸ்ரீ கணபதி ஹோமம்**

ஹோமம் செய்முறை.

விலை ரூ. 15.00

(இரண்டும் - பைலட் பப்ளிகேஷன்ஸ், 309, லிங்கி செட்டித் தெரு, சென்னை - 1.)

(இரண்டும் - மணிமேகலைப் பிரசுரம், த.பெ. எண். 1447, 4, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17.)

**வாங்க சிந்திக்கலாம்**

அன்றாடப் பிரச்னைகளைச் சமாளிக்கும் விதங்களை அனுபவங்களாகச் சொல்பவர் சுந்தர. ஆவுடையப்பன்.

விலை ரூ. 25.00

(பூவிழி பதிப்பகம், 17, திருமுருகன் வீதி, காமராஜ் நகர், புதுச்சேரி - 11.)

**என் ஆசை அப்பாவிற்கு**

எளிமையான மனித வாழ்க்கைச் சம்பவங்களை அதன் உள்மனசு அன்போடு கதையாகச் சொல்கிறார் குமரி க. நீலகண்டன்.

விலை ரூ. 20.00

(பத்மா புக்ஸ் ஏஜென்சி & பப்ளிகேஷன்ஸ், 27, அலெக் சந்திரா பிரஸ் ரோடு, நாகர்கோவில் - 629 001)

**மாரியம்மன் தாலாட்டு**

பாரம்பரியமாகப் பாடப்படும் பாடல்கள். தொகுத்துள்ளவர் வீ. ஜவஹர்.

விலை ரூ. 5.00

**வர்ணங்களில்....**

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம் வைத்த சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற கதைகள். நான்கு கதைகளும் வாழ்வியலைச் சொல்பவை.

விலை ரூ. 30.00

(இரண்டும் - குமரிப் பதிப்பகம், 9, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611 001.)

### வளமுடன் வாழ 108 மந்திரங்கள்

சகல காரியமும் நிறைவேற, குடும்பம் மேன்மையுற எனப் பலவற்றிற்கும் மந்திரங்களைத் தொகுத்து வழங்கியிருப்பவர் எடையூர் சிவமதி.

விலை ரூ. 12.00

### வினை தீர்க்கும் விநாயகர்

விநாயகரைப் பற்றி நிறைய செய்திகள். தொகுப்பு - வேங்கடவன்

விலை ரூ. 16.00

(இரண்டும் - யமுனா பிரசுரம், 181, ராஜாபாதர் தெரு, தி. நகர், சென்னை - 17.)

### இந்து மாக்கடல் மர்மங்கள்

தொன்மையான சரித்திரங்களைப் பற்றி ஆவல் கொண்டவர்களுக்கு சுவாரஸ்யமான நூல்.

விலை ரூ. 18.00

### காளான் வளர்ப்போம்; காசு குவிப்போம்

காளான் பண்ணை பற்றிய விரிவான புத்தகம். ஆசிரியர் போடி. பா. கிருஷ்ண குமார்.

விலை ரூ. 35.00

(இரண்டும் - நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், 41-பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை - 600 098.)

### வாரியாரின் வாழ்வியல் சிந்தனைகள்

திருமுருக கிருபானந்த வாரியார் கூறியவையின் தொகுப்பு.

விலை ரூ. 15.00

### இரவில் படுக்கும் முன் நீங்கள் செய்ய வேண்டியது என்ன?

மறுநாள் எழும்போது நல்ல தூய மனிதனாக எழ முதல் நாள் நல்ல சிந்தனைகளோடு தூங்கச் செல்ல வேண்டும் எனும் கருத்தை வலியுறுத்துபவர் வைரம் ராஜகோபால்.

விலை ரூ. 12.00

(இரண்டும் - கங்கா - காவேரி பதிப்பகம், 17, காரியாங்குடி தெரு, வெளிப்பாளையம், நாகப்பட்டினம் - 1.)

### நிஜமான நிழல்கள்

தேவிபாலாவின் நாவல். விறுவிறுப்பான துப்பறியும் நாவல்.

விலை ரூ. 35.00

### மாமன்னன் உலா

மாமன்னன் ராசேந்திர சோழன் காலத்திய வீரமும் காதலும் பின்னிய கதை. ஆசிரியர் ராஜகுரு.

விலை ரூ. 56.00

(இரண்டும் - கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 600 017.)

### இதிகாச கதைக் கொத்து

நள சரித்திரம், சத்தியவான் சாவித்ரி கதை எனத் தொகுத்திருப்பவர் பி. எஸ். சுப்பிரமணியன்.

விலை ரூ. 30.00

### நீங்களும் பேச்சாளராகலாம்

பேச்சாளர்களுக்கு சுவாரஸ்யமாக வழிகாட்டி இருப்பவர் குமரி அனந்தன்.

விலை ரூ. 55.00

(இரண்டும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17.)

### உடை தயாரித்தல் (Dress Making)

குழந்தைகள் முதல் சோளி, சுடிதார் என பலவற்றிற்கான வரைபடங்களுடன். ஆசிரியர் தங்கம் சுப்பிரமணியன்.

விலை ரூ. 45.00

(முல்லை நிலையம், 43, புதுத்தெரு, மண்ணடி, சென்னை - 1.)

---

இட்லிக்காக உளுந்த மாவு அரைத்தேன், போதவில்லை; குறைவாக இருந்தது. பாத்திரத்தில் உப்புப் போட்டு கலக்கும் போது மேலாகக் கலந்து வைத்தேன். மேலாக எடுத்து வார்த்ததில் இட்லி பூப்போல வந்தது. அடி மாவை தோசை வார்க்கப் பயன்படுத்தினேன்.

- ஆனந்தவல்லி



**மா**லை ஆறு மணிக்கு பத்மா வேலையெல்லாம் முடித்து விட்டு, அவளுக்கு எப்பொழுதும் பிடித்த ஜெஜெ டீவி. வைக்கிறாள். பக்கத்தில் கணவன் மகாதேவன் பேப் பருக்குள். பத்மாவின் மாமியார் மகாதேவனுக்குப் பக்கத் தில் வந்து உட்காருகிறாள். பத்மா அவரைக் கவனிக்க வில்லை.

ஜெஜெ டீவியில் குடும்பத் தலைவிகளுக்கு இடையே ஒரு பேட்டி. பேட்டி மிக மும்முரமாக குடும்ப விவகாரங்கள் பற்றி போய்க் கொண்டிருந்தது.

போட்டி நடத்துபவர் கடைசியாக ஒரு குடும்பத் தலைவியைப் பார்த்துக் கேள்வி கேட்கிறார்.

**கேள்வி** : உங்களுக்கு இறைவன் ஏதாவது ஒரு உறுப் பைக் கூடுதலாகக் கொடுக்க ஆசைப்பட்டால் எந்த உறுப் பைக் கேட்பீர்கள்?

**பதில்** : (உடனடியாக வருகிறது) இன்னொரு வாய்.

**கேள்வி** : வாயா? எதற்காக?

**பதில்** : நானும் என் கணவரும் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் பொழுது குறுக்கே என் மாமியார் பேசி னால், அவரோடும் சண்டை போட இன்னொரு வாய் இருந்தால் நன்றாக இருக்கும்.

இந்த பதிலைக் கேட்டதும் பத்மாவிற்கு சந்தோஷம் தாங்கவில்லை.

"ஆஹா! என்ன அருமையான பதில் பார்த்தீர்களா? எல்லாருக்கும் இதே ப்ராளம்தான்" என்று தன் கணவனைப் பார்த்துக் கேட்கும்பொழுதுதான் மாமியாரைப் பார்க்கிறாள்.

அவள் மாமியாருக்கு வந்ததே கோபம். அவர் உடனே, "ஏண்டிம்மா! நீ எப்ப உன் ஆம்படையானோட பேசறச்சே நா நடுவுல வந்திருக்கேன்? என்னமோ நீங்க பேசறீங்களா, சண்டை போடறீங்களான்னு பார்க்கறதுதான் என் வேலையா? நா இருக்கறது ஒங்களுக்கு இடைஞ்சலா இருந்தா இப்பவே சொல்லிடு. இந்த மாதிரி பேசாதே." (கண்ணை கசக்கி அழுகிறாள்.)

**பத்மா** : இப்ப என்ன சொல்லிட்டேன்னு சந்தியா காலத்துல இப்படி அழறீங்க. டீவி.ல வர்றது பார்த்து சந்தோஷப்படக்கூட இந்த வீட்டுல நிம்மதி இல்ல. சே...

**மாமியார்** : ஆமாண்டி, உன் நிம்மதியை நான்தான் கெடுக்கறேன். (அழுது கொண்டே) வயசான காலத்துல கிருஷ்ணா ராமான்னு கோவில் கோவிலாப் போய்ட்டு காசிக்குப் போகலாம்னா இந்த மனுஷர் மண்டைல ஏறி

**ரம்யா ராகவன்**

னாத்தானே! இப்படி கண்டவா வாய்லேயும் விழ வேண்டி இருக்கு!

பத்மா : (மகாதேவனை உலுக்கிறாள்) நான் கண்டவளா! பாருங்கன்னா உங்கம்மா சொல்றதை! உங்க குடும்பம் முழுக்க கண்டதை கேட்டதை எல்லா சிரா குடுத்து அனுப்பினாரே எங்க அப்பா! நானா கண்டவ? சீ என்ன வீடு இது!'' என்று சொல்லி டி.வி.ஐ அணைத்து விட்டு





உள்ளே போகிறாள்.

மகாதேவன் பேப்பரை விட்டு கண்ணை எடுத்து, இருவரது சண்டையும் காதில் விழாதபடி உரக்க அவருக்குப் பிடித்த பி.பி.சி. வைக்கிறார். பி.பி.சி. ஒரு 5 நிமிடம் கூட ஓடி இருக்காது. மாமியாருக்கும் மருமகளுக்கும் வந்ததே கோபம். தங்களில் யாருக்கும் சப்போர்ட் செய்யாமல் மகாதேவன் பாட்டுக்கு பிபிசி பார்ப்பதைக் கண்டு பத்மா கத்துகிறாள்.

**பத்மா** : ஆமாம்! உங்களுக்கு ஒருநாள் முழுக்க பிபிசி பார்த்துக் கொண்டிருந்தால் போதும். வீட்டுல என்ன நடக்கறது, என்ன பண்ணனும்னு ஏதாவது தெரியுமா? கறிகாய் என்ன விலை விக்கறதுன்னாவது உங்களுக்குத் தெரியுமா?

**மாமியார்** : எப்படித்தா இப்படி அசமஞ்சமா இருக்கியோ மகாதேவா! பாவம் பத்மா எவ்வளவுதா வேலை செய்வா? கறிகாய் வாங்கணும், கரண்ட் பில் கட்டணும், போன் பில் கட்டணும், பேங்க் போகணும், எல்லா அவளே எப்படிச் செய்வா? நீதான் ஏதாவது ரெண்டு வேலையாவது செய்யக் கூடாது?

திடீரென்று இரண்டு பேரும் ஒன்றாகச் சேர்ந்து தன்னை தாக்குவதை பார்த்த மகாதேவன் ஷாக் ஆகி மறுபடி சேரில் உட்கார்ந்து பேப்பருக்குள் தலையை நுழைக்கிறார். பிபிசி கேட்பாரில்லாமல் கத்திக் கொண்டிருக்கிறது.

உள்ளே நுழைகிறார் பத்மாவின் மாமனார் தன் வாக்கிங்கை முடித்துக் கொண்டு. அவர் பம்பாயில் வேலை செய்தவர். அதனால் அவருக்குப் பிடித்த 'ஜீ' டீ.வி.ஐ வைத்து விட்டு சேரில் கால் மேல் கால் போட்டுக் கொண்டு உட்காருகிறார். அதில் ஏதோ ஒரு ஹிந்தி பாட்டுக்குப் பத்து பெண்களும், ஆண்களும் கன்னா

பின்னாவென்று நடனம் ஆடுவதை தாளம் போட்டு, ரசித்துப் பார்க்கிறார். ஒரு 8 நிமிடம் ஓடி இருக்கும். மாமியாருக்கு எரிச்சல் தாங்கவில்லை.

**மாமியார்** : எப்பப் பார்த்தாலும் ஜி. டீ.வி. வெச்சு காள் காள்னு ஹிந்தில கத்தறாங்க. இல்லாட்டி அரையும், குறையுமா டான்ஸ். இந்த வயசுல இதெல்லாம் பார்க்கலைன்னு யார் அழுதா?

**மாமனார்** : உனக்குப் பிடிக்கலைன்னா பார்க்காதே. ஆஹா! ஹிந்திக்காரன் டான்சுல மட்டும் என்ன மூவ்மெண்ட்ஸ். பாட்டுல என்ன ரிதம், நேத்திக்கு வந்த இந்த மனிஷா குட்டி என்னமா ஆடறா? அதைப் பாரேன். எப்பப் பாரு அழுமூஞ்சி தமிழ் டிராமா போட்டா போறும் உனக்கு.

**மாமியார்** : ஆமா, நா எப்பவும் அழுமூஞ்சிதா. இந்த அழுமூஞ்சி கூடத்தானே முப்பது வருஷம் குடித்தனம் பண்ணேள். சின்ன வயசிலேயே எங்க சினிமான்னாலும் ஓட வேண்டியது. நா அழுமூஞ்சியாதா தெரியும் உங்களுக்கு. என்னை என்னிக்கு எங்க கூட்டிண்டு போயிருக்கிங்க.

**மாமனார்** : சரி, சரி, புலம்ப ஆரம்பிக்காதே. கொஞ்ச நேரம் பாட்டுக் கேட்க உடேன்.

**மாமியார்** : இந்த கன்னாபின்னா காதுறுத்தான் பாட்ட யார் கேட்கச் சொல்றா? வயசான காலத்துல சாயந்திர வேளைல விஷ்ணு சஹஸ்ரநாமம் படிச்சா போற வழிக்காவது புண்ணியம் கிடைக்கும். கொஞ்சங்கூட விவஸ்தை இல்லாம இந்த ஆட்டம் ரொம்ப முக்கியம்!" என்று சொல்லி டீ.வி.ஐ பட்டென்று அணைக்கிறாள். மாமனார் மொணமொணத்துக் கொண்டு விஷ்ணு ஸஹஸ்ரநாமம் படிக்க உள்ளே செல்கிறார்.

இரண்டே நிமிடத்தில் கல்லூரியிலிருந்து வந்த பத்மாவின் பிள்ளை சுரேஷ் டீ.வி.ஐ ஆன் செய்து "ப்ரைம் ஸ்போர்ட்ஸ்" சேனலில் WWF வைக்கிறான். 2 பேர் சதை மலையாக இருந்து கொண்டு சண்டை போடுகிறார்கள். உச்சஸ்தாயியில் ஒரே கத்தல். அமர்க்களம். ஐந்து நிமிடம் பொறுத்த பத்மாவிற்கு அதற்கு மேல் தாங்கவில்லை. உரக்கக் கத்துகிறாள்.

**பத்மா** : இதென்னடா கண்றாவி. ஏதாவது நல்லதா வையேன். இந்தக் கூத்த உன்னைத் தவிர யாரால பார்க்க முடியும்?

**சுரேஷ்** : என்னம்மா நீ, எனக்குப் பிடிச்ச ப்ரொக்ராம். நா பார்க்கறேன். உனக்கு என்ன வந்தது?

**மாமியார்** : ஆமாண்டா! வயசானவா நாங்களெல்லாம் பாக்கறதுக்கு இதுல என்ன இருக்கு? ஒருத்த மேல ஒருத்த விழுந்து அடிச்சிக்கறத பார்க்க சகிக்கலை.

**சுரேஷ்** : போ பாட்டி, இந்த வீட்டுல எனக்குப் பிடிச்சத நா பார்க்கக் கூடாதா?

**பத்மா** : ஏண்டா பாட்டியை எதிர்த்தா பேசறே? வேண்டாம்னா நிறுத்தேன்.

**சுரேஷ்** : என்னம்மா நீ மட்டும் அன்னைக்கு ஜெயின் டீ.வி.ல உனக்குப் பிடிச்ச சமையல் குறிப்பு பார்க்கறச்சே பாட்டி தூர்தர்ஷன்ல திரைமாலை வெக்கச் சொன்னா. நீ என்ன சொன்னே? எனக்குப் பிடிச்ச ப்ரொக்ராம் பார்த்தா இந்த கிழத்துக்கு பொறுக்காதே அப்படீன்னா இல்ல? இப்ப நீ மட்டும் மாத்த சொல்றியே?

**பாட்டி** : ஏண்டி பத்மா, என்னையா கிழம்னே? இந்த வயசுல நா எவ்வளவு தூரம் நடக்கறேன். எவ்வளவு வேலை செய்யறேன். நீ மட்டும் குமரின்னு நினைப்போ?

**பத்மா** : ஆமா 60 வயசான உங்கள கிழம்னு சொல்லாம வேற என்ன சொல்றது? என்னவோ சின்ன பையன் ஏதோ உளர்றான்னா, நீங்களா கேட்டுண்டு சண்டைக்கு வர்றீங்களே?

**பாட்டி** : இப்ப என்னடிம்மா சண்டை போட்டுட்டேன் நான்? வர வர உனக்கு வாய் ஜாஸ்தியா போச்சு.

**பத்மா** : ஆமா, எனக்குதான் வாய் ஜாஸ்தி. எல்லாரு ரொம்ப நல்லவா. இந்த வார்த்தையெல்லா கேட்டுக்கத்தா எங்க அப்பா என்னை காலேஜில பி.ஏ. வரைக்கும் படிக்க வெச்சி இங்க அனுப்பினார். சே, எல்லா எந் தலைவிதி.

**சுரேஷ்** : அடடா! ஒரு ப்ரொக்ராம் ஜாலியா பார்க்க முடியாதே இந்த வீட்டுல. நான் என் ப்ரெண்டு வீட்டுக்குப் போய் நிம்மதியா பார்க்கறேன். இந்த ஓட்டை டீ.வி.யை நீங்களே பாருங்க.

என்று சொல்லி விட்டு கோபமாக வெளியே போகிறான். ப்ரைம் ஸ்போர்ட்ஸ் கத்திக் கொண்டிருக்கும்போதே பத்மாவின் பெண் உஷா பாட்டுக் கிளாஸ் போய் விட்டு உள்ளே வருகிறாள். வரும்பொழுதே அவசர அவசரமாக சன். டீ.வி. "கல்லூரி கலாட்டா"

**சாம்பார் பொடி அரைக்கும் போது, ஒரு கைப்பிடி கல் உப்பும் போட்டு அரைத்தால் வண்டு வராது. ஞாபகமாக சாம்பார் செய்யும் போது உப்பைக் குறைத்துக் கொள்ளுங்கள்.**

**- ஆர். பார்வதி**





**சிறு குழந்தைகளின் துணிகளை மடித்து வைக்கும் கூடையில் கற்பூரத்தைப் போட்டு வைத்தால், எறும்பு, கரப்பு, பூச்சி வராது.**

**– ஆர். பார்வதி**

ப்ரோக்ராம் திருப்புகிறான். அதில் ஒரு பையன் "அந்த அரபிக் கடலோரம்..." என்று உரக்கப் பாடுகிறான். மற்ற கல்லூரி பெண்களும், இளைஞர்களும் அந்த பாட்டிற்கான டான்ஸ் என்று கன்னாபின்னாவென்று உடலை வளைக்கிறார்கள். அவன் பாட்டி கோபம் தாங்காமல் சட்டென்று தூர்தர்ஷன் வைக்கிறார். அதில் யாரோ "சரவண பவ எனும் திருமந்திரம்" என்று கச்சேரி பாடுகிறார்கள். இதைப் பார்த்த உஷா உரக்கக் கத்துகிறாள்.

**உஷா :** என்ன பாட்டி இது? சன் டீ.வி. வை முதலில்.

**பாட்டி :** ஆமாண்டி! சந்தியா வேளைல விளக்கு வெச்சதும், பொம்மனாட்டி பொண்ணா லட்சணமா ரெண்டு பாட்டு சாமிகிட்ட பாடாம இதென்ன கூத்து?

**உஷா :** பாட்டி, நீ இப்ப சன் டீ.வி. வெக்கப் போறியா இல்லியா? நாளைக்கு காலேஜ்ல எல்லோரும் "கல்லூரி கலாட்டா" பத்தி டிஸ்கஸ் பண்றச்ச, நா மட்டும் திரு திருன்னு முழிக்கணுமாக்கும். சீக்கிரமா திருப்பு பாட்டி.

**பாட்டி :** இருடி செத்த. நல்ல கச்சேரி. அதைக் கேக்கணும் எனக்கு. நீ உன் கூத்தை அப்புறமா வெச்சிக்கோ என்று சொல்லி டீ.வி. பக்கத்தில் போய் உட்காருகிறார்.

**உஷா :** என்ன பாட்டி இது. உன்னோட பெரிய தொந்தரவாய் போச்சு. நாளைக்கு நா காலேஜ்ல போய் என்ன பண்ணுவேன்? எல்லாத்தையும் நீங்களே பாருங்க எனக்கு ஒரு மண்ணும் வேண்டாம் என்று உரக்க கத்திக் கொண்டே ரூமுக்குள் போய் மடேரென்று கதவை அறைந்து சாத்துகிறாள்.

**பாட்டி :** வாயைப் பாரு இந்த வயசுல. பெண்ணை அடக்க ஒடுக்கமா வளர்க்கத் தெரியலை அம்மாக்காரிக்கு என்று முணு முணுப்பதை பத்மா கேட்டு விடுகிறாள்.

**பத்மா :** ஆமாம், என்ன சொல்லிட்டா இப்ப. நீங்கதான் நாள் முழுக்க டீ.வி. பாக்கறீங்க. அவள் இஷ்டத்துக்கு பத்து நிமிஷம் பார்த்தா என்ன? இந்த கச்சேரி ரொம்ப முக்கியமா? நான் பொண்ணை வளர்க்கிற அழகுக்கு நீங்க ஒங்க பையனை வளர்க்கலை.

**பாட்டி :** என் பையனுக்கு என்னடி குறைச்சல்? பார்க்க லட்சணமா இல்லியா? கை நிறைய சம்பாதிக்கலையா? அவனைப் பத்திப் பேசாதே!

**பத்மா :** எம்பொண்ணு வளர்ப்ப பத்தியும் யாரும் பேச வேண்டாம்.

**பாட்டி :** இந்த வீட்ல பேத்தியை ஒரு வார்த்தை சொல்லக் கூட எனக்கு உரிமையில்லை. இந்த டீ.வி. எழவாலதா எல்லா சண்டையும். இனிமே இந்த டீ.வி.கிட்ட வந்தா என்னை ஏன்னு கேளு என்று சொல்லி கண்ணை கசக்கிக் கொண்டே உள்ளே போகிறாள்.

**பத்மா :** எனக்கு மட்டும் என்ன சுகம் இந்த வீட்ல. எப்பப் பார்த்தாலும் சமையல் ரூம்தான். தோசை வார்க்கவும், சப்பாத்தி தேய்க்கவும்தான் எங்கப்பா என்னை அருமையா வளர்த்து இங்க அனுப்பி இருக்கார். இந்த டீ.வி. சனியனை தொலைச்சாதா வீட்ல நிம்மதி வரும். என்று சொல்லி சமையல் ரூம் பக்கம் போகிறார். கடைசியில் கச்சேரியும் யாரும் கேட்காமலே முடிந்தது. மாமனார் பூஜை அறையில் விஷ்ணு சகஸ்ர நாமம் சொல்கிறார். மாமியார் கண்ணை கசக்கிக் கொண்டு மூலையில் படுத்திருக்கிறார். பெண் ரூமில் கதவை அடைத்துக் கொண்டு. பையன் ப்ரெண்டு வீட்டில், பத்மா சமையல் அறையில்.

பூனை போல் மகாதேவன் எழுந்து டீ.வி. ஆன் செய்கிறார். அதில் ராஜ் டீ.வி.யில் ஒரு பேட்டி. பேட்டியாளர் ஒருவரைப் பார்த்துக் கேட்கிறார்.

உங்களுக்கு இறைவன் கண் குருடாகவோ, கால் முடமாகவோ, காது செவிடாகவோ, வாய் ஊமையாகவோ குறையாக்க விரும்பினால் எதைத் தேர்ந்தெடுப்பீர்கள்?

**மகாதேவன் (தன்னையும் அறியாமல் உரத்த குரலில்) :** காது செவிடாக.

**பேட்டியாளர் :** காரணம்?

**மகாதேவன் :** (டீ.வி. பேட்டியாளர் தன்னைத்தான் கேட்டதாக நினைத்துக் கொண்டு) ஏனென்றா கேட்கிறீர்கள்? இவ்வளவு நேரம் வீட்டில் நடந்த கலாட்டா காதில் விழவில்லையா? அப்படி இருந்தும் ஏனென்று கேட்கிறீர்கள்? என்று கத்திக் கொண்டே கையில் இருந்த பேப்பரை வீசி டீ.வி. மேல் எறிகிறார்.

எல்லோரும் என்னவோ ஏதோ என்று டீ.வி. ரூமில் குழுமுகிறார்கள்.

மறுபடி அங்கே என்ன நடந்திருக்கும் என்று நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள்.

# ஒப்பற்ற அழகும் குணமும்



ஃப்யூசுரா ஒன்றுதான் நியூயார்க்கிலுள்ள "தி மியூஸியம் ஆஃப் ஆர்ட்" கண்காட்சியில் இடம் பெற்ற ப்ரஷர் குக்கர்.

ஃப்யூசுரா ஹாக்கின்ஸ் அணிவரிசையில் அதிநவீன ப்ரஷர் குக்கர். அசாதாரண அழகும் நீடித்த உழைப்பும் அதிகமான வசதிகளையும் ஒருங்கே பெற்றது.

## நீடித்த உழைப்பு

ஃப்யூசுராவின் சாட்டிலான் மேற்பாகம் பளபளப்பு குறையாதது. குழி ஏற்படாதது. கீறல் அடைவதோ வண்ணம் மாறுவதோ இல்லை. ஆண்டுகள் தோறும் புத்தம் புதியதாய் காட்சியளிக்கிறது. ஃப்யூசுராவின் இரட்டிப்பான பருமன் கொண்ட அடிப்பாகம் சமமாகவே இருக்கிறது. இதன் ப்ரத்யேக ப்ரஷர் ரெகுலேடிங் சிஸ்டமானது ஸ்டீம் வெண்ட் தானாகவே சுத்தமடைய வழி செய்வதால், கூடுதல் பாதுகாப்பு நிச்சயமாகிறது.

## அதிக வசதி

ஃப்யூசுராவின் அபூர்வமான, விரல் பட்டவுடன் ப்ரஷர் வெளியேறும் விதமும், பாந்தமான சூடேறாத கைப் பிடிகளும் உபயோகிப்பதில் திருப்தியைக் கொடுக்கின்றன. சிறப்பான உருவ அமைப்பில் உணவுகளை தெளிவாக பார்க்க முடிவதால், கிளறுவதும் ஊற்றுவதும் எளிதாகிறது. ஃப்யூசுராவின் சாட்டிலான் மேற்பாகம் மிகச் சுலபமாக சுத்தம் செய்யும் வகையில் அமைந்துள்ளது.

## அழகு, அளவு, விரைவு

உங்களின் ஒவ்வொரு சமையல் தேவைகளுக்கேற்ப உங்களை திருப்தி செய்ய மூன்று அழகிய அளவுகளில் கிடைக்கிறது. நேரம், எரிபொருள் மற்றும் செலவுகளில் உங்களுக்குச் சிக்கனம். ஒரு மைக்ரோ ஓவனை விட ஃப்யூசுரா சராசரியாக 46% அதி வேகமாக சமைக்கிறது. இன்றே ஃப்யூசுராவை வாங்கிடுவீர், ருசியான சத்தான உணவை சமைக்க - விரைவாக.

அதிகபட்ச சில்லரை விலை 3.5 லிட்டர் ரூ. 1350, 5 லிட்டர் ரூ. 1500 (செப்பரேட்டர்களுடன் ரூ. 1650), 7 லிட்டர் ரூ. 1650 (செப்பரேட்டர்களுடன் ரூ. 1850).

ஏதேனும் உதவி தேவைப்பட்டால் எழுதவும்: ஹாக்கின்ஸ் டிபார்ட்மெண்ட் எண் 153, த. பெ. எண் 6481, பம்பாய் 400 016.

# ஃப்யூசுரா
## ப்ரஷர் குக்கர்

கீழ்க்கண்ட டீலர்களிடம் கிடைக்கிறது:




இந்தியாவின் நம்பிக்கைக்குரிய தரம்

**தமிழ் நாடு:** **சென்னை: அடையார்** செல்வ விநாயகா ஸ்டோர்ஸ், 73/4, எல். பி. ரோடு • **நகினிங் பஜார்** எஸ். சந்தோஷ நாடார் சன் ஃபர்ம், 86 • **மின்ட் தெரு** ராஜா மெட்டல் கார்ப்பரேஷன், 239 • **பாண்டி பஜார்** பொன்னி ஸ்டோர்ஸ், 37 • ரெத்னா ஸ்டோர்ஸ் ஃபர்னிச்சர் டிபார்ட்மெண்ட், சிவா கார்ப்பரேஷன் • **ஆயிரம் விளக்கு** AAZ ஏஜென்ஸிஸ், 9, அஜிஸ் முல்க் 4 வது தெரு • **தி. நகர்** சரவணா ஸ்டோர்ஸ், 13, ரெங்கநாதன் தெரு • ரெத்னா மெட்டல்ஸ், 55, ரெங்கநாதன் தெரு • **வளசரவாக்கம்** லதா ஸ்டோர்ஸ், 139, ஆற்காட் ரோடு □ **சிதம்பரம்: தெற்கு தேரடி வீதி** ஸ்ரீ விநாயகா பாத்திரக்கடை, 25 □ **கோயமுத்தூர்: காந்திபுரம்** கோவை ஸ்டீல்ஸ், ஸ்ரீ லட்சுமி கார்ப்பரேஷன் • **ஆர். எஸ். புரம்** ருடியல் கிஃப்ட் ஹவுஸ், 8, கிழக்கு பாஷ்யகாரலு தெரு □ **மதுரை: அம்மன் சன்னதி** எஸ். சந்தோஷ நாடார் கார்ப்பரேஷன், 3 • **கீழ ஆவணி மூல வீதி** எஸ். இப்ராஹிம் & கோ, 90-92 • **கீழ வாசல்** ஆல்விண்ராஜ் மெட்டல்ஸ் சென்டர், 180-181, கீழ வெளி வீதி • எஸ். செல்லையா நாடார் & சன்ஸ், 267, காமராஜர் சாலை □ **பட்டுக்கோட்டை: தலையாரி தெரு** ஸ்ரீ இராமு பாலிஷ் கம்பெனி, 42 □ **சேலம்: லெயின் பஜார்** வா. சந்திரசேகரம் & சன்ஸ், 357 கடை வீதி □ **திருச்சி: மலைவாசல்** மங்கள் & மங்கள், 25, என். எஸ். பி. ரோடு • சிவா மெட்டல்ஸ், 40-ஏ, என். எஸ். பி. ரோடு □ **வேலூர்: லெயின் மார்க்கெட்** ஷோ ஸ்டீல் ஹவுஸ், நி-31.

**பாண்டிச்சேரி:** **ஜவஹர்லால் நேரு தெரு** கந்தன் அண்ட் கம்பெனி, 22.

**ஆந்திர பிரதேசம்:** **ஹைதராபாத்: மெட்ரோ எஸ்டேட்** விசால் ஹோம் அப்ளையன்ஸ், அபித் ரோடு • **நம்பள்ளி** அஞ்சலி எலக்ட்ரானிக்ஸ், நம்பள்ளி ஸ்டேஷன் ரோடு • ஸ்டீல் பாலஸ், 5-4-455, ஸ்டேஷன் ரோடு • **கஸ்தான் பஜார்** பாலிராம் கிஷாராம் □ **செகந்தராபாத்: பாட்டா எதிரில்** டெக்கான் அயர்ன் ஒர்க்ஸ், ஆர். பி. ரோடு • சாகி நாலா ஸ்டீல் பாலஸ், ஆர். பி. ரோடு.

**கர்நாடகா:** **பெங்களூர்: ஜெயநகர்** இந்திரா மெட்டல் மார்ட், 27-ஏ, கிராஸ் 4 வது ப்ளாக் • **சிவாஜி நகர்** ஆடம்ஸ் & கோ, சிக்காட்ஸ் ஸ்கோயர்.

**மகாராஷ்டிரா:** **தென் பம்பாய்** ப்ரீ கேண்டி பென்சர், புலாபாய் தேசாய் ரோடு • **தாதர் மேற்கு:** கிச்சன் பாலஸ், எம். ஸி. ஜவர்லே மார்க், கபூதர் கானா எதிரில் • முகேஷ் எம்போரியம், எம். ஸி. ஜாவ்லே மார்க், கபூதர் கானா எதிரில் • **தாதர்:** பி. பி. பூன்மியா 6, விஜய் நகர், கபூதர் கானா அருகில் • **போர்ட்:** அப்னா பஜார் கோ-ஆப். டிப்பார்ட்மெண்ட் ஸ்டோர், 60, பி. எம். ரோடு • **பவுண்டன்:** அக்பர்-அலிஸ், 45, வி. என். ரோடு • **கல்பாதேவி ரோடு:** ரத்திலால் மோகன்லால், 46, கன்சாரா சால் • **லோகர் சால்:** மோடிவாலா என்டர்பிரைசஸ், ஷாப் எண் 33 • **நாயகாம்:** அப்னா பஜார் கோ-ஆப். டிப். ஸ்டோர்ஸ், 106-ஏ, கோவிந்ஜி கேனி ரோடு • **பாந்ராபோல் ரோடு:** சோனியா என்டர்பிரைசஸ், 179-ஏ, சர்வோதயா நகர் எதிரில் • **தாக்கூர்த்வார்:** அமர் என்டர்பிரைசஸ் 238, அகர்வால் பில்டிங் • **மேற்கு புறநகர்: (மேற்கு ரயில்வே) மட்டுங்கா மேற்கு** அருணோதயா ஸ்டோர்ஸ், பி. யுனாதா பில்டிங், சிட்டிலைட் சினிமா எதிரில் • **பாந்திரா மேற்கு:** விமல் ஸ்டீல் சென்டர், 120, பஜார் ரோடு • **வில்லே-பார்லே கிழக்கு:** மன்சுக் டிரேட்டர்ஸ், அகர்வால் மார்க்கெட், ரயில்வே நிலையம் எதிரில் • முருகன் அப்ளையன்ஸ், அகர்வால் மார்க்கெட், ரயில்வே நிலையம் எதிரில் • **அந்தேரி மேற்கு:** ஆனந்த் ஸ்டீல் எம்போரியம், 7, தவுலிசி பில்டிங், லோகண்ட்வாலா • ஹோம்கோ ஸ்டீல் சென்டர், எஸ். வி. ரோடு, ரயில் நிலையம் எதிரில் • **காந்திவிலி கிழக்கு:** கவுதம் சேல்ஸ் ஏஜன்ஸி, 2, துர்க்கா சதன், சி. பி. ரோடு • **போரிவிலி:** ஒவ்வால் ஸ்டீல் சென்டர், 18, கோயல் ஷாப்பிங் ஆர்கேட் • **போரிவிலி மேற்கு:** ப்ரமானிக் சென்டர், ரயில் நிலையம் எதிரில் • **பயந்தர் கிழக்கு:** தேவேந்தர் சேல்ஸ் அண்ட் சர்வீஸ், ராமா நிவாஸ், ஷாப் எண் 1, பி. பி. ரோடு • **மத்திய புறநகர்: (மத்திய ரயில்வே) சயான் கிழக்கு** ஸ்ரீ முருகன் ஸ்டீல் ஹவுஸ், மேரி மேன்ட் கார்னர், பி. ஏ. ரோடு • **செம்பூர்:** நட்ராஜ் எம்போரியம், நட்ராஜ் சினிமா பில்டிங், ஸ்டேஷன் ரோடு • **திரு பம்பாய்: வாஷி** முருகன் என்டர்பிரைசஸ், பிக் ஷாப்பிங் செக்டர் 17 • ஸ்ரீ கிருஷ்ணா ஸ்டீல் எம்போரியம் 10-ஏ ஆனந்த் சாகர், செக்டர் 17 • **தானே (மேற்கு):** கோல்டன் ஸ்டீல் & அப்ளையன்ஸஸ், கோக்லே ரோடு, நவ்பாடா • மகாவீர், கோக்லே ரோடு, நவ்பாடா • **டோம்பிவிலி (கிழக்கு):** மாரு அப்ளையன்ஸஸ், பாட்டீல் ரோடு • **உல்லாஸ்நகர்:** நாராயண் டிரேடர்ஸ், 77, ஜப்பானி பஜார்.

H C 4027 MM TM

# பரு, மங்குவிங்கு வீட்டு வைத்தியம்

எலும்புக்கும் சதைக்கும் போர்வையாக அமைந்திருக்கும் சருமத்தைப் பாதுகாக்க எவ்வளவு முயன்றும் சிலருக்கு தோலின் மீது நோய்கள் வந்து வேதனை தருவதாக அமைந்து விடும். ஒருவரின் அழகுக்கு அடிப்படையே தோல்தானே! அதில் நோய் வந்தால் துன்பம்தானே?

ஆரோக்கியமான மனிதர்களின் உடலில் கூட லேசான வெண்புள்ளிகள் ஏற்படுவதுண்டு. அது பற்றி உடனுக்குடன் கவனிக்காவிட்டால் நாளடைவில் உதடுகள், கண், புருவம், நகம் மற்றும் தலைமுடியின் அடிப்பாகம், காதின் ஓரங்கள் என பரவும்.

பிரசவித்த பெண்களின் முகத்தில் வங்கு விழும். இதற்குக் காரணம் அவர்களின் வெள்ளைபாடு நோயே ஆகும். எப்படிப்பட்ட உடல் வேதனையையும் தாங்கும் சக்தி கொண்ட மனிதனால் தோல் நோயால் ஏற்படும் மனவேதனையை தாங்கிக் கொள்ள முடிவதில்லை. தன் முகத்தையும், தோலின் நிறமாற்றத்தையும் மற்றவர்கள் பார்த்து பரிதாபப்படுவதையோ, வெறுப்பதையோ அவர்களால் சகித்துக் கொள்ள முடிவதில்லை. எங்களுடைய வடஆற்காடு அம்பேத்கர் மாவட்டம், வாணியம்பாடி, நியு டவுன், மசூதி வீதியில் உள்ள யுனானி ஆராய்ச்சி மருத்துவமனைக்குக் கடந்த 16 ஆண்டு காலமாக சிகிச்சைக்காக வரும் பெரும்பாலான வெண்குஷ்டம் கொண்ட நோயாளிகள் மனநோயாளிகளாகத்தான் வருகின்றார்கள். வெண்புள்ளிகள் உடலுக்கு எந்தத் தீங்கு விளைவிக்காதிருந்தாலும் அவர்கள் தாழ்ந்த மனநிலை கொண்டவர்களாக இருப்பார்கள். சிலர் தற்கொலை செய்து கொள்ளக்கூடிய மனநிலையிலும் வந்திருக்கின்றார்கள்.

வெண்குஷ்டம் எப்படி உண்டாகிறது என்பதை இதுவரை அறிவுப்பூர்வமாகவோ, விஞ்ஞானப்பூர்வமாகவோ அறிய முடியவில்லை. பாலும், மீனும் ஒரே சமயத்தில் சாப்பிட்டால் வெண்குஷ்டம் வரும் என்று பாட்டி வைத்தியம் கூறுகிறது. ஆனால் மீன் சாப்பிடாதவர்களுக்கும் இந்த நோய் பரவலாக ஏற்படுகிறது. மீன் சாப்பிட்டவுடன்



பால் அல்லது பாலால் தயாரிக்கப்பட்ட பலகாரங்கள், புளிப்பான பொருட்கள், சாப்பிடுவதைத் தவிர்க்க வேண்டும் என்று ஓர் ஆய்வில் கூறப்பட்டுள்ளது.

பூனை அல்லது எலி சாப்பிட்டு விட்ட எச்சில் உணவு வகைகள் அல்லது கலாய் மூலாம் பூசாத செம்புப் பாத்திரத்தில் வெகு நேரம் வைக்கப்பட்ட உணவு வகைகளை சாப்பிடுவதால் வெண்குஷ்டம் ஏற்படுகிறது என கிராமங்களில் பொதுவாக நம்பப்படுகிறது. வெட்டை நோய் ஏற்பட்டு






• டாக்டர் அக்பர் கவுஸர் தம்பதிகள்

உடலின் நோய் எதிர்ப்புச் சக்தி குறைந்தாலும் தோலின் நிறமாற்றம் உண்டாகும் என அலோபதி, ஹோமியோபதி, பயோ கெமிஸ்ட்ரி மருத்துவ முறைகள் கூறுகின்றன.

அசுத்தமான இரத்தம், குளிர்ச்சியான இரத்தம் ஆகியவைதான் வெண்குஷ்டம் ஏற்பட முக்கிய காரணங்களாகும். சாப்பிட்ட உணவு சரியாக ஜீரணிக்கப்படாவிட்டால் உடல் முழுவதும் அசுத்தமாகி விடுகிறது. இந்த அசுத்தம் சளியால் அல்லது சுரத்தால் ஏற்படும் போது வெண்குஷ்டம், வெண்புள்ளிகள் நோய்கள் உண்டாகின்றன என்று யுனானி மருத்துவம் தெரிவிக்கின்றன. இந்திய அரசு சுகாதார அமைச்சகம் "சென்ட்ரல் கவுன்சில் ஃபார் ரிசர்ச் இன்யுனானி மெடிசன்" என்னும் நிறுவனம் மூலம் பல கோடி ரூபாய் பொருட்செலவில் 1972 முதல் வெண்குஷ்ட நோயைப் பற்றி, நோய் ஏற்படக் காரணங்கள், அதற்கான சிகிச்சை முறைகளைப் பற்றியும் ஆய்வு நடத்தியது.

கடலோரப் பகுதிகளில் வாழ்பவர்கள் வெண்குஷ்ட நோயால் அதிகமாக பாதிக்கப்பட்டிருக்கின்றார்கள் என்ற உண்மை மேற்கண்ட ஆய்வில் தெரியவந்துள்ளது.

மத்திய அரசு 'பாப்சி' என்னும் கார்போக அரிசியை முக்கிய மருந்தாக வெண்குஷ்ட நோயை குணமாக்க தேர்ந்தெடுத்தது. துவரம் பருப்பு வடிவத்தில் சப்பையாகவும் கருப்பாகவும் இருக்கும் கார்போக அரிசி 70 முதல் 80 சென்டி மீட்டர் உயரமான செடியில் விளைகின்றது. நம் நாட்டில் பல மாநிலங்களில் இதை பயிரிடுகின்றார்கள். இதை யுனானி விஞ்ஞானிகள் ஆய்வு செய்து கார்போக அரிசி எண்ணெயை வெளியிடுகின்றனர். இதற்கு 'ரோகன் பாப்சி' என்று பெயர். இதை வெண்புள்ளிகளின் மீது பூசுவதற்குத் தருவார்கள்.

கார்போக அரிசி விதைகளை இஞ்சி சாற்றில் ஒரு வாரம் வரை ஊறவைத்து விட வேண்டும். எட்டாவது நாள் விதைகளை கைகளால் கசக்கி மேல் தோலை மட்டும் அகற்றி விட வேண்டும். இப்படிச் செய்வதால் விதைகளின் விஷத் தன்மை நீங்கி விடுகிறது. சுத்தப்படுத்தப்பட்ட கார்போக அரிசி விதைகளை நிழலில் உலரவைத்து பவுடராக்கிக் கொண்டு 1 கிராம் முதல் 6 கிராம் வரை சாப்பிட்டால் வெண்புள்ளிகள் குணம் பெறும் என்று மத்திய அரசு அறிவித்துள்ளது.

100 கிராம் புளியங்கொட்டையை எடுத்து நான்கு நாட்கள் தண்ணீரில் ஊற வைத்து ஐந்தாவது நாளில் அதன் தோலை கத்தியால் உரித்து எடுத்து அத்துடன் கார்போக

அரிசியை அரைத்து பவுடராக்கிக் கொள்ள வேண்டும். அதை வெண்புள்ளிகள் மீது தொடர்ந்து ஒரு வாரம் வரை பூசலாம். வெண்புள்ளிகள் மீது அரிப்பு, கொப்பளங்கள் ஏற்பட்டால் சில நாட்களுக்கு மருந்து பூசுவதை நிறுத்தி விட வேண்டும். ஒரு டீஸ்பூன் பவுடரை இரவில் தண்ணீரில் ஊற வைத்து காலையில் நீர் மட்டும் குடிக்க வேண்டும். அரிப்பு குறைந்தபின் மீண்டும் பூச மருந்துகளை தொடர்ந்து பயன்படுத்தலாம். இவ்வாறு அந் நிறுவனம் தெரிவித்துள்ளது.

**பத்தியம் :**

வெண்குஷ்ட நோய் கொண்டவர்கள் சில உணவுப் பொருட்களைத் தவிர்க்க வேண்டும். சிலவற்றை சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று மத்திய அரசின் யுனானி மருத்துவ ஆராய்ச்சிக் கழகம் பரிந்துரை செய்துள்ளது. வெண்குஷ்டம் கொண்டவர்கள் குளுமையாக மற்றும் ஈரமான உணவு வகைகள் மீன், பால், மற்றும் சளியை உண்டாக்கும் காய்கறிகளைச் சாப்பிடக் கூடாது. இதற்கு மாறாக உடலுக்கு உஷ்ணத்தையும் வறட்சியையும் தரும் உணவு வகைகளை மட்டுமே சாப்பிட வேண்டும் என்று அரபு நாட்டு மருத்துவ மாமேதையும், வெண்குஷ்ட நோய் சிகிச்சை நிபுணருமான ஹகீம் இப்னே சராபியூன் என்னும் மருத்துவர் பன்னூறு ஆண்டுகளுக்கு முன் விளக்கமளித்துள்ளார்.

**தவிர்க்க வேண்டிய உணவு வகைகள் :**

முட்டை, மீன், மாட்டிறைச்சி, பால், தயிர், மோர், கத்தரிக்காய், எலுமிச்சை, புளி, வாழைப்பழம், ஆரஞ்சு வகைப் பழங்கள், சுரைக்காய், புளிச்சக்கீரை, நறுமண உணவு இலைகள், தட்டைப்பயிறு, புளிப்பான ஆப்பிள், கொய்யா, அல்பகராபழம், முந்திரிப் பருப்பு, முலாம் பழம், தும்மட்டிப் பழம், சைனா பேரீட்சை, வேர்க்கடலை, புளிப்பான தக்காளி, மாதுளம் பழம், நுங்கு, நெல்லிக்காய், சேப்பங்கிழங்கு, இலந்தைப் பழம், அன்னாசிபழம், மற்றும் குளிர்ந்த பானங்களைத் தவிர்க்க வேண்டும்.

**மருந்து சாப்பிடும் காலத்தில் சேர்க்க வேண்டிய உணவு வகைகள் :**

கோதுமை, சோளம், பருப்பு வகை, கடலைப் பருப்பு, தூய நெய், சோயாபீன்ஸ், அவரைக்காய், பசலைக் கீரை, பாகற்காய், பீர்க்கங்காய், வெங்காயம், பீட்ருட், கேரட், மிளகாய் வற்றல், மிளகு, ஆட்டுக்கறி, வெள்ளாடு, செம்மறி, சேவல் கோழி, பறவை, ஊறுகாய் (புளிப்பில்லாதது), அத்தி, பாதாம் பருப்பு, பிஸ்தாபருப்பு, வாதுமை பருப்பு, பேரீட்சை, காட்டத்தி, மாம்பழம், தேங்காய், வாதுமை வகை, திராட்சை, சூரிய காந்தி விதை, உருளைக்கிழங்கு, அரிசி, பப்பாளி, கீரைத்தண்டு, வெந்தயம், முருங்கைக்காய், டர்னிப், கொள்ளு, முட்டை கோஸ், காலிஃபிளவர், உணவு உப்பு போன்றவைகளைச் சாப்பிடலாம்.

**வீட்டு வைத்தியம் :**

நம் நாட்டில் காட்டு அத்திப்பழம் என்ற பெயரிலும், காற்றாடிப்பழம் என்ற பெயரிலும் ஒருவகையான அத்திப்பழம் கிடைக்கின்றது. இதைத் தேடி அலையத் தேவையில்லை. நாட்டு மருந்துக் கடைகளில் கேட்டால் உலரவைத்த நிலையில் விற்பார்கள். அரை கிராம் காட்டு அத்திப் பழத்தை தினசரி ஒருவேளை சாப்பிட்டு வந்தால் வெண்புள்ளிகள், வெண்குஷ்டம், தோலின் நிறமாற்றம் குணம்பெறும். இதை பவுடராக்கி பன்னீரில் கலந்து வெண்புள்ளிகள் மீது பூசலாம். பிரபல யுனானி கம்பெனி "பர்சினா" என்ற பெயரில் இதை மருந்தாக தயாரித்து கடைகளில் விற்கின்றது.

• கருஞ்சீரகம், ஆளிவிதை, இரண்டையும் சம அளவில் வறுத்து காடியில் கலந்து வெண்புள்ளிகள் மீது மூன்று நான்கு மாதங்கள் பூசி வந்தால் வெண்குஷ்டத்தின் தோல் நிறமாற்றம் குணம்பெறும். இத்துடன்

இஞ்சி மலிவாகக் கிடைக்கும் போது தோல் சீவி நன்கு கழுவி விட்டு வட்ட வட்ட வில்லைகளாக வெட்டி எடுத்து வைத்து அப்படியே நெய்யில் (சிறிதளவு) பொரித்து எடுத்து இதே போல் சர்க்கரைப் பாகில் நன்கு போட்டு கெட்டியாக்கி தனித்தனியாக வரும் வரை பாகைக் கிளறி கீழே இறக்கி ஆறியதும் பாட்டிலில் எடுத்து வைத்தால் மாதக்கணக்கில் கேடு வராது. வயிற்று உபாதைகளுக்கு நல்லது. ஜீரணக் கோளாறு சமயங்களில் 2 வாயில் போட்டுக் கொள்ளலாம்.



- கே. நீலா

# நீங்கள் கடும் உழைப்பினால் சம்பாதிக்கும் பணத்திற்கு "திடமான" பயன்கள் தேவை






நீங்கள் சம்பாதிக்கும் பணம் உங்களுக்கு பல பயன்களை வழங்கினாலும், அந்தப் பணம் திடமானதல்ல. அது ஏதேனும் ஒரு வழியில் செலவாகிக் கொண்டே இருக்கிறது. கண்ணை மூடித் திறக்கும் வேகத்தில், அது உங்கள் கைகளிலிருந்து நழுவி விடுகிறது. அதனால்தான், துகர் உங்கள் சேமிப்பைப் பாதுகாப்பதோடு மட்டும் அல்லாமல், அதற்கு திடமான பயன்களும் அளிக்கிறது. இன்றே துகரில் ஒரு சேமிப்புத் திட்டத்தைத் துவக்கி திடமான பயன்களைப் பெறுங்கள்.



**DUGAR FINANCE INDIA LTD**

HIRE PURCHASE ➲ LEASING ➲ PROPERTY DEVELOPMENT ➲ PUBLIC DEPOSITS ➲ MERCHANT BANKING ➲ FOREIGN EXCHANGE ➲ SHARE POINT

REGD. OFFICE: DUGAR TOWERS, 123 MARSHALLS ROAD, MADRAS 600 008. ☎ 8283535 (10 LINES) FAX: 8281122

கிளைகள்:

மவுண்ட்ரோடு: 805, மவுண்ட் ரோடு (LIC எதிரில்) சென்னை - 600 002. ☎ 8521666/8521888

தி.நகர்: 54, முதல் மாடி, தெற்கு உஸ்மான் ரோடு (தி.நகர் பஸ் நிலையம் அருகில்) சென்னை-600 017. ☎ 4341541.

அடையாறு: 7, TNHB ஷாப்பிங் சென்டர், முதல்மாடி, 19 முதல் அவின்யு, சாஸ்திரி நகர், சென்னை- 600 020. ☎ 4917700.

மயிலாப்பூர்: 34/1, வடக்கு மாதா தெரு, சென்னை 600 004. ☎ 4942256.

கோவை: பாத்திமா மன்சில், 526, II வது மாடி, Dr. நஞ்சப்பா சாலை, காந்திபுரம், கோவை - 641018. ☎ 231867.

மதுரை: 166-வடக்குவெளி வீதி, மதுரை - 625 001 ☎ 36106.

சேலம்: 175, செர்ரி சாலை (மாடியில்) (மாவட்ட மத்திய நூலகம் எதிரில்) சேலம் - 636 007. ☎ 418769.

திருச்சி: ஷாரா காம்ப்ளெக்ஸ், 50/11, கரூர் பை-பாஸ் சாலை, திருச்சி - 600 002. ☎ 469852.

● For statutory information please refer to Economic Times dated 12-11-94

TAKE WING 839 D1 - TM - MAM



அபிராமியின்

# மயோபுரா ஹோலி ரிசார்ட்ஸ் பி லிமிடெட்

**"A UNIT OF ABBIRAMI GROUP COMPANIES"**

Enroll Today

Enjoy Tomorrow onwards








**OPERATIONAL RESORTS AT PRESENT TIRUPATHI & VELANGANNI**
**SHORTLY AT 55 MORE PLACES**

**II.**
- ★ முதலீடு ரூ. 5000/- மட்டுமே
- ★ ரூ. 5000/- 10வது வருடம் திரும்ப பெறுவீர்.
- ★ 1 நாள் இலவசமாக தங்கலாம்
- ★ இலவச பிக்அப் / டிராப்
- ★ ரூ. 10,000/- இலவச விபத்து காப்பீடு
- ★ போனஸ் ரூ. 75,000/- பெறுவீர்
- ★ VIP ALFA சூட்கேஸ் இலவசம்

**III.**
- ★ ரூ. 25,000/- மட்டும் 5 வருடங்களுக்கு வைப்பு நிதி திட்டத்தில் செலுத்தி,
- ★ ஆறு மாதங்களுக்கு ஒரு முறை ரூ. 3000/- பெறுவீர்
- ★ 3 நாட்கள் இலவசமாக தங்கலாம்.
- ★ இலவச பிக்அப் / டிராப்.
- ★ ரூ. 20,000/- இலவச விபத்து காப்பீடு
- ★ ரூ. 1.5 லட்சம் போனஸ் பெறுவீர்.
- ★ 100gm. வெள்ளி குத்து விளக்கு பரிசு.


பதிவு அலுவலகம்: **B-18, சித்ரா காம்ப்ளக்ஸ், சத்திரம் பஸ்ஸ்டாண்ட், திருச்சி - 2. ✆ 31467**

கிளைகள் : ● 49/21, முருகன் காம்ப்ளக்ஸ், பிருந்தாவன் தெரு, மேற்கு மாம்பலம், **சென்னை – 33.** ✆ 4840258 ● 55/B, சின்னையா காம்ப்ளக்ஸ், ஐந்து ரோடு, கொரி தியேட்டர் எதிரில், **சேலம் – 4.** ✆ 445037. ● D-6, K.L.R. பில்டிங், 207, சாஸ்திரி ரோடு, ராம் நகர், **கோயம்புத்தூர் – 9.** ✆ 230345.PP. ● 545, அருணா காம்ப்ளக்ஸ், இரண்டாவது தளம், கவின் மருத்துவமனை எதிரில், பெருந்துறை ரோடு, **ஈரோடு–11.** ✆ 74781. ● ரெஸிடென்ஸியல் மேனேஜர் : திரு K.R. ராமமூர்த்தி, 34 மைன் தெரு, நாமக்கல் – 1. ✆ 22310



காய்கறி சாப்பிடாத குழந்தைகளுக்கு காரட், பீட்ரூட் இவைகளைத் தோல் சீவி 2 அங்குல நீளத்திற்கு வெட்டி ஆவியில் வேகவைத்து எடுங்கள். சீனி பாகு வைத்து கெட்டிப் பாகு வரும்போது அந்த காரட், பீட்ரூட் துண்டங்களை பாகில் போட்டு நன்றாக புரட்டி எடுத்தால் தனித்தனி துண்டுகள் "மூரபா" போல் வரும். அவைகளைத் தட்டில் எடுத்து வைத்தால் குழந்தைகள் விரும்பி உண்பார்கள். தேவையானால் சர்க்கரைப் பாகில் ரோஸ், அல்லது வேறு எஸன்ஸ்களை விடலாம்.

– கே. நீலா

இரண்டு கிராம் கருஞ்சீரகத்தைத் தேனில் கலந்து ஒரு டீஸ்பூன் அளவில் தினசரி ஒரு வேளை சாப்பிட்டு வந்தால் வெண்புள்ளிக்களின் மீது விரைவில் கரும்புள்ளிகள் வரும்.

• உத்ராஜ்பழம் என்னும் கடார நாரத்தை பழத்தின் தோலை தண்ணீரில் அரைத்துப் பசையாக்கி விஷப்பூச்சிகளின் கடி, வெண் புள்ளிகள், படைகள், சொறி, சிரங்கின் மீது பூசினால் விரைவில் குணம்பெறும். பொதுவாக இதை ஊறுகாய் செய்யப் பயன் படுத்துவார்கள்.

**வங்கு :**

பெண்களில் வெள்ளைப்பாடு நோய் ஏற்பட்டால் முகத்தில் வங்கு விழும். சில பெண்களுக்கு பிரசவத்திற்குப் பிறகு முகத்தில் நிறமாற்றம், வங்கு, கரும்புள்ளிகள் தோன்றும். இதற்கு எத்தனை களிம்புகள் பூசினாலும் மறைவதில்லை. இதை குணமாக்க கீழ்க்காணும் வீட்டு வைத்தியம் பயன்தரும்.

• வெள்ளை முள்ளங்கி தோலை முகத்தின் மீது பூசினால் கருநிற தழும்புகள் 'மங்கு' நீங்கும்.

• வெங்காயத்தை அதிகளவில் சாப்பிடுபவர்களின் தோல் ஆரோக்கிய நிலைக்கு மீண்டும் திரும்பும். வெங்காயத்துடன் உப்பு, தேன் இரண்டும் கலந்து பூசினால் முகத்தில் ஏற்படும் வங்கு, வெண்புள்ளிகள், விரைவில் குணம்பெறும். சமையலில் வெங்காயத்தை அதிகமாக சாப்பிடுபவர்களின் கன்னங்கள் கவர்ச்சியாகவும், மாநிறமாகவும் இருக்கும். முகத்தின் மஞ்சள் தன்மை நீங்கும்.

• குங்குமப் பூவை முகத்தேமல், வங்கு மீது பூசலாம்.

**மருக்கள் :**

அழகான முகத்தில் ஓரிரு மச்சங்கள், மருக்கள் இருப்பது அழகை மேலும் அதிகரிக்கும். ஆனால் அதே மச்சங்கள் மருக்களாக மாறி உடல் முழுவதும் பரவும் போது பார்ப்பதற்கும் அசிங்கமாக இருக்கும். சில பெரிய மருக்கள் புண்ணாகி துன்புறுத்தும். அவைகளை அறுவை சிகிச்சை செய்து அகற்றுவார்கள். இதற்கு பீட்ரூட் கிழங்கு (டர்னிப்) சிறந்த மருந்தாக அமைந்திருக்கின்றது. டர்னிப் இலைகளை தண்ணீரில் கொதிக்க வைத்துத் தினசரி மருக்களின் மீது லேசாக மசாஜ் செய்யலாம். டர்னிப் கிழங்கையும் அரைத்து மருக்களின் மீது பூசலாம்.

**முகப் பருக்கள் :**

வயதுக்கு வரும் காலத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் முகப்பருக்கள் வரும். இதற்குக் காரணம் முகத்தில் உள்ள கொழுப்புச் சுரப்பிகளில் வேர்க்காடு ஏற்படுவதேயாகும். இரத்தத்தில் அதிகமான உஷ்ணம் இருந்தாலும் முகப்பருக்கள் அதிகமாகும். நாளடைவில் அது முகத்தின் கட்டிகளாகவும் கொப்பளங்களாகவும் மாறி துன்புறுத்தி முகத்தின் அழகை கெடுத்து விடும். மெதுவான மென்மையான தோலை கரடு முரடாக்கி கருநிறத்தில் மாற்றும். முகமும் பார்ப்பதற்கு அசிங்கமாக இருக்கும். களிம்புகள் மட்டுமே இதை குணமாக்காது. இரத்தத்தைச் சுத்தம் செய்யவும், உஷ்ணத்தைத் தணிக்கவும் யுனானி மருத்துவர்கள் பொதுவாக ஷர்பத் தயாரித்துக் குடிக்கக் கொடுப்பார்கள். கொன்னக்கரந்தை (முண்டி), கொழுஞ்சி செடி (கொள்ளக்காய்) சீமை இலந்தைப்பழம், நிலவேம்பு, ஒவ்வொன்றிலும் நான்கு கிராம் அளவில் எடுத்து 180 மில்லி தண்ணீரில் கொதிக்க வைத்து வடிகட்டி ஒரு டீஸ்பூன் சர்க்கரை கலந்து தினசரி இரண்டு வேளை சாப்பிட்டால் முகப்பரு, சொறி, சிரங்கு, நமைச்சல், அரிப்பு, கொப்பளங்கள், கரும்புள்ளிகள் குணம் பெறும்.

• கடல்நுரை என்ற பெயரில் நாட்டு மருந்துக் கடைகளில் ஒருவிதமான கடல் பொருள் விற்கப்படுகின்றது. இதை சிறிதளவில் சந்தனக் கல்லில் தண்ணீரிட்டு தேய்த்து முகப்பருக்களின் மீது பூசினால் தோல் மென்மையாக வளரும்.

**சொராய்சிஸ் :**

தோல் வியாதிகளுள் ஆயுள் முழுவதும் தொடரும் நோய்களில் சொராய்சிஸ் நோயும் ஒன்றாகும். உடலில் செதில் செதிலாக அழுக்கு வரும். சில சமயம் அவ்விடங்கள் புண்ணாகி விடும். சிகிச்சையால் மறைந்து விடும். ஆனால் திடீரென மீண்டும் தோன்றி துன்புறுத்தும். இதை யுனானி மருத்துவம் குணமாக்குகிறது. ஜாதிக்கோட்டம் (குஷ்தே ஷீரின்) நிலாவரை, இரண்டையும் சம அளவில் எடுத்து அரைத்து 4 பங்கு ஆலிவ் எண்ணெயில் கொதிக்க வைத்து வடிகட்டி வைத்துக் கொள்ள வேண்டும். பாதிக்கப்பட்ட இடத்தில் இதைத் தொடர்ந்து பூசினால் சொராய்சிஸ் நோய் குணம்பெறும். இத்துடன் முகப்பருக்களுக்குக் கூறப்பட்டுள்ள ஷர்பத்தையும் தயாரித்துக் குடிக்கலாம்.

**தலைபொடுகு :**

என்னதான் தலைமுடியைப் பாதுகாத்துக் கொண்டாலும், தலையில் பொடுகு தோன்றி அவ்வப்போது நமைச்சல் உண்டாகும். அதனால் முடி கொட்டும். இதைக் குணமாக்க மருதாணியை ஆலிவ் எண்ணெயில் அரைத்து மண்டையில் பூசினால் குணம் பெறும். அத்துடன் முடி உதிர்தலும் நின்று விடும்.

**கரடுமுரடான நகங்கள் :**

கை, கால் நகங்கள் கரடுமுரடாக வளருவதை சரிசெய்ய வெண்ணையுடன் மருதாணி இலைகளை அரைத்து பாதிக்கப்பட்ட இடத்தில் பூசினால் நகங்கள் சரியாக வளரும்.

**வழுக்கை :**

இஸ்லாமியர்கள் வெள்ளிக்கிழமை தோறும் பண்டிகைக் காலங்களிலும் கண்ணுக்கு மை பூசிக் கொள்வார்கள். அந்த மைக்கு சுர்மாக்கல் என்று அழைப்பார்கள். இந்தக் கற்கள் அரபு நாடுகளில் அதிகமாகக் காணப்படுகிறது. இதற்கு ஆங்கிலத்தில் ஆண்டிமேனி என்பார்கள். அவ்வத் வகையைச் சேர்ந்த சுர்மாகற்கள் ஒரு பங்கும், பூண்டு இரண்டு பங்கும் சேர்த்து அரைத்து பசையாக்கி முடியில்லாத இடத்திலும் வழுக்கையான இடத்திலும் தினசரி பூசி வந்தால் வியக்கத்தக்க வகையில் மீண்டும் முடி வளரும். மீசை, தாடி சரியாக வளர்ச்சிப் பெறாத நிலை இருந்தாலும் இதை பூசினால் தாராளமாக முடி வளரும்.

— டாக்டர். ஹகீம்
எஸ். அக்பர் கவுஸர்

## இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

பொருள் : பழையதை புதியதாக்கினேன்!

கடைசி தேதி : 15.9.'95

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# திறமையைத் தவிர, இவர்களுக்குள்ள ஒற்றுமை பொடுகில்லா கவர்ச்சிகர தலைமுடி.






"நடிப்புத் தொழிலுக்கு கடின உழைப்பு. திறமை என்பதை தவிர மிக முக்கியமான விஷயம் நல்ல வசீகரமான தோற்றம். எந்த நேரத்திலும் கவர்ச்சியாக விளங்க வேண்டும். ஒருதுளி பொடுகு கூட எங்களது இமேஜை பாதித்து விடும். அதனால்தான் நாங்கள் இருவரும் தொடர்ந்து உபயோகிக்கிறோம் ஆல் க்ளியர் க்ளினிக். பொடுகின் தொல்லையே இல்லை. நல்ல கவர்ச்சியான ஆரோக்கிய தலைமுடிதான் எப்போதும்"

Anuradha Kanwaljit

**அனுராதா மற்றும் கன்வல்ஜீத் - டிவி நட்சத்திரங்கள்**



ஆல் க்ளியர் க்ளினிக் உபயோகிக்கும்முன் தலையின் சருமம்.



இதமான ஆல் க்ளியர் க்ளினிக்கின் தொடர்ந்த உபயோகத்தால் தலை சருமம், ஈரப்பதமும் ஆரோக்கியமும் பெறுகிறது.



பொடுகில்லா கவர்ச்சிகர தலைமுடி.

## ஆல் க்ளியர் க்ளினிக்

**பொடுகில்லா கவர்ச்சிகர தலைமுடி.**

ஆரோக்கிய தலைமுடிக்கு க்ளினிக் பராமரிப்பு.

க்ளினிக். இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் பதிவுபெற்ற டிரேடுமார்க் ஆகும். ஆல் க்ளியர் டிரேடுமார்க் பதிவுக்காக விண்ணப்பிக்கப்பட்டுள்ளது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

LINTAS Cl Alc P J 2416 Ta

# திருமண மலர்

## மணமகள் தேவை

● Vadamal Naidurpa Kashyapa Pooram 5'8'' very fair, aged 30 years, graduate earns Rs. 2 lakhs yearly invites horoscopes from Smartha parents of very fair graduate bride. Box No. 11963

● வடமான், கௌசிகம், ரேவதி, 29 வயது, 5'6'', எஸ்.எஸ்.எல்.சி., தனியார் கம்பெனியில் நிரந்தர வேலை, ரூ 1500 வருமானமுள்ள வரனுக்கு சென்னையில் வேலையில் உள்ள பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். எளிய திருமணம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11974

● Tamil Iyer Boy, Brahacharnam, Kapi Gothram, Uthiradam, 175/35 years, graduate employed in Bank at Bombay. Seeks graduate/employed girls. Reply with horoscopes family details to Box No. 11975

● ஐயர், வடமான், கௌசிகம், அனுஷம், வயது 33, 5'6'', பி.எஸ்ஸி., ரூ. 3,800/- பெங்களூரில் மத்திய அரசு இலாகாவில் பணியிலுள்ள பையனுக்கு சேவையுள்ளம் படைத்த, குடும்பப்பாங்கான பெண் தேவை. பையனுக்கு கால் தசைகள் சில காலமாக சரியாக இயங்காததால் தற்சமயம் தானே நடக்க இயலவில்லை. பெட்டி எண் : 11976

● சித்த வைத்தியர், சைவ வன்னியகுல க்ஷத்திரியர் AMSC. (M.A.) வயது 31, ரோகிணி நட்சத்திரம், சொந்த வீடு, மனை, விளைநிலங்கள் காஞ்சியருகில் உள்ளது. சொந்த சித்த வைத்திய தொழில், தனியார் துறை பணி உள்ள வரனுக்கு, சைவ பெண் அல்லது பிராமின் கலப்பின சைவ பெண் தேவை. பெட்டி எண் : 11978

● Vathimal, Bhardwaja Gothram, Swathi, B.Com., with Computer Diploma 28, 175, 4500, Executive Investment related Pvt Company, Madras. Subsects not acceptable, Advt for Selection. Box No. 11979

● பிரஹசரணம், கௌசிகம் சுவாதி 12-ல் செவ்வாய் 28, 5'7'', ஹோட்டல் மேனேஜ்மெண்ட் டிப்ளமா படித்த, அரசு அங்கீகாரம் பெற்ற ஹோட்டல் மேனேஜ்மெண்ட் கல்லூரியில் 4000/- ஊதியம் பெறும் விரிவுரையாளருக்கு நிரந்தரப் பணியில் 25 வயதுக்குட்பட்ட மணமகள் தேவை. பெட்டி எண் : 11981

● ஆயிரவைசியர் (செட்டியார்) (தமிழ்) இளந்தாமரை கோத்தரிம், அவிட்ட நட்சத்திரம், கும்பராசி, வயது 27, உயரம் 5'3'', தொழிற்கல்வி படித்து 3500 சம்பளம் பெறும் மணமகனுக்கு படித்த (அ) தொழில் கல்வி பயின்ற மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவு சம்மதம். பெட்டி எண்: 11982

● Alliance invited from graduate Tamil, Iyer girls for a Iyer Boy Pooratathi, 37, 5'4'', working in Nationalised Bank. Box No. 11983

● பாரத்வாஜ கோத்திரம், வயது 29, உயரம் 175 செ.மீ., படிப்பு B.A. P.G. Diploma in Personal Management, திருநெல்வேலியில் நல்ல வேலையில் இருக்கும் பையனுக்கு திருநெல்வேலியிலேயே வேலை பார்க்கும் பெண் தேவை. பெட்டி எண் : 11984

● Alliance for Hindu Engineer, 36 years, bachelor, Gazetted Officer, State Government Service from Engineers, Doctors, Post-graduates. Caste no bar. Reply with horoscope and details to Box No. 11985

● Alliance invited for Vadama, Srivatsa, Uthiradam, 4000/170/34 boy employed in Private Company. Good-looking prefeeerably employed girls. Apply with horoscope to Box No. 11986

● Wanted educated girls preferably employed good-looking, good family girl for Vadamal, Srivatsam, Swathi, 5'10'', 28 years, doing business good income. Box No. 11987

● Alliance invited from employed Tamil Iyer girls for a Government Service Delhi based boy Kaushika, Revathi, 31, 175 cm, M.A., Rs. 3,500/- Apply with horoscope & family details to Box No. 11988

● Vadama Boy, Kettai, Mars 8th house, Haritha, 34 years, 176 cms, B.Com., employed reputed Pvt., Ltd., Co., Madras. Rs. 2750/- plus requires employed girl. Subsect acceptable. Horoscope bio-data and family details to Box No. 11989

● சௌராஷ்டிரா 32, 160, 5200, பி.காம்., மாநிறம், ஆயில்யம் ஜாபாலி கோத்திரம், நிரந்தரமாக சென்னையில் மத்திய அரசு வேலையிலுள்ள பையனுக்கு படித்த வேலையிலுள்ள/வேலையில்லாத அழகான சௌராஷ்டிரா மணமகள் தேவை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 11990

● Hindu, Tamil Central Govt. employed DTE, 175 cm, 28 years, 65 kg, 2500 broadminded, amiable boy seeks good looking, fair, amiable, broad-minded Govt/Bank/Insurance/Pvt employed girl. Caste no bar. Box No. 11991

● Sourashtra groom, 29, MS/Ph.d. in USA Kettai, Kashyapa Gothram, Presently employed in USA, visiting Madras end 1995. seek alliance from Sourashtra of BE/MBBS/MCA/Post-graduate. Reply with horoscope and family details to Box No. 11993

● Alliance invited from gradute/+2 fair colour, knowing Hindi, preferred for Vadama Iyer, Harida Gotrham, Avitta Nakshtram, 28 years, working in LIC Lucknow. Reply with horoscope & other deatils to Box No. 11994

● கன்னட நாயு பாரத்வாஜ, மூலம் 2-ஆம் பாதம், எஸ்.எஸ்.எல்.சி., 32/165 செ.மீ., ரூ. 4000/- வங்கி யொர்க் மணமகனுக்கு 25 வயது முதல் 30 வயதிற்குள் உள்ள பிராமண (அ) சைவ இனப் பிரிவைச் சேர்ந்த வேலைக்குச் செல்லும்/செல்லாத மணமகள் தேவை. வரனுக்கு சொந்த வீடு சென்னையில் உள்ளது. கன்னடம் பேச வராது. பெட்டி எண் : 11995

● Vadama, Bharadwaja, Ayilyam, fair, good-looking, handsome boy, 29/164, B.E., Executive in a well known company at Bombay. Seeks fair, beautiful bride around 23 to 25 preferably employed, professionals. Box No. 11996

• Alliance solicited for Tamil Iyer, Vadama, 40 years, Naithrupakasyapa Gothram, Asst. Security Officer, Rs. 1500/- having housing plot near Madras valued Rs. ½ lakh divorcee, no horoscopes from employed girls working at Madras or Tanjore Dt. No bar among brahmins (Telugu or malayalam) and employed widows. Please correspond to Box No. 11997

• Brahacharnam, Moudgalya Gothram, Boy, Barani, employed Central Govt. Railways 33, 165, 2300 + seeks employed girl, Madras or transferable job. Sub-sect acceptable. Reply details with horoscope to Box No. 11998

• பிரஹசரணம், பாரத்வாஜ, புனர்பூசம், மிதுனம் 31, 172, MBBS, PGDIP DA Central Govt. employed மணமகனுக்கு நன்கு படித்த, வேலையிலுள்ள மண மகள் தேவை. பெட்டி எண் : 11999

• Wanted Vadagalai girl for Vadagalai Boy, Srivatsa, Kettai 28, 166, 3500 working as Steno in Central Government Delhi provided with Govt. accommodation. Reply with horoscope to Box No. 12001

• தென்கலை அய்யங்கார், காசிப கோத்ர, ரோஹிணி 4-ம் பாதம், 32 வயதுடைய மத்திய அரசு தொலைத் தொடர்பு துறையில் வேலை பார்க்கும் வரனுக்கு நல்ல குடும்பத்தைச் சார்ந்த அழகான அரசு, வங்கி, பொதுத் துறையில் வேலை பார்க்கும் பெண் தேவை. வடகலையும் சம்மதம். பெட்டி எண் : 12002

• ஸ்ரீ வைஷ்ணவ நெறியில் ஆழ்ந்த ஈடுபாடுள்ள செட்டியார் பிள்ளை 24, பி.ஏ. (ஆங்கிலம்), தனிகன், சொந்த வீடு, நிலபுலன்கள், ஒரே பிள்ளை, வசதி நிறைந்த குடும்பம், பண்பும், ஜாதகமுமே முக்கியம். சாதி இரண்டாம்பட்சம். எல்லா விவரங்களுடன் பதில் எழுதுக. பெட்டி எண் : 12005

• பெங்களூரில் பொதுத் துறை நிறுவனத்தில் 6000/- மனைவியை இழந்த நல்ல தோற்றமும், ஆரோக்கியமும், இரு ஆண் பிள்ளைகள் (மைனர்) உள்ள முதலியார் 50. இவருக்கு அன்பும் புரிந்து கொள்ளும் திறமையும் உள்ள வேலையில், வசதி உள்ள துணைவி தேவை. முழு விவரங்களுடன் உடனே தெரிவிக்கவும். பெட்டி எண் : 12006

• Vadama, Middle class, Palghat, Kashiyapa, Govt. ACCN, Supreme Court, Tiruvonam, 31, 5'7", 3500, motherless, seeks alliance from good-looking employed Delhi based, transferable girls with good family background. Subsect no bar. Box No. 12007

• Alliance invited for very well-to-do Tamil Brahmin post-graduate Doctor, 30 years, with azoospermia (infertility) but otherwise normal. Widows, divorcees need not apply. Reply with horoscope and full details to Box No. 12008

• Life-partner for Tamilian Iyengar youth, 36, Srivatsa, Punarpoosam. Graduate with diplomas in Computer, Journalism, Librarianship. Government servic Rs. 4000. Recent divorcee without encumbrances. Girl should be educated and homely, of any Tamilian Brahmin community. Divorcees/ widows without encumbrances no bar. Reply with details to Box No. 12009

• இந்து வள்ளுவன் வகுப்பைச் சேர்ந்த வயது 36, பி.யு.சி. படித்து தனியார் துறை மாதச் சம்பளம் 2100/ - மனைவியைப் பிரிந்து வாழும் வரனுக்கு அதே இனம் அரசுத் துறையில் வேலை செய்யும் குழந்தையில்லாத விதவை (அ) விவாகரத்து பெற்றவரும், திருமணமாகாதவர் ஜாதகத்துடன் தங்களைப் பற்றி முழு விவரத்துடன் விண்ணப்பிக்கவும். மற்ற இனத்தார் விண்ணப்பிக்கலாம். அதே இனத்திற்கு முன்னுரிமை வழங்கப்படும். பெட்டி எண் : 12010

• Bombay Iyer boy, B.Com., 36 divorcee, marriage short lived 4 months issueless own accomodation earning Rs. 6000/- prefers home loving educated girls around 30. horoscope option no dowry Box No. 12011

• Iyer, Kausika, Bharani Army Doctor, fair, 26, 168, 8000 from well settled family seeks attractive, graduate, post-graduate girl 21-24 years. Subsect acceptable. Box No. 12012

• Iyer Athreya, 33, Security Asst. Rs. 1400/- தாயாருடன் தனியாக இருக்கும் மணமகனுக்கு வேலையுள்ள (அ) வசதியுள்ள மணமகள் தேவை. பெட்டி எண் : 12013

• வடமான், ஹரித கோத்திரம், ஆயில்யம் நட்சத்திரம், வயது 30, சொந்த வீடு, ஒரே பையன் தமிழ்நாடு அரசில் மாத வருமானம் ரூ. 2500/- பணிபுரியும் மணமகனுக்கு அதே பிரிவைச் சேர்ந்த வேலைக்குச் செல்லும் பெண் தேவை. ஜாதக குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 12014

• B.E. 183/30 Vadama, fair, Bharadwaja, Anusham, unencumbered middle east divorcee, Engineer, clean habits seeks tall, fair, good looking, well qualified Brahmin girl/unencumbered divorcees from decent family. Apply to Box No. 12015

• Delhi based Senguntha Mudaliar, 29, 165, 6000 B.Sc., seeks alliance from employed girls(.) send horoscope & family details to Box No. 12017

• வன்னியர் நடுத்தர விவசாய குடும்பம், வடாற்காடு அரசினர் மேனிலைப் பள்ளி முதுநிலைப் பட்டதாரி, ஆசிரியர் 39 வயது, நல்லொழுக்கம் உடையவருக்கு அதே இன பெண் தேவை. பெட்டி எண் : 12018

• ஐயர், ஹரித, அஷ்டசஹஸ்ரம், உத்திராடம், 40, 5'9", சொந்த பிஸினஸ், மாதம் ரூ. 8000/- வருமானமுள்ள பையனுக்கு, வேலையிலுள்ள படித்த பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 12019

• Alliance invited from Tamil, Iyer graduate girl for a Koundinya Gothram, Brahacharanam graduate, Engineer Avittam, 28, 176 cms, working in a Private Company based in Calcutta. Subsect no bar. Reply to Box No. 12020

• Wanted Non-Kasyapa Bank, Central, Public sector employed bride for Madhwa, Desistha Pooram, Marathi speaking Boy 28, 165 cms, employed as Officer in Insurance Company at Bangalore. Box No. 12022

• Alliance inviteed for handsome Tanjore Vadama, C.A., ICWA employed tall, 6'4", respectable family nearing 30 from parents of attractive very tall, non-sankruti girls around 24 same sect. Please Reply to Box No. 12023

• Kerala Palghat Iyer, Brahacharanam, Kashyapa Gothram, Bharani, 5'4", 30 years, Bank employed, Rs. 4500/- B.Sc., sub-sect no bar. Looking for a graduate girl. employed/unemployed. Apply with horoscope to Box No. 12024

• Sowrahtra Sownaga Gothram, Anusham, age 28, height 170 cm, qualification B.E., working in Public Limited Company salary 7500/- seeks alliance from same caste employed/unemployed good-looking girl from respectable family. Send horoscope with family particulars. Box No. 12025

• Horoscope are invited from educated fair, looking girls for Vathima, Kasyapa Gothram, 27 years, ACA & ICWA boy with clean habits, 163 cm, tall, Anusham

# SML APPLIANCES PRESENTS




**SMALL JAR (சட்னி ஜார்)**

**SP 16**
**INT 842**
**MASTER 864**



**MANUFACTURED BY**
**SUMEET MACHINES LTD., BOMBAY.**

AVAILABLE : AT
Authorised Distributer & Service Centre for TAMILNADE.

1. PUNJAB CROCKERY HOUSE (P) LTD., 256 MINT STREET, (NEAR CENTRAL STATION) MADRAS - 600 003. PH. 565620.

2. SUMEET MACHINES LTD., REGIONAL OFFICE. 475/31/A2 ANNA SALAI. NANDANAM. MADRAS - 600 035. PH. 457668.

# துர்கா ஹவுஸிங்

## "ஸ்ரீனிவாச நகர்"

(நெமிலிச்சேரி - பட்டாபிராம்)



*சிறப்பம்சங்கள்:*

- 24 மணிநேர சுவையான குடிநீர், வடிநீர் குழாய் வசதி.
- மினி பஸ் வசதி.
- புக்கிங் செய்ய ரூ 5000/- போதுமானதே.
- 75 சதவீதம் வரை சுலப வங்கிக் கடன் வசதி.
- மனை வீட்டை தேர்ந்தெடுக்கும் ஒவ்வொருவருக்கும் சிறப்பு பரிசு அளிக்கப்படும்.




**துர்கா ஹவுஸிங்**
**(Town & House Promoters)**
*18, ராட்லர்ஸ் சாலை, சென்னை* - 600 112. ✆: 532 25 88
(Opp : Raymonds - Doveton)







# NAVAJEEVAN BLIND RELIEF CENTRE (Regd)

(FREE HOME FOR THE BLIND AND AGED)
2-21A. SAPTHAGIRI ASHRAM,
P.O. TIRUCHANUR, TIRUPATHI - 517503.

## மனிதநேயம்

**ஸ்ரீகுரு ஸேவானந்தா:-** சிஷ்யா, விருக்ஷமித்ரா, எங்கே இவ்வளவு நாட்களாக உன்னைக் காணவில்லை?

**சிஷ்யன் விருக்ஷமித்ரன்:-** குருவே வணக்கம். இதுநாள் வரை நான் ஹிமாலயத்தில் நீண்ட யாத்திரை மேற்கொண்டு பல யோகிகள் மற்றும் ஞானிகளை தரிசித்து ஓரளவு ஞானம் பெற்றேன். எனக்கு கிடைத்த ஞானத்தின் பயன்கொண்டு நாட்டு மக்களிடையே 'மனித நேயம்' குறித்து இயன்றவரை விளக்கி கூறி வருகிறேன் ஸ்வாமி.

**ஸ்ரீகுரு:-** ரொம்பவும் சந்தோஷம். உயர்ந்த தொண்டு ஆற்றி வருகிறாய். மனித நேயமே உலக அமைதிக்கு அடிப்படைத்தேவை. மேற்கொண்டு உனது யாத்திரை எங்கே சிஷ்யா?

**சிஷ்யன்:-** திருப்பதி புனிதப்பயணமே எனது அடுத்த யாத்திரை ஸ்வாமி. திருப்பதியில் கடந்த 15 வருடங்களாக ஆஸ்திக அன்பர்களின் விசேஷ உதவியுடன் செயல்பட்டு வரும் நவஜீவன் ஆசிரமத்தில் சில காலம் தங்கி பார்வையற்ற குழந்தைகள் மற்றும் ஆதரவற்ற முதியவர்களுக்குத் தொண்டு செய்ய விரும்புகிறேன் குருவே. தங்களின் அனுமதியும் ஆசியும் வேண்டுகிறேன் ஸ்வாமி.

**ஸ்ரீகுரு ஸேவானந்தா:-** சிஷ்யா வ்ருக்ஷமித்ரா, பரோபகாரமே பரமார்த்தம் சமூக சேவையினாலும் கடவுளின் அருளைப் பெறலாம். சென்று வா சிஷ்யா. உனக்கும் நவஜீவன் ஆசிரமத்திற்கு உதவி புரியும் ஆஸ்திக அன்பர்களுக்கும் மங்களம் உண்டாகட்டும்.

## வேண்டுகோள்

திருப்பதி நவஜீவன் ஆசிரமத்தில் பார்வையற்ற குழந்தைகள் மற்றும் ஆதரவற்ற முதியவர்களுக்கு உங்கள் சார்பாக ஒரு நாள் அன்னதானம் (Birthday or Wedding day or Memorial day etc.,) வழங்க ரூ.500/- செலவாகிறது.

அல்லது சாச்வதமாக வருடத்தில் ஒரு குறிப்பிட்ட நாளில் தொடர்ந்து அன்னதானம் வழங்க (Under Endowment Scheme-one time donation) ரூ.5000/- அளித்தால் அதன் மூலம் கிடைக்கும் வருடாந்திர வட்டியின் உதவியுடன் ஆஸ்திக அன்பர்கள் குறிப்பிடும் ஒரு நாளில் அன்னதானம் நாராயண சேவை செய்யப்படும்.




குறிப்பிட்ட அந்த ஒரு நாளில், டோனரின் சார்பில் அன்னதானம் வழங்கி, பிரார்த்தனை செய்வித்து ஸ்ரீவேங்கடேசப் பெருமான் மற்றும் பத்மாவதி தாயாரின் பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

"யாதேவி சர்வபூதேஷு தயா ரூபேண ஸம்ஸ்திதா"

நாராயண சேவையில்
**K.S. ஆசார்யா**
**Founder/President**

Contributions to Navajeevan Blind Relief Centre are eligible for 100% tax relief under 80GG and 35AC of the Income Tax Act 1961. 100% வருமான வரி சலுகை உண்டு.

மாகத் தண்ணீர் விட்டுப் பிசைந்து கொள்ள வேண்டும். மாவு 1/2 மணி நேரம் ஊற வேண்டும். பின்பு மாவை மறுபடி நன்றாகப் பிசைந்து கொள்ள வேண்டும். (மாவிலே கட்டியிருந்தால் சீடை வெடித்து விடும்). பின்பு சிறிய சிறிய உருண்டைகளாக ஒரே அளவில் உருட்டிக் கொண்டு, ஈரமில்லாது சிறிது ஆறின பின்பு, அடுப்பில், கடாயில் எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் உருட்டின சீடைகளைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டு பொன்னிறமாக ஆனதும் எண்ணெய் இல்லாது எடுத்து ஆறின பின்பு டப்பாவில் போட்டு மூடி வைக்க வேண்டும்.

சீடையை அரிசிக்குப் பதிலாக பம்பாய் ரவையுடன் உளுத்தம் மாவு, தேங்காய், சிறிது தேங்காய் எண்ணெயும் போட்டுச் செய்யலாம்.

## வெல்லச் சீடை

**தேவையான பொருட்கள் :**

அரிசி – 1 ஆழாக்கு,
உளுத்தம் பருப்பு – 1 தேக்கரண்டி,
வெல்லப் பொடி – 1 ஆழாக்கு,
கொப்பரைத் துருவல் – 3 மேசைக்கரண்டி,
முந்திரித் துண்டுகள் – 1 மேசைக்கரண்டி,
ஏலக்காய்ப் பொடி – ¼ தேக்கரண்டி.
வெள்ளை எள் – 1 தேக்கரண்டி.,
பொரிக்க எண்ணெய் – 200 கிராம்.

**செய்முறை :**

அரிசியைக் களைந்து உலர்த்திய பின்பு மிஷினில் மாவு அரைத்து அதை வெறும் வாணலியில் போட்டு ஈரமில்லாது வறுத்துக் கொள்ள வேண்டும். மாவை எடுத்து (கோலம் போடும் பதம் இருக்க வேண்டும்.) அத்துடன் உளுத்தம் பருப்பு வறுத்து அரைத்த மாவில் 1 தேக்கரண்டி கலந்து கொப்பரை, எள், முந்திரி, ஏலக் காய்ப் பொடி எல்லாம் போட்டு ஒரு தாம்பாளத்தில் கலந்து வைத்துக் கொள்ள வேண்டும். வெல்லப் பொடியில் (பாகு வெல்லம்) ஒரு கரண்டி தண்ணீர் விட்டு அடுப்பில் வைக்க வேண்டும்.

வெல்லம் கரைந்ததும் நன்றாக வடிகட்டிக் கொண்டு பாகு காய்ச்ச வேண்டும். பாகு உருண்டை பாகுபதம் வந்ததும் அதைத் தாம்பாளத்தில் கலந்து வைத்துள்ள மாவில் விட்டு கலக்க வேண்டும். நன்றாகக் கலந்த பிறகு



அதைச் சூட்டிலேயே நெல்லிக்காய் அளவு உருண்டைகளாக உருட்டிக் கொள்ள வேண்டும். சிறிது ஆறின பின்பு, அடுப்பில் எண்ணெய்க் கடாயை வைத்து நன்றாகக் காய்ந்ததும், தணல் குறைத்துக் கொண்டு நான்கு, நான்காகப் போட்டு நன்றாகச் சிவந்ததும் வடி தட்டில் எடுத்து, ஆறினதும் டப்பா விலே மூடிவைக்க வேண்டும். இதற்குப் பாகு நல்ல பதமாக இல்லாவிட்டால் எண்ணெயில் போட்டதும் பிரிந்து விடும். பாகு அதிக மாகி விட்டால் கல் போன்று ஆகிவிடும்.

முறுக்கு, அதிரசம் மாவு இடிக்கும் மிஷின்கள்



## தேங்குழல்

**தேவையான பொருட்கள் :**

அரிசி - 2 ஆழாக்கு,
உளுத்தம் பருப்பு - ½ ஆழாக்கு,
உப்பு - 1¼ தேக்கரண்டி,
சீரகம் - ½ தேக்கரண்டி,
பெருங்காயம் - ¼ தேக்கரண்டி,
டால்டா - 50 கிராம்,
பொரிக்க எண்ணெய் - 250 கிராம்.

**செய்முறை :**

அரிசி, உளுத்தம் பருப்பு இரண் டையும் கலந்து மிஷினில் மாவாக்கிக் கொள்ள வேண்டும். சிறிது ஆறின பின்பு உப்பு, சீரகம், பெருங்காயம், டால்டா விட்டு நன்றாகக் கலந்து பின்பு, பாதி, பாதியாக எடுத்துக் கொண்டு தண்ணீர் தெளித்துப் பிசைய வேண்டும். (மாவு மொத்தமாகக் கலந்தால் மாவு ஊறிப் போய் கடைசி யில் பண்ணுவது சிவந்து விடும்.) பின்பு எண்ணெய் கடாயை அடுப்பில் வைத் துக் காய்ந்ததும் தேங்குழல் அச்சில் மாவை அடைத்து எண்ணெயில் பிழிய வேண்டும். பொன்னிறமாக வந்ததும் வடிதட்டில் எடுத்து சிறிது ஆறினதும்

டப்பாவில் போட்டு வைக்க வேண்டும்.

இதே மாதிரி, உளுத்தம் மாவுக்குப் பதிலாக உடைச்ச கடலை மாவு போட்டும், சேப்பங்கிழங்கு 4 கிழங்கு வேகவைத்துத் தோலெடுத்து நன்றாக மசித்து அரிசி மாவுடன் கலந்தும் பண்ணலாம்.

## முள்ளுத் தேங்குழல் (மனுகுப்பூ)

**தேவையான பொருட்கள் :**

அரிசி – 1 ஆழாக்கு,
பயத்தம் பருப்பு – ½ ஆழாக்கு,
கடலை பருப்பு – ½ ஆழாக்கு,
உப்பு – 1 தேக்கரண்டி,
டால்டா – 50 கிராம்,
பொரிக்க எண்ணெய் – 200 கிராம்.

**செய்முறை :**

அரிசி, கடலைப் பருப்பு, பயற்றம் பருப்பு மூன்றையும் கலந்து மெஷினில் மாவாக அரைத்துக் கொள்ள வேண்டும். சிறிது ஆறின பின்பு உப்பு, டால்டா விட்டு பிசைந்து கொண்டு பாதியளவில் கொஞ்சம் கொஞ்சமாக தண்ணீர் விட்டு கலந்து கொள்ள வேண்டும். கடாயில் எண்ணெய் விட்டு அடுப்பில் வைத்துக் காய்ந்ததும் முள்ளுத் தேங்குழல் அச்சில் விட்டு பிழிந்து, பொன்னிறமாக வந்ததும் வடிதட்டில் எடுத்து, சிறிது ஆறினதும் டப்பாவில் போட்டு மூடிவைக்கவும்.

இந்த முள்ளுத் தேங்குழலுக்கு பயத்தம் மாவும், அரிசி மாவும் சமமாகப் போட்டும் பண்ணலாம். கடலைப் பருப்புக்குப் பதிலாக உடைத்த கடலை மாவும் போட்டும் பண்ணலாம். இதை ஒற்றைக் கண் அச்சில் போட்டு முறுக்கு போல் ஜல்லிக்கரண்டியில் பிழிந்து அதை எண்ணெயில் போட்டு எடுக்கலாம்.

## ஓமப்பொடி

**தேவையான பொருட்கள் :**

அரிசி – ½ ஆழாக்கு,
கடலை பருப்பு – 1½ ஆழாக்கு,
ஓமம் – 1 மேசைக்கரண்டி,
உப்பு – 1 தேக்கரண்டி,
டால்டா – 50 கிராம்,
பொரிக்க எண்ணெய் – 250 கிராம்.

**செய்முறை :**

அரிசி, கடலைப்பருப்பு, சுத்தம் செய்த ஓமம் மூன்றையும் ஒன்றாகச் சேர்த்து மிஷினில் கொடுத்து மாவு செய்து கொள்ள வேண்டும். சிறிது ஆறின பின்பு உப்பு, டால்டா விட்டு பிசைந்து கொண்டு, பாதி மாவில் கொஞ்சம் கொஞ்சமாக தண்ணீர் விட்டுப் பிசைந்து கொள்ள வேண்டும். கடாயில் எண்ணெய் விட்டு அடுப்பில் வைத்துக் காய்ந்ததும் ஓமப் பொடி அச்சில் பிழிந்து பொன்னிறமாக ஆனதும் எடுத்து ஜல்லித் தட்டில் வைத்து ஆறினதும் டப்பாவில் போட வேண்டும்.

இதைத் தனியாகச் சாப்பிடலாம். மிக்ஸரில் போடலாம். பேல்பூரியில் போடலாம்.

## ரிப்பன் முறுக்கு (நாடா முறுக்கு)

**தேவையான பொருட்கள் :**

அரிசி – 1 ஆழாக்கு,
கடலை பருப்பு – ½ ஆழாக்கு,
உளுத்தம் பருப்பு – ½ ஆழாக்கு,
உப்பு – 1 தேக்கரண்டி,
மிளகாய்ப் பொடி – 1½ தேக்கரண்டி,
டால்டா – 50 கிராம்,

# பக்தி மணமும் பட்டு மணமும் கமழும் காஞ்சிபுரத்தில் இப்பொழுது

# அறுசுவையும், இனிய மணமும் திகழும்

# ஓட்டல் சரவண பவன்®

உயர்தர சைவ உணவகம்

(ஜெயபாலா இண்டர்நேஷனல் டீலக்ஸ் லாட்ஜ் வளாகத்தில்)

- விற்பனை நேரம் காலை 6 மணி முதல் இரவு 10.00 வரை
- சுவையான டிபன் வகைகள், சாப்பாடு வகைகள் கிடைக்கும்
- A/c இணைக்கப்பட்டது
- ஃபாஸ்ட் ஃபுட்ஸ் சென்டர் இணைக்கப்பட்டது
- காஞ்சிபுரத்தின் பிரதானமான காந்தி சாலையில் அமைந்துள்ளது
- காஞ்சிபுரத்தின் பஸ் நிலையத்தின் வெகு அருகில் அமைந்துள்ளது
- சென்னை - பெங்களூர் ஹைவேயில் காஞ்சிபுரம் செல்லும் வழியில் 15 நிமிட பயணத்தில் அமைந்துள்ளது
- காஞ்சிபுரத்தில் உங்கள் இல்லத்தின் எல்லா விசேஷங்களுக்கும் ஆர்டரின் பேரில் டெலிவரி மட்டும் செய்கிறோம்.
- சென்னையில் நடைபெறும் உங்கள் இல்லத்தின் எல்லா விசேஷங்களுக்கும் உங்கள் இல்லத்திற்கே வந்து சர்வீஸ் செய்து தருகிறோம்.

என்றும் உங்கள் நல்ஆதரவை விரும்பும்
ஒருமுறை சுவைத்தால் என்றென்றும் நினைவில்
நிற்கும் தனிச்சுவை படைத்திடும்!

# HSB ஓட்டல் சரவண பவன் ®

உயர்தர சைவ உணவகம்

சென்னையில் எங்களது கிளைகள்
கே. கே. நகர் தி. நகர் அசோக்நகர் ஜார்ஜ் டவுன்
புரசைவாக்கம் வடபழநி ஜார்ஜ்டவுன் A/c.
அண்ணாநகர்



சென்னையில் நடைபெறும் உங்கள் இல்லத்தின் திருமணம்
மற்றும் எல்லா விசேஷங்களுக்கும் உங்கள் இல்லத்திற்கே
வந்து சர்வீஸ் செய்து தருகிறோம்.



நித்தம் நித்தம் ஒரு புத்தம் புதிய வகைக்கு!



# சரவணாஸ்



(வெஜிடேரியன் ஃபாஸ்ட் ஃபுட்ஸ், பழரசங்கள் மற்றும் சரவணா ஐஸ்கிரீம்ஸ் சென்டர்)
காலை 6 மணி முதல் இரவு 11.30 மணி வரை)

அசோக் நகர்
(அசோக் பில்லர்
அருகில்)

வடபழநி
(ஓட்டல் சரவணபவன்
உணவு வளாகத்தில்)

பீட்டர் சாலை
(அண்ணா மேம்பாலம்
அருகில்)

டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை
(ஏ.வி.எம். ராஜேஸ்வரி
கல்யாண மண்டபம் அருகில்)



தலைமை அலுவலகம்: நெ. 19, வடபழநி ஆண்டவர் கோவில் தெரு,
வடபழநி, சென்னை - 600 026. போன் : 4832671
ஒருங்கிணைக்கப்பட்ட அலுவலகம் : 228, N.S.K. சாலை, வடபழநி,
சென்னை - 600 026. போன் : 4838723

---

நினைத்தாலே இனிப்பது! நினைவிலே நிற்பது!




# சரவணா ஐஸ்கிரீம்ஸ்



உயர்தர ஐஸ்கிரீம்ஸ் தயாரிப்பாளர்கள்

228, N.S.K. சாலை, வடபழநி, சென்னை - 600 026. போன் : 4834899

சென்னையில் உங்கள் இல்லத்தின் எல்லா
விசேஷங்களுக்கும் பார்ட்டி ஆர்டர்கள் ஏற்கப்படும்.

இன் சுவை படைக்கும் எம்பணி தொடரும்.

MAYUR

# சாரதாவின் நவராத்திரி "கொலு" படிகள்



நவராத்திரியின் போது
கொலுப்படியாக



சாதாரண நாட்களில்
"அலமாரியாக"

## சாரதா ஏஜென்சீஸ்

| | | |
|---|---|---|
| 781, அண்ணா சாலை<br>(ஆர்ட்ஸ் காலேஜ் அருகில்)<br>சென்னை - 600 002<br>தொலைபேசி: 852 0727 | 284, அண்ணா சாலை<br>(தேனாம்பேட்டை சிக்னல் அருகில்), சென்னை - 600 018<br>தொலைபேசி: 459015/450341 | 193, ராயப்பேட்டை நெடுஞ்சாலை<br>(ஜம்பி பில்டிங்ஸ் எதிரில்)<br>சென்னை-600 004<br>தொலைபேசி: 4991135 |

## SURYA வின் படைப்புகள்.



IS 4246

ISI

SURYA-G Salem Stainless Steel LPG Stove

காப்பர் பாட்டம் அடிப்பாகத்தைக் கொண்ட  வின் படைப்புகள்.



மில்க் பாய்லர்



பருப்பு சட்டி



ரைஸ் குக்கர்



டீலக்ஸ் சாஸ்பான்



ஃப்ரை பான்



உரிலி



இட்லி சட்டி



ஹண்டி



டோப்ஸ்



கடாய்



தவா

- சூர்யாவின் காப்பர் பாட்டம் கொண்ட பாத்திரங்கள் முதல்தர AISI 304 ரக ஸ்டீலால் ஆனது. நேர்த்தியான வெளிநாட்டுப் பொருட்களுக்கு ஈடானது.
- உறுதியான, கவர்ச்சியான நீண்ட நாள் உழைக்கக்கூடிய இணைப்பு கொண்டவை.
- சூர்யாவின் CBSS சமையல் பாத்திரங்கள் காப்பர் பாட்டத்தால் இணைக்கப்பட்டவை.
- காப்பர்பாட்டத்தின் தடிப்பு அயல்நாட்டுப் பொருள்களைப்போல உறுதியானது.
- நீண்ட ஜ்வாலை தேவையற்றது.

**60% எரிபொருளை மிச்சப்படுத்துங்கள்**

விற்பனை உரிமை

**சூர்யா சேல்ஸ் கார்ப்பரேஷன்,**
37, ஏகாம்பரஸ்வரர் அக்ரஹாரம் தெரு,
பார்க் டவுன், சென்னை - 600 003.
போன்: 563760 - 5323800

பொரிப்பதற்கு எண்ணெய் - 200 கிராம்.

**செய்முறை :**

அரிசி, கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு மூன்றையும் வெறும் வாண லியில் சூடு வர வறுத்துக் கொண்டு மெஷினில் அரைத்து வைத்துக் கொள்ள வேண்டும். சிறிது ஆறின பின்பு டால்டா, உப்பு, மிளகாய்ப் பொடி கலந்து பாதி மாவில் கொஞ்சம் கொஞ்சமாக தண்ணீர் தெளித்து பிசைந்து கொள்ள வேண்டும். வாணலி யில் எண்ணெய் விட்டு அடுப்பில் வைத்துக் காய்ந்ததும் நாடா முறுக்கு அச்சில் மாவைப் போட்டு எண்ணெ யில் பிழிய வேண்டும். பொன்னிறமாக ஆனதும் வடிதட்டியில் எடுத்து ஆறின தும் டப்பாவில் போட்டு வைக்கலாம்.

இதையே பூண்டு பிடித்தவர்கள், பூண்டு, இஞ்சி, பச்சை மிளகாய், உப்பு போட்டு விழுதாக அரைத்து, மிளகாய்ப் பொடிக்குப் பதிலாக மாவில் கலந்து செய்யலாம். கடலை பருப்புக்குப் பதி லாக மைதா மாவை வேடுகட்டி ஆவி யில் வைத்து உதிர்த்து அந்த மாவிலும் செய்யலாம்.

## தட்டை

**தேவையான பொருட்கள் :**

அரிசி - 1½ ஆழாக்கு,
உளுத்தம் பருப்பு - ¼ ஆழாக்கு,
கடலை பருப்பு - 1 தேக்கரண்டி,
வேர்க்கடலை பருப்பு - 1 மேஜைக்கரண்டி (வறுத்தது),
உடைத்த உளுத்தம் பருப்பு - 1 தேக்கரண்டி,
உப்பு - 1 தேக்கரண்டி,
மிளகாய்ப் பொடி - ½ தேக்கரண்டி
(காரம் வேண்டுமானால் 1 தேக்கரண்டியாக போட்டுக் கொள்ளலாம்.)
எள் - 1 தேக்கரண்டி,
டால்டா - 50 கிராம்,
பொரிக்க எண்ணெய் - 200 கிராம்.

**செய்முறை :**

அரிசியைக் களைந்து, உலர்த்தி மாவாக்கிக் கொள்ள வேண்டும். உளுத் தம் பருப்பை வெறும் வாணலியில் பொன்னிறமாக வறுத்து மாவாக்கிக் கொள்ள வேண்டும். கடலை பருப்பை யும், உளுத்தம் பருப்பையும் தண்ணீரில் ஊறவைத்து பிழிந்து எடுத்துக் கொள்ள வேண்டும். அரிசி, உளுந்து மாவில் ஊற வைத்த பருப்பு, வேர்க்கடலை, உப்பு, மிளகாய்ப் பொடி, எள், டால்டா விட்டு கலந்து, மொத்தமாக மாவை, தண்ணீர் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு கலந்து அரை மணி ஊற வைக்க



வேண்டும்.

பின்பு பால் கவரிலோ, இல்லை பிளாஸ்டிக் பேப்பரிலோ சிறிது எண்ணெய் தடவி பெரிய நெல்லிக்காய் அளவு மாவு எடுத்துக் கொண்டு மெல்லிசாக ஒரே சமமாக தட்டி வைத்துக் கொண்டு பின் அடுப்பில், எண்ணெய் கடாய் வைத்து, எண்ணெய் காய்ந்ததும் இரண்டிரண்டாகப் போட்டு, பாதி வறுத்த நிலையிலேயே எடுத்து விட்டு எல்லாம் அதே மாதிரி எடுத்த பின்பு, மறுபடியும் அதை எண்ணெயில் போட்டு எடுத்தால் நன்றாக மொறு மொறுவென்று இருக்கும். சிவந்து



போகாது பொன்னிறமாகவும் இருக்கும்.

## சேக்கோடி

**தேவையான பொருட்கள் :**

அரிசி மாவு – 1 ஆழாக்கு,
கடலைப் பருப்பு – 1 மேசைகரண்டி,
உப்பு – ¾ தேக்கரண்டி,
சீரகம் – ½ தேக்கரண்டி,
மிளகாய்ப் பொடி – 1 தேக்கரண்டி,
தண்ணீர் – 1 ஆழாக்கு,
பெருங்காயப்பொடி – ¼ தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் – 200 கிராம்.

**செய்முறை :**

அடுப்பில் வாணலியில் தண்ணீர் வைத்து கொதிக்க ஆரம்பிக்கும் போது கடலைப் பருப்பு, உப்பு, சீரகம், மிளகாய்ப் பொடி, பெருங்காயம் போட்டுக் கொதிக்க ஆரம்பித்ததும் கீழே இறக்கி வைத்து, அரிசி மாவைத் தூவிக் கிளறி வைத்துக் கொள்ள வேண்டும். சிறிது ஆறின பின்பு கொஞ்சம் கையில் எண்ணெய் தொட்டுக் கொண்டு நெல்லிக் காய் அளவு மாவை எடுத்துக் கொண்டு நீளமாக குழல் போல் செய்து இரண்டு முனையையும் ஒட்டி விட்டால் வளையம் போல் ஆகும். இதை மொத்த மாவையும் வளையங்களாகச் செய்து வைத்துக் கொண்டு அடுப்பில் எண்ணெய் வாணலியை வைத்துக் காய்ந்ததும் பத்து, பத்து வளையங்களாகப் போட்டு பொன்னிற மாக வந்ததும் வடிதட்டில் எடுத்து ஆறினதும் டப்பாவில் போட்டு வைக்கவும்.



## மிளகு வடை

**தேவையான பொருட்கள் :**




# சுலிவன் கார்டன் பெனிபிட் பண்ட் லிட்.

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம்

பதிவு அலுவலகம் : 8, கற்பகாம்பாள் நகர், மயிலாப்பூர், சென்னை - 600 004.
ஃபேக்ஸ் & போன் : 4993241 / 4990953

நிர்வாக அலுவலகம் : 132, ராசப்ப செட்டி தெரு, பார்க் டவுன் (முதல் மாடி)
சென்னை - 600 003. போன் : 563055.

## அமுததாரா பிக்ஸட் டெபாஸிட் திட்டம்

| 46 நாட்கள் | 90 நாட்கள் | 6 மாதங்கள் | 1 ஆண்டு | 2 ஆண்டுகள் | 3 ஆண்டுகள் | 4 ஆண்டுகள் | 5 ஆண்டுகள் |
|---|---|---|---|---|---|---|---|
| 14% | 15% | 16% | 18% | 19% | 19.5% | 20% | 21% |

## கேஷ் சர்டிபிகேட் முதலீட்டுத் தொகை 1000

| மாதங்கள் | 12 | 24 | 36 | 42 | 60 |
|---|---|---|---|---|---|
| முதிர்வுத் தொகை | 1196 | 1458 | 1787 | 2000 | 2832 |

## சங்கரா கல்வி டெபாஸிட் திட்டம்

ரூ. 8000/- முதலீடு செய்யுங்கள். 3-ம் ஆண்டு முடிவில் ஒவ்வொரு ஆண்டும் ரூ. 2500/- பெறுங்கள். 3 ஆண்டுகளுக்குப் பிறகு கணக்கை எப்போது முடிக்க விரும்பினாலும் ரூ. 11,500/- + ரூ. 2500 பெறலாம்.

## ஓய்வூதிய திட்ட தொகை

ரூ. 10,000 அல்லது அதற்கு மேல்

| காலம் | வட்டி |
|---|---|
| 12 மாதங்கள் அல்லது அதற்கு மேல் | 19.8% |

## கடன்

வீடு, கட்டிடங்கள் பேரில் கடன்

நகைகள் மீதான கடன்

## சப்தகிரி பாண்ட்ஸ்

| மாதம் | தொகை | முதிர்வுத் தொகை |
|---|---|---|
| 25 | 50,000 | 75,000 |
| 36 | 55,000 | 1,05,000 |

அங்கத்தினர்களுக்கு மட்டுமே வரவு, செலவுகள் செய்யப்படும்

வேலைநேரம் : வாரநாட்கள் : காலை 8.30 முதல் மாலை 5.30 வரை. வெள்ளி விடுமுறை

P.K.C. RAMESH - Director - P.K. Vaduvammal Group

உளுத்தம் பருப்பு - 1 ஆழாக்கு,
அரிசி மாவு -
1 மேசைக்கரண்டி,
மிளகு - 1 மேசைக்கரண்டி,
சீரகம் - 1/2 தேக்கரண்டி,
உப்பு - 1 தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் -
200 கிராம்,

**செய்முறை :**



உளுத்தம் பருப்பை 5 நிமிடம் ஊற வைத்துத் தண்ணீர் இல்லாது வடிய விட வேண்டும். அரைமணி கழித்து கல்லுரலிலோ, கிரைண்டரிலோ, மிக்ஸியிலோ போட்டுத் தண்ணீர் தெளிக்காது பாதி பருப்பாக இருக்கும்போதே எடுத்து விட வேண்டும். பின்பு அரிசி மாவு, மிளகை பொடி செய்யாது தட்டிப் போட்டு, மிளகாகவே பாதி, பாதியாகத் தெரியும்படி செய்து அதுவும், சீரகம், உப்புப் பொடி போட்டுக் கலக்க வேண்டும். மாவில் கொஞ்சம் கூட தண்ணீர் சேர்க்கக் கூடாது. அதை எலுமிச்சங்காய் அளவு எடுத்துக் கொண்டு பிளாஸ்டிக் கவரில் சிறிது எண்ணெய் தொட்டுத் தடவி மெல்லியதாக வடை தட்ட வேண்டும். எல்லா இடமும் சமமாக இருக்க வேண்டும். அடுப்பில், எண்ணெய் வாணலியை வைத்துக் காய்ந்ததும் இரண்டிரண்டாகப் போட்டு பாதி வறுபட்டதும், எடுத்து வைத்துக் கொண்டு, பின்பு இரண்டாவது தடவையாகப் போட்டுப் பொரித்து எடுக்க வேண்டும். அப்பொழுதுதான் வடை கரகரவென்று இருக்கும்.

## அம்மான் கொழுக்கட்டை

**தேவையான பொருட்கள் :**

அரிசி - 1 ஆழாக்கு,
தேங்காய்த் துருவல் -
2 மேசைக்கரண்டி,

உப்பு - ¼ தேக்கரண்டி,
வற்றல் மிளகாய் - 2,
கடுகு - ¼ தேக்கரண்டி,
உளுத்தம் பருப்பு - ¼ தேக்கரண்டி,
பெருங்காயப் பவுடர் - 1 சிட்டிகை,
கறிவேப்பிலை - 1 ஆழாக்கு,
எண்ணெய் - 2 தேக்கரண்டி.

**செய்முறை :**

அடுப்பில் ½ தம்ளர் தண்ணீர் ஒரு வாணலியில் எடுத்துக் கொண்டு கொதிக்க வைக்க வேண்டும். அதில் முதலில் உப்புப் போட்டு விட்டு பின் அரிசி மாவையும் ½ தேக்கரண்டி எண்ணெயும் விட்டு கிளறி இறக்க வேண்டும். சிறிது ஆறின பின்பு கோலி அளவு உருண்டைகளாக உருட்டிக் கொள்ள வேண்டும். பின்பு ஒரு பாத்திரத்தில் 2 டம்ளர் தண்ணீர் விட்டு அதைக் கொதிக்க விட வேண்டும். கொதிக்கும் போது உருண்டைகளை அதில் போட வேண்டும். அது வெந்து மேலே மிதக்க ஆரம்பித்ததும் அதை எடுத்து வடிதட்டில் கொட்டி தண்ணீர் இல்லாது வடிய விட வேண்டும். பின்பு அடுப்பில் வாணலியை வைத்து மீதியுள்ள எண்ணெய் விட்டு காய்ந்ததும் வற்றல் மிளகாயைத் துண்டு செய்து போட்டு பின்பு கடுகு, உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை, பெருங்காயப்பொடி தாளித்து பின் இந்த வெந்த உருண்டைகளைப் போட்டு, பின் தேங்காய்த் துருவலையும் போட்டு 2 நிமிடம் வதக்கி விட்டு எடுத்து விட வேண்டும். இது சூடாக சாப்பிட நன்றாக இருக்கும். இதை கொழுக்கட்டைக்காக செய்த மேல் மாவு மீதியிருந்தாலும் செய்யலாம். இவ்வுருண்டைகளை ஆவியில் வைத்தும் எடுத்தும் செய்யலாம்.

## மிக்ஸர்

*(மிக்ஸருக்குக் கூட சமையல் குறிப்பா என நினைக்கலாம். ஆனால் எது எது எவ்வளவு போட வேண்டும் என்று இருக்கிறது. அப்படிக் கலந்தால் தான் சுவையாக இருக்கும்.)*

**தேவையான பொருட்கள் :**

அவல் - 1 ஆழாக்கு,
உடைத்த கடலை - ¼ ஆழாக்கு,
வேர்க்கடலை - ¼ ஆழாக்கு (வறுத்தது),
ஓமப்பொடி - 1 ஆழாக்கு (மாவில் செய்தது),
காராபூந்தி - 1 ஆழாக்கு (மாவில் செய்தது),
முந்திரி - 1 மேசைக்கரண்டி,
மைதா மாவில் செய்த சிறிது சர்க்கரை சேர்த்த சிப்ஸ் - 2 மேசைக்கரண்டி,
கறிவேப்பிலை - 2 ஆர்க்கு,
மஞ்சள் பொடி - ¼ தேக்கரண்டி,
உப்பு - ¾ தேக்கரண்டி,
மிளகாய்ப் பொடி - 1 தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் - 300 கிராம்,
டால்டா - 10 கிராம்.

**செய்முறை :**

ஓமப் பொடி செய்முறை இதற்கு முன்பு செய்த மாதிரி செய்து கொள்ள வேண்டும். காராபூந்திக்கு 1 ஆழாக்கு கடலை மாவிற்கு 1 மேசைக்கரண்டி அரிசி மாவு சேர்த்து தோசை மாவு பதத்திற்குக் கலந்து கொள்ள வேண்டும். அடுப்பில், வாணலியில் எண்ணெய் விட்டு அது நன்றாக புகைந்ததும் பூந்தி கரண்டியில் மாவை 2 கரண்டி விட்டு எண்ணெய்க்கு மேல் வைத்து மெள்ள ஆட்டி விட்டால், அல்லது கரண்டியால் தேய்த்தால் எண்ணெயில் முத்து முத்தாக விழும். அதை பொன்னிறமாக வந்ததும் எடுத்து வடிய விட வேண்டும். இதே மாதிரி மொத்த மாவையும் செய்ய வேண்டும். மைதா மாவில், சிறிது டால்டாவையும், சர்க்கரை 2 தேக்கரண்டியும் போட்டு பூரி மாவு போல் பிசைந்து கொண்டு சிறிது ஊறின பின்பு பெரிய அப்பளமாக இட்டுக் கொண்டு கத்தி

யால் சிறு சிறு டைமண்ட்களாக செய்து கொண்டு காய்ந்த எண்ணெயில் போட்டு பொன்னிறமாக வந்ததும் எடுத்து வடிதட்டில் போட வேண்டும். பின்பு சுத்தம் செய்த அவலை குழிவான ஜல்லிக்கரண்டியில் (புளி வடிகட்டி) ஒவ்வொரு பிடியாகப் போட்டு காயும் எண்ணெயில் அக்கரண்டியையே வைத்தால் எண்ணெயில் அவல் பொரிந்து வாணலியில் சேராது கரண்டியிலேயே இருக்கும். கரண்டியோடு எடுப்பது சுலபம். அதே மாதிரி மொத்த அவலையும் பொரித்துக் கொள்ள வேண்டும். பின்பு மீதியுள்ள எண்ணெயில் முந்திரி, கறிவேப்பிலை போட்டு பொரித்து எடுத்துக் கொண்டு ஒரு பெரிய பேஸினில் எல்லாவற்றையும் ஒன்றாகக் கொட்டி உப்பு, மிளகாய்ப் பொடி, மஞ்சள் பொடி சூட்டிலேயே கலக்க வேண்டும்.

## காராசேவு

**தேவையான பொருட்கள் :**

அரிசி மாவு - 1 ஆழாக்கு,
கடலை மாவு - 2 மேசைகரண்டி (¼ ஆழாக்கு),
மிளகு - 1 தேக்கரண்டி (சிறிது தட்டி வைத்துக் கொள்ள வேண்டும்)
உப்பு - ¾ தேக்கரண்டி,
டால்டா - 75 கிராம்,
சோடா மாவு - 1 சிட்டிகை,
பொரிக்க எண்ணெய் - 200 கிராம்.

**செய்முறை :**

ஒரு தட்டில் டால்டா, உப்பு, சோடா மாவு போட்டு நன்றாகக் குழைக்க வேண்டும். பின்பு அரிசி மாவு, கடலை மாவு, மிளகுப் போட்டு நன்றாகக் கலக்க வேண்டும். பின்பு கொஞ்சமாக தண்ணீர் விட்டு கெட்டியாகப் பிசைய வேண்டும். பின் அடுப்பில், கடாயில் எண்ணெய் வைத்து நன்றாகப் புகைந்ததும், காராசேவுத் தட்டை எண்ணெயின் மேல் வைத்துக் கொஞ்சம் கொஞ்சமாக மாவை வைத்து கையால் தேய்க்க வேண்டும். எண்ணெயில் துண்டு துண்டாக விழும். நன்றாக பொன்னிறமானதும் வடிதட்டில் எடுத்து, சிறிது ஆறினதும் டப்பாவில் போடவும். இதையும் பிடித்தவர்கள் மிக்ஸரில் போடலாம்.

## அதிரசம்

**தேவையான பொருட்கள் :**

அரிசி - 1 ஆழாக்கு,
வெல்லம் - 1½ ஆழாக்கு (1/4 கிலோ பாகுவெல்லம்),



# அனுபவ் அளிக்கிறது

# 24% வட்டி

## வருடத்திற்கு

அனுபவ் ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ் அனுபவ் குரூப் கம்பெனிகளின் ஒரு அங்கம். தனது அருமையான கட்டிடத்திட்டங்களின் மூலம் பொதுமக்களின் நம்பிக்கையைப் பெற்று அனுபவ் குரூப் பல வேளாண்மை சார்ந்த தொழில்களில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ளது. அனுபவ் குரூப்பின் வளர்ச்சியும் புதுமையான கண்ணோட்டமும் சர்வதேச நிறுவனங்களின் ஆர்வத்தைக் கவர்ந்துள்ளன. இன்று, இந்தியா, துபாய், மஸ்கட், எகிப்து மற்றும் கனடாவில் 60-க்கும் மேற்பட்ட அலுவலகங்களைக் கொண்ட அனுபவ் தனது சிறப்பை சர்வதேச அளவில் நிலைநாட்டி உள்ளது.

எனவே, பாதுகாப்பு மற்றும் அதிக வருமானம் இவற்றை சீர்தூக்கி முதலீடு செய்ய விரும்புவோர்க்கு ஏற்ற நிறுவனம் அனுபவ் ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ்.

### அனுபவ் டெபாஸிட் ஸ்கீம்

| குறைந்தபட்ச முதலீடு | வட்டி விகிதம் | |
|---|---|---|
| ரூ. 10,000/- | 24% | 12 மாதங்களுக்கான வட்டி மாதாந்திர பின் தேதியிட்ட செக்குகள் மூலம் முன்னதாகவே தரப்படும். |

### அனுபவ் பாண்ட்

| குறைந்தபட்ச முதலீடு | காலம் | முதிர்ச்சி கால ஈட்டுத்தொகை |
|---|---|---|
| ரூ. 25,000/- | 3 1/2 ஆண்டுகள் | ரூ. 50,000/- (உங்கள் முதலீடு 3 1/2 வருடங்களில் இரட்டிப்பாகிறது) |



**அனுபவ் ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**
அனுபவ் சென்டர், 11, சோமசுந்தரம் தெரு, தி.நகர், சென்னை-600 017.
ஃபோன்: 8254155/8282629/8282833/8283316 ஃபாக்ஸ்:8284967

ADWAVE/AFI/5035/TAM B

**திறமையுடன் செயலாற்றுகின்றோம். அதிக வட்டி தருகிறோம்.**

• திருச்சி: ஜெனி பிளாசா, ஷாப் எண் - 9, கீழ்தளம், எண்:5, பாரதியார் சாலை, திருச்சி - 620 001. • கோயம்புத்தூர்: 101, 105 D-B ரோடு, ஆர்.எஸ்.புரம், கோயம்புத்தூர் 641 002. • சேலம்: சிவா காம்ப்ளெக்ஸ், சாரதா காலேஜ் எதிரில், சேலம் - 639 009. • மதுரை: 119, இரண்டாவது மாடி, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, மதுரை - 625 001. • திருநெல்வேலி: 25, பி, இரண்டாவது மாடி, எஸ்.ஆர்.சி. காம்ப்ளெக்ஸ், எஸ்.என்.நெடுஞ்சாலை, திருநெல்வேலி ஜங்க்ஷன். • நாகர்கோவில்: முதல் தளம், டி.எச்.என். காம்ப்ளெக்ஸ் அருகில், டிடிசி பஸ் ஸ்டேண்டு அருகில், மீனாட்சி புரம், நாகர்கோவில் - 629 001. • தாம்பரம்: பி.ஆர். காம்ப்ளெக்ஸ், இரண்டாவது தளம், நேஷனல் தியேட்டர் எதிரில், எண். 12, ராமகிருஷ்ணா சாலை, தாம்பரம், சென்னை - 600 045.

ஏலக்காய்ப் பொடி -
¼ தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் -
200 கிராம்.

**செய்முறை :**

அரிசியைக் களைந்து 1/2 மணி நேரம் ஊறவைக்க வேண்டும். பின்பு தண்ணீர் இல்லாது வடிய விட்டு, ஈரமாக அரிசி இருக்கும்போதே மிக்ஸியில் நரநர வென்று அரைக்க வேண்டும். மிஷினில் கொடுப்பதானால் நன்றாக உலர்ந்த



பிறகு [illegible]டுக்க வேண்டும். ஆனால் ஈர அரிசியில் செய்வதுதான் நன்றாக இருக்கும். பின்பு அடுப்பில் 1/2 டம்ளர் தண்ணீர் விட்டு கொதித்ததும் வெல்லப் பொடியைப் போட்டுக் கரைந்ததும், கல், மண், குப்பை இல்லாது வடிகட்டி பின்பு பாகு வைக்க வேண்டும். வெல்லம் கெட்டிப்பாகு (இரண்டு கம்பியாக விழ வேண்டும்) வந்ததும் ஈர அரிசி மாவையும் ஏலக்காய்ப் பொடியையும் போட்டுக் கிளறி இறக்கி வைக்க வேண்டும். ஆறின பின்பு எலுமிச்சம் பழ அளவு உருண்டைகளாக ஆக்கிக் கொண்டு கையிலும், பிளாஸ்டிக் கவரிலும் சிறிது எண்ணெய் தடவிக் கொண்டு மெலிதாக தட்ட வேண்டும். பின்பு அடுப்பில், வாணலியில் எண்ணெய் காய்ந்ததும் ஒவ்வொன்றாகப் போட்டு சிவக்க வறுத்ததும், ஒரு ஜல்லிக் கரண்டி, ஒரு தோசைத் திருப்பி வைத்து இடையில் இந்த அதிரசத்தை வைத்து, நன்றாக அழுத்தி எண்ணெய் இல்லாது வடிதட்டில் வைக்க வேண்டும். ஆறினதும் எடுத்து மூடி வைக்க வேண்டும். சரியான பாகுபதம் வராவிட்டால் எண்ணெயில் மாவு கலந்து விடும். நல்ல பாகு வெல்லம்தான் போட

வேண்டும்.

## அப்பம்

**தேவையான பொருட்கள் :**

கோதுமை மாவு - 1 ஆழாக்கு,
அரிசி மாவு - ½ ஆழாக்கு,
ரவை - 1 மேசைக்கரண்டி,
உளுத்தம் மாவு - 1 மேசைக்கரண்டி,
வாழைப்பழம் - 1 (நல்ல பழுத்தது),
தேங்காய்த் துருவல் - 1 கப்,
வெல்லப் பொடி - 1½ ஆழாக்கு (1/4 கிலோ),
முந்திரித் துண்டுகள் - 1 மேசைக்கரண்டி,
ஏலக்காய்ப் பொடி - ¼ தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் - 200 கிராம்.

**செய்முறை :**

வெல்லப் பொடியை 1 தம்ளர் தண்ணீரில் கரைத்து வடிகட்டி வைக்க வேண்டும். ஒரு பாத்திரத்தில் கோதுமை மாவு, அரிசி மாவு, உளுத்தம் மாவு, ரவை, வாழைப்பழம் மசித்து, தேங்காய்த் துருவல், முந்திரித் துண்டுகள், ஏலக்காய்ப் பொடி எல்லாம் கலந்து வைத்துக் கொண்டு கரைத்த வெல்லத் தண்ணீரால் கலக்க வேண்டும். மாவு இட்லி மாவு பதம் இருக்க வேண்டும். 1 மணி நேரம் நன்றாக ஊறின பின்பு, அடுப்பில், வாணலியில் எண்ணெய் விட்டு காய்ந்ததும் ஒரு சிறிய கரண்டியால் ஊற்ற வேண்டும். அது பரவாமல் ஒரே இடத்தில் இருந்தால்தான் பதம் சரியாக இருக்கும். ஜல்லிக்கரண்டியால் வாணலியால் பக்கத்தில் உள்ள எண்ணெயை அப்பத்தின் மேல் தள்ளி விட்டால் அப்பம் நன்றாக உப்பும். இரு பக்கமும் திருப்பிப் போட்டு நன்றாகச் சிவந்ததும் இரு கரண்டிக்கு இடையில் வைத்து அழுத்தி எண்ணெய் இல்லாது எடுக்க வேண்டும்.

இதையே அரிசியை மாத்திரம் ஊற வைத்து நன்றாக அரைத்து எவ்வளவு அரிசி போடுகிறோமோ அதே அளவு வெல்லத்தையும் போட்டு அரைத்துத் தேங்காயைப் பல்லு பல்லாக நறுக்கி, ஏலக்காய்ப் பொடி கலந்து அதை குழிப் பணியாரத் தட்டில் எண்ணெய் விட்டும் செய்யலாம்.

## சொஜ்ஜி அப்பம்

**தேவையான பொருட்கள் :**

கோதுமை ரவை (பம்பாய் ரவை) - 1 ஆழாக்கு,



# EDUCATION



அதில் சிறந்து விளங்க
சரஸ்வதி கவசம்
உங்களுக்கு உதவும்

போட்டிகள் நிறைந்த இன்றைய உலக வாழ்வில் வெற்றி பெறக் கல்வி கற்பது மிகமிக முக்கியம். அந்தக் கல்வியிலும் நீங்கள் மேம்பட்டுச் சிறந்து விளங்க விசேஷமாகத் தயாரிக்கப்பட்டதுதான் சரஸ்வதி கவசம். இது அறிவுத் திறனைக் கூர்மையாக்கி, கிரகிக்கும் சக்தியை அதிகரித்து, தெளிவான சிந்தனையைத் தூண்டிவிடும் ஆற்றல்படைத்தது.



பண்டித
காழியூர் நாராயணன்
ஜோதிடர்

Rs. 151/-

37, தேரடித்தெரு, திருவல்லிக்கேணி, சென்னை 600005 தென்இந்தியா.
தொலைபேசி: அலுவலகம்: 842693 வீடு: 8261720

சரஸ்வதி கவசம் மட்டுமல்ல -- பண்டிதர் அவர்கள், இதர பல்வேறு பிரச்னைகளுக்குத் தீர்வு காணவும் யந்திரங்களை உருவாக்கியுள்ளார்.

அலுவல் நேரம்: திங்கள் முதல் வெள்ளி வரை -- காலை 11.00 மணி முதல் மாலை 5.30 மணி வரை ( ராகு காலத்தைத் தவிர்க்கவும் ). சனி மற்றும் ஞாயிறு விடுமுறை

KAMERAD–NEWS/KN/218/94

---

சென்னையில் உள்ள ஒரு பிரத்தியேகமான முத்து கடல் ஓர் அரிய வாய்பினை அளிக்கிறது.

உங்களின் பிறந்ததேதி, ஜென்ம நட்சத்திரத்திற்கு ஏற்றார் போல் எந்த கல்லை வாங்கினாலும் அதாவது ரூபி, முத்து, புஷ்பராகம், கோமேதகம், எமரால்ட், வைரம். அக்கல்லை வெள்ளி மோதிரத்திலோ அல்லது தங்க மோதிரத்திலோ இலவசமாக பதித்து தருகிறோம். தங்க மோதிரம் ஆர்டரின் பேரில் உங்களின் விருப்பத்திற்கேற்ற டிசைனில் செய்கூலி இன்றி செய்து தரப்படும்.

மற்றும் தனக்கே உரித்தான பத்மஸ்ரீ பேர்ல்ஸ் உன்னதமான பாரம்பரியமிக்க ஹைதராபாத் போர்ல் மற்றும் கோரல் ஜுவல்லரியில் 15% விசேஷ தள்ளுபடி அளிக்கிறது.

வாருங்கள் முத்து கடலை கண்டு அணிந்து வாழ்வில் சந்தோஷம் அடையுங்கள்.

# பத்மஸ்ரீ பேர்ல்ஸ்

(பேர்ல் டீலர் மற்றும் தரமான முத்துக்கள் விற்பனையாளர்)
53 வடக்கு உஸ்மான் ரோடு,
(ARRகாம்ளெக்ஸ் எதிரில்)
தி.நகர், சென்னை-600 017/

எங்களது மாதாந்திர சேமிப்பில் சேர்ந்து பயனடையுங்கள். விவரத்திற்கு ஷோரூம்க்கு வருகை தாருங்கள்.

வேலை நேரம்: காலை 10.30 முதல் இரவு 8 மணி.

**ALSO AT: 2-4-47 M.G. ROAD**
**SECUNDERABAD - 500 003**

மைதா மாவு - 1 ஆழாக்கு,
தேங்காய்த் துருவல் - ½ கப்,
முந்திரித் துண்டுகள் -
1 மேசைக்கரண்டி,
வெல்லப் பொடி -
1 ஆழாக்கு (200 கிராம்),
ஏலக்காய்ப் பொடி -
¼ தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் -
200 கிராம்,
டால்டா - 50 கிராம்.

**செய்முறை :**

மைதா மாவை சிறிது உப்பு, டால்டா போட்டு தளர பிசைந்து கொள்ள வேண்டும். (பூரி மாவை விட தளர இருக்க வேண்டும்) 1/2 மணி ஊற வேண்டும். ரவையை வெறும் வாணலி யிலிட்டு கொஞ்சம் வறுத்துக் கொள்ள வேண்டும். 1/2 தம்ளர் தண்ணீரில் வெல் லம் போட்டு கரைந்ததும் வடிகட்டி நன்றாகக் கொதிக்க வைக்க வேண்டும். கொதிக்கும் போது தேங்காய்த் துருவல், பச்சை முந்திரி துண்டுகள், ரவை, ஏலக் காய்ப் போட்டு பூரணம் தொட்டால் ஒட்டிக் கொள்ளாத பக்குவம் வந்ததும் இறக்கி வைத்து ஆறினதும் எலுமிச்சம் பழம் அளவு உருண்டைகளாக்கிக் கொள்ள வேண்டும். பின்பு அதே அளவு மைதா மாவு உருண்டையை எடுத்துக் கொண்டு, ஒரு பிளாஸ்டிக் கவரில் சிறிது எண்ணெய் தடவி மைதா மாவை கையாலே தட்டி சிறிய அப் பளம் செய்து கொண்டு, நடுவில் ரவை உருண்டையை (பூரணத்தை) வைத்து நன்றாக மைதா மாவால் பூரணம் வெளியே தெரியாதபடி மூட வேண்டும். பின்பு கையில் எண்ணெய் தொட்டுக் கொண்டு சிறிது கனமாக ஒரே சமமாக தட்டி வைத்துக் கொள்ள வேண்டும். அடுப்பில், வாணலியில் எண்ணெய் காய்ந்ததும் தட்டினதை எடுத்துப் போட்டு, இரண்டு பக்கமும் பொன்னிற மாக ஆனதும் எண்ணெய் இல்லாது நன்றாக வடிந்ததும், வடிதட்டில் போட்டு ஆறினதும் மூடி வைக்கவும்.

## சோமாஸ் (இனிப்பு)

**தேவையான பொருட்கள் :**

**(மேல் மாவு) :**
மெல்லிய ரவை - 1 ஆழாக்கு,
மைதா மாவு - 1 மேசைக்கரண்டி,
உப்பு - 1 சிட்டிகை,
டால்டா - 1 மேசைக்கரண்டி.

**பூரணம் :**
கடலை மாவு - 2 மேசைக்கரண்டி,
கொப்பரைத் துருவல் -
2 மேசைக்கரண்டி,
கசகசா - 1 தேக்கரண்டி,
சர்க்கரைப் பொடி - 100 கிராம்,
முந்திரித் துண்டுகள் -
1 மேசைக்கரண்டி,
ஏலக்காய்ப் பொடி -
¼ தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் - 200 கிராம்.

**செய்முறை :**

ரவை, மைதா, உப்பு, டால்டா எல் லாம் கலந்து கொஞ்சமாக தண்ணீர் தெளித்து பிசைந்து ஒரு ஈரத்துணியில் மூடிவைக்க வேண்டும். 2 மணி நேரம் ஊறவேண்டும். அதற்குள் பூரணம் செய்ய முதலில் கொஞ்சம் டால்டா விட்டு கடலை மாவை நன்றாக சிவக்க (பச்சை வாசனை போக) வறுத்துக் கொள்ள வேண்டும். கொப்பரைத் துருவல், கசகசா இரண்டையும் தனித் தனியாக வெறும் வாணலியில் சிவக்க வறுத்துக் கொள்ள வேண்டும். முந்திரித் துண்டுகளையும், சர்க்கரைப் பொடியை யும், ஏலக்காய்ப் பொடியையும் ஒன்றாக மாவு, கொப்பரை, கசகசாவுடன் கலக்க வேண்டும். பூரணம் தயார். ரவை கலந்த மாவை நன்றாக மறுபடியும் பிசைந்து சிறிய சிறிய உருண்டைகளாக செய்து கொண்டு மெல்லிய அப்பளம் இடவேண்டும். அதில் ஒரு மேசைக் கரண்டி பூரணப் பொடி வைத்து அப் பளத்தை இரண்டாக மடித்து ஓரங் களில் சிறிது கையை ஈரப்படுத்தி நன்றாக ஒட்டி விட வேண்டும். மேலே

சோமாஸ் கரண்டியால் சேர்த்து விட்டால் ஓரம் வளைவு வளைவாக அழகாக இருக்கும். மேல் ஈரம் ஆறின பின்பு, அடுப்பில், வாணலியில் எண்ணெய் விட்டுக் காய்ந்ததும், தீயை குறைத்து சோமாசை மெள்ள எண்ணெயில் விட்டு இரண்டு பக்கமும்

உப்பு - 1 சிட்டிகை,
டால்டா - 50 கிராம்,
வெல்லப் பொடி -
2 ஆழாக்கு (1/4 கிலோ)
பாகு வெல்லம்,
ஏலக்காய்ப் பொடி -
¼ தேக்கரண்டி,
பொரிப்பதற்கு எண்ணெய் -
200 கிராம்.



பொன்னிறமானதும் வடிதட்டில் எடுக்க வேண்டும். ஆறின பின்பு டப்பாவில் போடவும்.

## மனோஹரம்

**தேவையான பொருட்கள் :**

அரிசி மாவு - 1½ ஆழாக்கு,
உளுத்தம் மாவு - 2 மேசைக்கரண்டி,

**செய்முறை :**

அரிசி மாவு, உளுத்தம் மாவு, உப்பு, டால்டா கலந்து, தண்ணீர் தெளித்துத் தேங்குழல் மாவு போன்று கலந்து, தேங்குழல் அச்சில் விட்டு எண்ணெயில் பொரித்துத் தேங்குழல் செய்து கொள்ள வேண்டும். பின்பு அதை கையால் பொடித்து சிறு சிறு துண்டுகளாக்கி ஒரு தட்டில் வைத்துக் கொள்ள வேண்டும்.

# துரித கடன் வழங்குதல்

# தங்க நகைகளுக்கு

கிராம் ஒன்றுக்கு ரூ. 325/- ரெக்கரிங் டெபாசிட் இல்லை.
மதிப்பீடு கட்டணம் இல்லை.

# வீட்டு சொத்துக்கள்

மீதும் கடன் வழங்கப்படும். நகர எல்லைக்குள் உட்பட்ட
வீட்டு சொத்துக்கள் மட்டும் ஏற்கப்படும்.

(பரிமாற்றங்கள் உறுப்பினர்களுடன் மட்டும்)



DUGAR
BENEFIT FUND LTD

பதிவு அலுவலகம் : "துகர் பில்டிங்" 7, பெத்து நாயக்கன் தெரு,
(வால்டாக்ஸ் சாலையிலுள்ள பத்மநாபா திரையரங்கிற்கு அடுத்த சாலை)
சென்னை - 600 079. போன் : 516161/517481.
ஃபேக்ஸ் : 044- 522 2888 கிராம்ஸ் : "துகர் சன்ஸ்"





RDS / DUGAR - 95

பின்பு வெல்லத்தை ½ டம்ளர் தண்ணீர் விட்டு கரைத்துக் கொண்டு, வடிகட்டி உருண்டை பாகுபதம் வரும் வரை (தண்ணீரில் போட்டால் கரையாது கெட்டியாக வேண்டும்) காய்ச்சி பாகுபதம் வந்ததும், அதில் பொடித்து வைத்த தேங்குழலுடன் ஏலக்காய்ப் பொடி போட்டு நன்றாகக் கிளறி விட்டால் மேல் பாகு ஒட்டிக் கொள்ளும். இதுவே மனோஹரம். இதைப் பருப்புத் தேங்காய் கூட்டில் சிறிது நெய் தடவி சூடாகவே போட்டு வைத்தால் சிருக்கு **"மனோஹரம் பருப்புத் தேங்காய்"** ஆகும்.

ஏலப் பொடி – ¼ தேக்கரண்டி

**மேல் மாவு :**

அரிசி மாவு – ½ ஆழாக்கு,
உளுத்தம் மாவு – 1 மேசைக்கரண்டி,
உப்பு – 1 சிட்டிகை,
டால்டா – 1 தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் – 200 கிராம்.

**செய்முறை :**

கடலை பருப்பை நன்றாக வேக வைத்துத் தண்ணீரில்லாது எடுத்துக் கொண்டு நன்றாக மசித்து, தேங்காய்த் துருவல் கலந்து கொள்ள வேண்டும்.



## சுகியம்

**தேவையான பொருட்கள் :**

**பூரணம் :**

கடலை பருப்பு – ½ ஆழாக்கு,
தேங்காய்த் துருவல் – ½ கப்,
வெல்லப் பொடி – 1 ஆழாக்கு (200 கிராம்),

பின்பு வெல்லத்தை கொஞ்சமாக தண்ணீர் விட்டு கரைத்து வடிகட்டி, அடுப்பில் வைத்து அதில் மசித்த கடலை பருப்பு, தேங்காய், ஏலப்பொடி போட்டு கிளறி, தண்ணீர் இல்லாது இழுத்துக் கொண்டு கைக்கு ஒட்டாத பக்குவம் வந்ததும் கீழிறக்கி ஆறவைக்க வேண்டும். மேல் மாவிற்கு அரிசி மாவு, உளுத்தம் மாவு, உப்பு, டால்டாவுடன் தண்ணீர் விட்டுக் கலந்து தோசை மாவு பதத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். பூரணத்தை எலுமிச்சம் பழம் அளவு

உருண்டைகளாக்கிக் கொள்ள வேண்டும்.

அடுப்பில், வாணலியில் எண்ணெய் விட்டுக் காய்ந்ததும், இந்த உருண்டைகளை மேல் மாவில் தோய்த்து (மாவு முழுவதும் பூசிக் கொள்ள வேண்டும். உருண்டைகளை) எண்ணெயில் போட்டுப் பொரித்து பொன்னிறமாக எடுக்க வேண்டும். இதை வெறும் தேங்காய்த் துருவல், வெல்லம் போட்டு பூரணம் செய்தும் செய்யலாம்.

## ஜாங்கிரி

**தேவையான பொருட்கள் :**

உளுத்தம் பருப்பு (முழு) – 1 ஆழ்ாக்கு (ஜாங்கிரி பருப்பு),
அரிசி – 1 தேக்கரண்டி,
சர்க்கரை – 400 கிராம்,'
கேசரி கலர் பவுடர் – ¼ தேக்கரண்டி,
ரோஸ் எஸன்ஸ் – 2 துளி,
பொரிக்க எண்ணெய் – ¼ கிலோ.

**செய்முறை :**

உளுத்தம் பருப்பையும், அரிசியையும் ½ மணி நேரம் ஊறவைத்து, கிரைண்டரில் வெண்ணையைப் போன்று அதிகமாக தண்ணீர் விடாது அரைத்துக் கொள்ள வேண்டும். பாதி கலர் பவுடரையும் சேர்த்து அரைத்து, ஒரு பாத்திரத்தில் தண்ணீர் விட்டு இதை உருட்டிப் போட்டால் மிதக்கும்படி இருக்க வேண்டும்.

வேறொரு பாத்திரத்தில் சர்க்கரையுடன் ¾ தம்ளர் தண்ணீர் விட்டு கம்பிப் பாகு வரும் வரை வைத்திருந்து இறக்கினதும், ரோஸ் எஸன்ஸும் மீதி கேசரி பவுடரும் போட வேண்டும்.

அடுப்பில் ஒரு தாம்பாளம் வைத்து எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் உளுத்தம் மாவை, பால் கவரில் மூலையில் சிறியதாக கத்திரித்துக் கொண்டு அதில் போட்டு முடிச்சு போல் செய்து கொண்டு எண்ணெயில் பிழிய வேண்டும். நடுவில் ஓட்டை விட்டு சுற்று

சுற்றிப் பிழிய வேண்டும். அதை எடுக்க நீளமான கம்பியை வைத்துத் திருப்ப வேண்டும். பொன்னிறமாக ஆனதும், உடனே சர்க்கரைப் பாகில் போட வேண்டும். இது ஐந்து நிமிடம் ஊறினாலே போதும். பாகிலிருந்து எடுத்துத் தட்டில் வைத்து விடலாம். இதை நன்றாக தட்டிலேயே ஆறின பின்புதான் மூடிவைக்க வேண்டும்.

## ஜிலேபி

**தேவையான பொருட்கள் :**

மைதா மாவு – 200 கிராம்,
அரிசி மாவு – 2 மேசைக்கரண்டி,
தயிர் – 1 கப்,
சர்க்கரை – 400 கிராம்,
கேசரி பவுடர் – ¼ தேக்கரண்டி,
பொரிக்க எண்ணெய் – 250 கிராம்.

**செய்முறை :**

மைதா மாவு, அரிசி மாவு, தயிர் விட்டு முந்நாள் இரவே கலந்து வைத்துக் கொள்ள வேண்டும். காலையில் கேசரி பவுடர் விட்டுக் கலந்து கொள்ள வேண்டும். பிளாஸ்டிக் கவரில் மூலையில் சிறியதாக வெட்டிக் கொண்டு மாவை கவரில் போட்டு ஒரு ரப்பர் பேண்டு போட்டு கெட்டியாக முடிந்து வைத்துக் கொள்ள வேண்டும். அடுப்பில், குழிவில்லாத தட்டையான வாணலியிலோ, தாம்பாளத்திலோ எண்ணெய் விட்டுக் காய்ச்ச வேண்டும். அதற்குள் சர்க்கரையில் 3/4 தம்ளர் தண்ணீர் விட்டுக் கம்பிப் பாகு பதம் வரும் வரையில் காய்ச்சி கொஞ்சம் கேசரி பவுடர் போட்டுக் கலக்க வேண்டும்.

எண்ணெய் காய்ந்ததும் கவரில் உள்ள மாவை எண்ணெயில் முறுக்கு போல் பிழிய வேண்டும். பொன்னிறமாக ஆனதும் சூடாக இருக்கும் சர்க்கரைப் பாகில் போட்டு ஐந்து நிமிடம் ஊறினதும் எடுத்துத் தட்டில் வைக்கவும். இது சிறிது புளிப்பாக கரகர வென்று இருக்கும்.

## மைசூர்பாகு

**தேவையான பொருட்கள் :**

கடலை மாவு – 1 ஆழாக்கு,
சர்க்கரை – 2½ ஆழாக்கு (500 கிராம்),
நெய் – 2 ஆழாக்கு (400 கிராம்),
தண்ணீர் – ½ தம்ளர்.

**செய்முறை :**



ஒரு கனமான வாணலியில் இரண்டு மேசைக்கரண்டி நெய் விட்டு கடலை மாவை பொன்னிறமாக வறுக்கவும். சர்க்கரையும் தண்ணீரும் கலந்து ஒரு பாத்திரத்தில் விட்டு, அடுப்பில் வைத்து இரட்டைக் கம்பி (இரட்டைக் கம்பிப் பாகு என்பது கம்பிப் பாகிற்கு அடுத்து வரும். பாகு வர ஆரம்பித்தவுடன் முதலில் இரண்டு விரலில் தொட்டு எடுத்தால் ஒரு கம்பி போல வரும். சிறிது நேரம் கழித்து இரட்டைக் கம்பி வரும். இது உருண்டை பாகிற்கு முந்தைய நிலை) பாகு வரும் வரை காய்ச்சவும். வறுத்த மாவை பாகில் கிளறிக் கொண்டே அடுப்பின் மறுபக்கத்தில் நெய் புகைய காய்ச்ச வேண்டும். அதிலிருந்து கரண்டி, கரண்டியாக மாவு கிளறும் பாத்திரத்தில் விட்டு மொத்த நெய்யும் விட்ட பின்பு பாத்திரத்தின் ஓரங்களில் சுருண்டு வரும் பொழுது ஒரு டிரேயில் நெய் தடவி அதில் இந்த மாவை ஊற்றி நன்றாகத் தட்டி சமப்படுத்த வேண்டும். மேலாக இரண்டு தேக்கரண்டி சர்க்கரையைத் தூவ வேண்டும். உடனே கத்தியால் டைமண்ட் வடிவில் கீறி விட வேண்டும். சிறிது ஆறினதும் துண்டுகள் எடுக்க வரும். பின்பு அதை மூடி வைக்கவும்.

## தேங்காய் பர்பி

**தேவையான பொருட்கள் :**

தேங்காய்த் துருவல் (வெள்ளையாக இருக்க வேண்டும்) – 2 கப்,
சர்க்கரை – 3 கப் (500 கிராம்),
தண்ணீர் – ½ தம்ளர்,
பால் – 1 கரண்டி,
ஏலக்காய்ப் பொடி – 1 சிட்டிகை.



செய்முறை :

தேங்காய்த் துருவலை வெறும் வாணலியில் வைத்து ஈரம் போக வதக்க வேண்டும். தணல் குறைவாக இருக்க வேண்டும். பின்பு ஒரு பாத்திரத்தில் தண்ணீர் விட்டு கொதிக்கும் போது சர்க்கரையைப் போட வேண்டும். பின்பு பால் விட்டு அழுக்கை எடுக்க வேண்டும். சர்க்கரை ரெட்டைக் கம்பிப்பாகு வந்ததும் தேங்காய்த் துருவலை விட்டுக் கிளற வேண்டும். பாத்திரத்தின் ஓரத்தில் சுருண்டு வரும் போது ஏலக்காய்ப் பொடி போட்டு கலக்கி, நெய் தடவிய தட்டில் கொட்டி சிறிது ஆறினதும் வில்லைகள் போடவும். இது சர்க்கரையில் அழுக்கெடுத்து (பால் விட்டு செய்வதால்) தேங்காய்த் துருவலை வெள்ளைத் துருவல் மாத்திரம் எடுத்துச் செய்தால் தேங்காய் பர்பி வெள்ளையாய் அழகாக இருக்கும்.

## பாதம் அல்வா

**தேவையான பொருட்கள் :**

பாதாம் பருப்பு – 100 கிராம்,
சர்க்கரை – 250 கிராம்,
நெய் – 200 கிராம்,
கேசரி பவுடர் – 1 சிட்டிகை,
குங்குமப்பூ – ¼ தேக்கரண்டி,
பாதாம் எஸன்ஸ் – 2 துளி.

செய்முறை :

பாதாம் பருப்பை ½ மணி நேரம் கொதிக்கும் நீரில் போட்டு ஊறவைக்க வேண்டும். பின்பு உரித்தால் தோல் கழண்டு வந்து விடும். அதை மிக்ஸியிலிட்டு, சிறிது தண்ணீர் தெளித்து நன்றாக மை போல் அரைக்க வேண்டாம். (ரவை போல்) அரைத்த விழுதில் சர்க்கரையைப் போட்டு கிளறி வர வேண்டும். (அந்த விழுதில் இருக்கும் ஈரமே போதுமாதலால், சர்க்கரையைப் பாகு பிடிக்காது கிளறலாம்) கூடவே நெய் விட்டுக் கொண்டே கிளறி வர வேண்டும். நெய் பிரிந்து தொட்டால் ஒட்டிக் கொள்ளாது வரும் பக்குவம் வரும் வரை கிளறி கேசரி பவுடர், குங்குமப்பூ, பாதாம் எஸன்ஸ் விட்டு நன்றாகக் கலந்து இறக்கி வைக்க வேண்டும். இதை மை போல் அரைக்காமல், கரகர வென்று அரைப்பதனால் அல்வா மாவு போன்றில்லாது, ரவை போல் இருக்கும். பாதாம் அல்வாவின் சுவையே அதனால்தான். இதற்கு நல்ல நெய்யும் போட்டால்தான் நன்றாக இருக்கும்.



அடக்கமாக அழகாக ஒரு ஃபிளாட் வேணுமே!



சொந்த வீடு வேணும்னு ஆசைதான். ஆனால், மொத்த பணமும் கொடுக்க முடியாதே...



எங்க குடும்பம் பெரிசு... கொஞ்சம் பெரிய ஃபிளாட்டா வேணுமே...?



ஃபிளாட்தான் என்றாலும் அழகாக இருக்க வேண்டாமா?



நேரத்தோட எந்த பில்டர்ஸ் முடித்துத் தராங்க.....?



தரமான கட்டமைப்புன்னு நம்பி வாங்க முடியுமா?

உங்கள் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே விடை : எஸ்டி அசோசியேட் பில்டர்ஸ். சென்னை நகரில் டீலக்ஸ் ஃப்ளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க முன்னணி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி பெற, சுலபத் தவணைகளில் வீடு வாங்க, மேலும் விவரங்கள் அறிய தொடர்பு கொள்ளுங்கள்.




**YESDE ASSOCIATED BUILDERS LIMITED**

2nd Floor, 26,
Ranganathan St.,
T.Nagar,
Madras - 600 017.
INDIA
Ph: Off: 4340224/
4340210.
Res.: 2345244
Fax: (044) 2344333

# குலோப்ஜாமுன்

**தேவையான பொருட்கள் :**

பால் - 1 லிட்டர்,
மைதா மாவு - 100 கிராம்,
நெய் - 1 மேசைக்கரண்டி,
சோடா உப்பு - ¼ தேக்கரண்டி,
சர்க்கரை - 500 கிராம்,
தண்ணீர் - 1½ தம்ளர்,
ரோஸ் எஸன்ஸ் - 2 துளி,
பொரிப்பதற்கு நெய்
அல்லது எண்ணெய் - 100 கிராம்.

**செய்முறை :**

முதலில் பாலை அகலமான வாணலியில் விட்டு அடுப்பில் வைத்து கோவா காய்ச்சிக் கொள்ள வேண்டும். கோவாவில் சர்க்கரைப் போடக் கூடாது. (கோவாவாக சர்க்கரை இல்லாதது வாங்கினால் 200 கிராம் வாங்க வேண்டும்) கோவா நன்றாக ஆறின பின்பு, ஒரு தட்டில் நெய், சோடா உப்பு (ஆப்ப சோடா) 2 தேக்கரண்டி தண்ணீர் விட்டு நன்றாகத் தேய்த்து குழைக்க வேண்டும். நுரை போன்று வரும். அதில் கோவாவை போட்டு கட்டி இல்லாது கலக்க வேண்டும். பின்பு கொஞ்சம் கொஞ்சமாக மைதா மாவைத் தூவி கலக்க வேண்டும். தொட்டால் மாவில் எண்ணெய்ப் பசை இருக்க வேண்டும். அதை அரை மணி ஊறவைக்க வேண்டும். அதற்குள் சர்க்கரையும் தண்ணீரும் சேர்த்து பாகாக காய்ச்ச வேண்டும். பாகு தொட்டால் ஒட்டிக் கொள்ளும். அதாவது ஒரு கம்பிப் பாகு பதம் இருந்தால் போதும். அதை இறக்கி வைத்து ரோஸ் எஸன்ஸ் கலந்து வைத்துக் கொள்ள வேண்டும். பின்பு அடுப்பில் சிறிய வாணலியை வைத்து நெய் விட்டுக் காய்ந்ததும், தணலை சிறிதாக்கிக் கொண்டு மாவை எலுமிச்சம் பழ அளவு உருண்டைகளாக லேசாக உருட்டிக் கொண்டு பொரித்து எடுக்க வேண்டும். சிவந்து ஒரே மாதிரியாக இருக்க வேண்டும். நெய்யில் நான்கு நான்காகத் தான் போட வேண்டும். பொரித்த ஜாமூன்களை உடனே பாகில் போட வேண்டும். பாகு ஜாமூன்களில் மேல் மிதக்கும்படி இருக்க வேண்டும். இது அரை மணியில் ஊறிவிடும். இது மிருதுவாகவும், குழையாமலும் இருக்கும். நாம் கோவா செய்து செய்தால் மிகவும் ருசியாக இருக்கும். இதைப் பாகுடன்தான் சாப்பிட வேண்டும். நெய்யிலிருந்து ஜாமூனை எடுக்கும் போது நன்றாக வடித்து எடுக்க வேண்டும். பாகின் பதம் சரியாக இல்லாவிடில் சர்க்கரை மேலே பூத்து விடும். இது 1 லிட்டர் பாலுக்கு 40 ஜாமூன்கள் வரும்.

படங்கள் : தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸில் எடுக்கப்பட்டவை

படங்கள் : சுரேஷ்





# சிறப்பான சேலைகளுக்கு
# இணையான மேட்சிங் ரேஞ்சுகள்
# இரண்டும் **பாம்பே டையிங்** தருபவை

பாம்பே டையிங்



எண்ணிலடங்கா வண்ணங்களில் உங்கள் எண்ணம் போல் அணிந்து மகிழ சிறப்பான சேலைகளை படைக்கிறது **பாம்பே டையிங்**, **மேட்சிங் ரேஞ்சுகளுக்காக நீங்கள்** தேட வேண்டியதில்லை. 300-க்கும் மேற்பட்ட நிறங்களில் கலைநயமும் நேர்த்தியும் கூடிய மேட்சிங் ரேஞ்சுகளை உங்களுக்காகவே வழங்குகிறது பாம்பே டையிங் சில ரகங்கள் இதோ :- 2x2 ஃபுல் வாயல் 2x1 வாயல் சிஃபான், கேம்ப்ரீக், 100% பாலியெஸ்டர் மற்றும் பல புடவை பெண்ணுக்கு தனியழகு பாம்பே டையிங் புடவைகள் பெண்ணுக்கு பேரழகு. பாம்பே டையிங் ஆடைகள் அணிந்து ஃபேஷனில் புது புரட்சி படைக்க வாருங்கள்.

- **மில் நிர்ணயித்த விலை**
- **தரத்திற்கு உத்திரவாதம்**



BRIGHT/SA

தமிழ்நாடு கேரளா மற்றும் பாண்டிச்சேரியில் உள்ள எமது 135 ஷோரூம்களிலும், அங்கீகாரம் பெற்ற டீலர்களிடமும் கிடைக்கும்

விநியோகஸ்தர்கள்
சிவ்ராம்ஸ் அஸோசியேட்ஸ்
கோவை 11 - சென்னை - 17.

Bankers: The Federal Bank Ltd

# பாம்பே டையிங்






எல்லா பொருட்களும் (விலை சற்று அதிகம் கொடுத்தாலும்) எளிதாகக் கிடைக்கக் கூடிய பெரிய நகரங்களிலேயே கூட சில சமயம் பண்டிகைகளை - நாள், கிழமைகளை விமரிசையாகக் கொண்டாட முடியாமல் போகும் நிலை வருகிறது. ஆனால் 'இருண்ட கண்டம்' என அழைக்கப்படும் ஆப்ரிக்காவில் வாழும் நம் நாட்டினர் நம் பாரம்பரியம் விடாமல் அனைத்துப் பண்டிகைகளையும் நன்கு கொண்டாடி மகிழ்கின்றனர் என்று கேள்விப்பட்ட போது உண்மையிலே வியந்துதான் போனோம்! 5 வருடங்களாக ஆப்ரிக்காவில் வாழும் திருமதி ஷீலா பரத் அவர்களைச் சந்தித்தோம். தாங்கள் நவராத்திரி கொண்டாடும் விதங்களை அவர் விவரித்தார்.

"நான் என் கணவர் குழந்தையுடன் ஜாம்பியாவின் தலைநகரான லுசாகாவில் வசிக்கிறேன். இந்த இடம் கடல் மட்டத்திலிருந்து ஏறக்குறைய 3000 அடி உயரத்தில் உள்ளது. ஆண்டு முழுவதும் ஊட்டியைப் போன்ற ஒரு சீதோஷ்ணம். பூமத்திய ரேகைக்கு ஜாம்பியா தெற்கில் உள்ளதால் இந்தியாவில் உள்ளதற்கு நேர்மாறான தட்பவெப்பம். நவராத்திரியின் போது இங்கு கோடை ஆரம்பம்.

# இருண்ட கண்டத்தில் ஒளிமிக்க நவராத்திரி!

நாங்கள் சிறப்பாகக் கொண்டாடும் பண்டிகைகளில் ஒன்று நவராத்திரி. தனித் தனியாக எங்கள் வீடுகளில் நாங்கள் கொலு வைப்பதில்லை. இங்குள்ள வேதாந்த சென்டர் ஹாலில் நாங்கள் அனைவரும் சேர்ந்துதான் கொலு வைப்போம். இங்குள்ள 'தமிழ் அசோசியேஷனைச்' சார்ந்த உறுப்பினர்கள் அனைவரும் தங்களால் முடிந்த அளவு - ஒன்று இரண்டு பொம்மைகளாவது தர - ஒரு எளிய - அழகிய கொலு உருவாகும். முதல் 6 நாட்கள் எங்கள் தமிழ் அசோசியேஷன் உறுப்பினர்கள் - குழுவினர்களாகப் பிரிந்து கொண்டாடும் பூஜை. தினமும் ஒரு குழு பூஜையைச் செய்யும். பூஜைக்கான செலவு, பிரசாதங்கள் இப்படி அனைத்துமே இதன் குழுவின் உறுப்பினர்களால் பகிர்ந்து கொள்ளப்படும் [illegible] முதல் மூன்று




நாட்கள் துர்கை பூஜை - மஹிஷாசுரமர்த்தினி போன்ற ஸ்தோத்திரப் பாடல்களும் பங்கு கொள்ளும் குழுவினரால் பாடப்படும். இரண்டாவது மூன்று

நாட்கள் லஷ்மி பூஜை, ஸ்தோத்திரங்கள். பிறகு 7,8,9, மூன்று நாட்களும் வங்காளியர்கள் நவராத்திரி பூஜையைச் செய்வார்கள். 'வேதாந்த சென்டர் ஹால்' இந்தியர்கள் அனைவருக்கும் பொதுவாயிற்றே! நாங்கள் 9-வது நாளாகிய சரஸ்வதி பூஜையை வீட்டிலேயே செய்துவிடுவோம். சனி, ஞாயிறு போன்ற விடுமுறை நாட்கள் என்றால் பூஜைக்கு அக்கம் பக்கத்தவர்களையும் அழைத்து - சற்று விமரிசையாகவே செய்வோம்.

கடைசி நாளான தசமியன்று மீண்டும் வேதாந்த சென்டர் ஹாலில் பூஜை. பெரிய கலைவிழா போல நடக்கும். ஆடல், பாடல் கற்க ஆரம்பிப்பவர்கள் இன்று துவங்குவர். ஆடல், பாடல், நாடகம் - இப்படி பல கலை நிகழ்ச்சிகள் குழந்தைகளுடன் பெரியவர்களும் பங்கு கொண்டு மகிழ்வர் (தங்கள் வயதை மறந்து!)

வெற்றிலை - கடையில் கிடைக்காத ஒன்று. சில இடங்களில் வெற்றிலைக் கொடி தன் போக்கில் படர்ந்திருப்பதைக் கண்டு - அதைப் பறித்து வருவது உண்டு. ஆனால் சிலர் தற்போது இதை வீட்டிலேயே வளர்க்கவும் ஆரம்பித்து விட்டனர். பாக்கு கிடைப்பது சற்று கஷ்டம்தான்! தமிழ்நாட்டிலிருந்து வரும்போது கொஞ்சம் கையில் கொண்டு வருவது உண்டு. ஆனால் இங்குள்ள குஜராத்திக் கடைகளில் 'சுபாரி' வகைப் பாக்குப் பொட்டலங்கள் கிடைக்கிறது. மஞ்சள் பொடிதான் இங்கு கிடைக்கும். மஞ்சள் கிழங்காகக் கிடைப்பதில்லை. மஞ்சள் பொடியை பொட்டலங்களாக்கி வெற்றிலைப் பாக்குடன் கொடுத்து விடுகிறோம். எனவே வெற்றிலைப் பாக்கு மஞ்சள் கொடுப்பது எளிதாகிவிட்டது. வாழைப்பழத்தில் பச்சைப்பழம் மட்டுமே கிடைக்கும். பட்டாணி, கடலை, கொத்துக்கடலை, காராமணி - இப்படி எல்லாமே கிடைப்பதால் - சுண்டல் செய்வதும் ஒரு பிரச்சனையல்ல. தேங்காய் கிடைப்பது சற்று கஷ்டம் தான். தான்சேனியா என்னுமிடத்திலிருந்து மாதம் ஒருமுறை மொத்தமாக தேங்காய் வரும். அப்போது 30 அல்லது 40 காய்களை வாங்கி வைத்துக் கொள்வோம். பூஜைக்குவேண்டிய 2,3 காய்களை மட்டும் உடைக்காமல் வைத்துக்கொண்டு மீதியை உடைத்து 'பல் பல்லாக'க் கீறி 'ஃபிரிசரில்' வைத்து விடுவோம்.

ஆனால் தற்போது ஹிந்து ஹால் வாசலில் செவ்வாய்க் கிழமைகளில் மட்டுமே வரும் 'டியுஸ்டே மார்கெட்டில்' வாழைக்காய், கரைக்காய், கொத்தவரைக்காய், கீரைகள், வாழைத் தண்டு - இப்படி எல்லா காய்கறிகளுடன் தேங்காயும் கிடைக்கிறது. விலைதான் சற்று அதிகம்.

வெற்றிலைப் பாக்குடன் ரவிக்கைத் துண்டு வைக்கும் வழக்கம் அங்கு இல்லை. மிகவும் நெருங்கியவர்கள் வீட்டுக்குவரும் போது செப்பிலான அழகிய சிறிய பாத்திரங்கள், ஸ்வாமி விக்ரகங்கள் போன்றவைகளை வெற்றிலைப் பாக்குடன் வைத்துக் கொடுப்போம். இங்கு செம்பு, வெள்ளியிலான கலைப் பொருட்கள் நிறைய கிடைக்கும். வெள்ளியினால் ஆனது என்றால் விலை சற்று கூடுதலாகும். நவராத்திரியின் போது முடிந்த நாள் அன்றுவீட்டிலேயே கன்யா பூஜை செய்து பெண் குழந்தைகளுக்குத் துணி, மணிகள் வாங்கித் தருவதும் உண்டு.

நவராத்திரி சமயம் பல விதமான போட்டிகள் நடைபெறும். அதில் அனைவரும் பங்கு கொள்வோம். இந்தப் போட்டிகள் மிகவும் பிரபலமானது. கோலப் போட்டி. இதில் அனைவருமே தவறாமல் பங்குகொள்வர். பலவித வண்ணக்கோலங்களை போட்டு ஜமாய்த்து விடுவோம். நவராத்திரி பண்டிகை எங்களைப் பொருத்த வரை - எங்களை ஆன்மீகத்தில் மூழ்கவைப்பது மட்டுமல்ல - இது ஒரு "'கெட்டுகெதரும்' கூட" என்றார் திருமதி ஷீலா பரத்.

எந்த ஊரில் எந்த நாட்டில் இருந்தாலும் நம் பண்பாடும் கலாச்சாரமும் மறந்து விட முடியாத ஒன்று என்பது புரியும் போது உண்மையிலேயே மனம் நெகிழ்ந்து போனது.

-பேட்டி: **வைதேகி தேசிகன்.**

## மின்னும் பூ ஜாடி

சாதாரண அலுமினியம் ஃபாயிலை (ஹோட்டல்களில் உணவு பாக் செய்து தர உபயோகப் படுத்துவது) லேசாகக் கசக்கி, பின் சுருக்கங்களுடன் பிரித்து டம்ளர்களின் மேல் போர்த்திவிடவும். இவற்றில் பூக்களை வைத்து அலங்கரித்து கொலுப் படியில் அங்கங்கே வைக்கவும்.

"இதென்ன ப்ளவர் வாஸ்? இத்தனை ஜோராய் ஜொலிக்கிறதே!" என்று பார்ப்பவர்கள் அதிசயிப்பார்கள்.

**- உஷா**



# அரண்மனைக் கொலு!

**மி**கப்பழமையான பெரிய அரண்மனை திருச்சி மாவட்டம் துறையூரில் உள்ளது. குமார வெங்கடாஜல துரை, அவரது மனைவி பிரேமலதா குடும்பத்தின ரால் அரண் மனையின் பெரிய கூடத்தில் ஒவ்வொரு வருடமும் கொலு சிறப்பாக வைக்கப்படு கிறது. சுற்றுப் புறத்தில் உள்ள கிராம மக்கள் எல்லோரும் இந்த 'அரண்மனைக் கொலு' வை வந்து பார்க்கவே திரள் திரளாக வருகின்றனர்.



தனது கணவர் ஒவ்வொரு வருடமும் புதுமையான பொம்மைக் கொலுதான் வைக்கவேண்டும் என்ற ஆர்வத்துடன் ஓராண்டிற்கு முன்பே திட்டமிட்டு அதன்படி தனது வீட்டிலேயே தச்சரை வரவழைத்து அற்புதமான மரசிற்பங்கள்







தயாரிப்பதாக பிரேமலதா கூறினார். குமார வெங்கடாஜல துரை ஸ்ரீரங்கத்தில் தங்கியிருந்தபோது அங்கு வைக்கப்படும் கொலுவினை ரசித்து அதை மனத்தில் வைத்துத்தான் இருபத்தைந்து வருடங்களாக அரண்மனையில் மிக நவீனமுறையில் கொலுக்களை வைத்து வழிப்பட்டுவருகிறாராம்.

சென்ற வருட ஸ்பெஷலாக சபரிமலைக்கோயிலும், பாஞ்சாலக்குறிச்சி கட்டபொம்மன் கோட்டையும் சிறப்பாக சித்திர வேலைப்பாடுடன் செய்யப்பட்டு கொலுவில் வைக்கப்பட்டிருந்தது.

அதைப் போல் காவிரித்தாய் பொம்மை, விநாயகர் கச்சேரி பொம்மைகளும் இந்த வருடம் கொலுவில் சேர்த்துள்ளார்கள்.

அழகான கிராமச் சூழ்நிலையைச் சித்தரிக்கும் அய்யனார் கோயில், அங்கு வாழும் மக்களின் அன்றாட தொழிலைச்

சித்தரிக்கும் பொம்மைகள், வயல்வெளி, களத்துமேடு, தெப்பக்குளம் போன்ற பொம்மைகளும் உண்டு.

நகர்ப் புறத்தைச் சித்தரிக்கும் வண்ண வீடுகள், பள்ளிகள், கல்லூரிகள், அடுக்குமாடி



கட்டிடங்கள், திரையரங்குகள், பெட்ரோல்பங்க், பேங்க், உயிரியியல் பூங்கா என்று நகரத்தையே வடிவமைத்து கொலுவில் வைத்துள்ளார்கள், பள்ளிவாசல், சர்ச், கோர்ட், மேம்பாலம், மேல்அணை யாவும் உண்டு. பெரியகூடத்தில் பதினைந்து படிகள் கொலு வைத்து குத்துவிளக்கை அம்மன் போல், பட்டுப்புடைவை கட்டி அலங்காரம் செய்து வைத்திருந்தது தெய்வீகச் சூழலை உண்டாக்கியது. தசாவதாரம், மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி கோயில், சங்கராச்சாரியார், ஔவையார் சுட்ட பழம், வள்ளித் திருமணம் எனச் சொல்லிக் கொண்டே போகலாம். ஏராளமான பொம்மைகள்.

நவராத்திரி என்றாலே கலை ஆர்வம் வளர்வதற்கும், நமது பண் பாட்டினை உணர்ந்து கொள்ளவேண்டும் என்ற உயரிய குறிக்கோளுடன் அரண்மனைக் கொலுவினை அனைவரும் கண்டுகளிக்கவேண்டும் என்றும் ஒவ்வொரு வருடமும் தொடர்ந்து செய்து வருகின்ற குமார வெங்கடாஜல துரை, பிரேமலதாவை பாராட்டத்தான் வேண்டும்.

-ஜகதீசன்

Submerge yourself in a world of blues...

Lose yourself in the world of Thackersey's Cholee Fabrics. Choose from an astonishing range of blues : navy blue, cerulean blue, aqua blue, turquoise blue, peacock blue, sky blue... You'll find more blues, yellows, greens, reds than ever before.

HINDOOSTAN MILLS

thackersey's Cholee FABRICS

Thackersey's Cholees are available only as unstitched fabrics. The Cholee design shown in the picture is only meant to spark off your imagination and give shape to your fashion fantasies. **THE HINDOOSTAN SPG. & WVG. MILLS LTD.** Two-Tier Marketing Division, Yadav Patil Lane, Veer Savarkar Marg, Prabhadevi, Bombay 400 025. Tel: 4229831 / 4229740 / 4229741. Fax: 022-4224017.

# திருமதிகள் செய்த தியாகம்!

தாங்கள் எதற்காக, எந்தத் தியாகம் செய்தோம் என்பதை இங்கே சில பெண்மணிகள் சொல்கிறார்கள்...

**திருமதி கல்யாணி** "என் சொந்த ஊரு திருநெல்வேலி மாவட்டம் கயத்தாறு. எனக்குப் பதினைஞ்சு வயசிலே கல்யாணம் நடந்திச்சு. ரெண்டு கண்ணும் பிறவியிலேயே தெரியாத தாய் மாமனுக்கு என்னை கட்டாயப்படுத்திக் கல்யாணம் செஞ்சு வைச்சாங்க. முத ரெண்டு மாசம் என் நிலைமையை நினைச்சு அழுதேன். அப்புறம் பாவம் மாமான்னு என் புருஷன் மேலே இரக்கப் பட்டு அவருக்காக என் வாழ்க்கையைத் தியாகம் செய்ய முடிவு செஞ்சேன். அவருக்குக் குளிக்க விடுவேன். சாப்பாடு ஊட்டி விடுவேன். ஊட்டி விடற போது தவறு தலா என் விரலை கடிச்சிடுவார். ரத்தம் கொட்டும் அதுக்காக அவரை கோவிச்சிக்க மாட்டேன். நல்ல வசதியோட இருந்தோம். நாலு குழந்தை பிறந்தது. புருஷன் செத்துப் போனாரு. வறுமை கஷ்டம் வந்து வீடுவீடா பத்து பாத்திரம் தேய்ச்சுத் தந்து, வீடு பெருக்கிச் சுத்தம் செய்யறதுன்னு வேலைகளை பார்த்திட்டு வரேன். என் பிள்ளை கூட, நீ ஏன் கஷ்டப்படறே... என் கூட இருக்கலாம்னு, கூப்பிடறான். நான் போகலை. என் ரெண்டாவது பொண்ணை கட்டிக் கொடுத்த இடத்தில் கஷ்டப் படறா. அதுக்காக நான் சம்பாதிச்சுக் கொடுக்கறேன். முதல்ல புருஷனுக்காக, இப்ப பொண்ணுக்காக..."

**திருமதி சவிதா**:- "ஒன்பது பெண்களைக் கொண்ட பெரிய குடும்பமாக குஜராத்தில் இருந்து மதுரைக்கு வந்து கைத்தறிதுணி ஏற்றுமதி தொழிலை எங்கள் குடும்பம் செய்தது. தொழிலில் ஏற்பட்ட பாதிப்பால் வேறு நிலையான புகழை, வருமானத்தைத் தரும் பிசினஸ் செய்ய முடிவு செய்து என் கணவரும் குடும்பத்தினரும் 1982 ஆம் ஆண்டில், அதிநவீன வசதிகள் கொண்ட, தேய்ந்து விடும் மொசைக் இன்றி, தேயாத மார்பிள்களைக் கொண்ட 'ஹோட்டல் சுப்ரீம்' கட்டத் துவங்கினோம். ஆனால் ஹோட்டல் விரைவில் கட்ட முடியாத படி பல தடைகள், சோதனைகள் வந்தது. ஆனால் அந்த ஹோட்டல் முடிக்கப்பட நான் கடுமையான விரதங்களை மேற் கொண்டேன். ஆறு வருடங்கள் ஒரு வேளை மட்டுமே சாப்பிட்டேன். புதிய ஆடைகள் வாங்கவில்லை. கார் வாங்காமல் எங்கு சென்றாலும் நடந்தே சென்றேன். என் கணவர் ஆர்க்கிடெக்டுடன்

சவிதா

கோமளா

கல்யாணி

வெளியூர்களில் உள்ள பெரிய ஹோட்டல்களின் சிறப்பு அம்சங்களைக் காணச் சென்ற போது நானும் உடல்நல பாதிப்புகளை சிறிதும் பொருட்படுத்தாமல் சென்றேன். எனது தியாகங்களுக்கு நல்ல பதில் கிடைத்தது. 1988 ஆம் ஆண்டில் எங்கள் 'ஹோட்டல் சுப்ரீம்' திறக்கப்பட்டது. மதுரையிலேயே முதன் முதலாக 'ரூப் டாப் உணவகம்' அமைத்துப் புகழ் அடைந்தோம்.

**திருமதி கோமளா:-** "சில ஆண்டுகளுக்கு முன்பு பள்ளிக்கூடத்தில் படித்த என் மகனுக்கு இருதய ஆபரேஷன் செய்ய வேண்டிய நிலைமை வந்ததும் அதிர்ந்து போய்விட்டேன். 'தெய்வமே, என் பிள்ளையைக் காப்பாற்று.. அதற்காக என்னை வருத்தும் தியாகங்களை செய்கிறேன்' என்று மனம் உருக வேண்டி அதன்படி செய்யத்துவங்கினேன். இரவு தூக்கத்தைத் தியாகம் செய்து தெய்வ திருப்படங்களுக்கு முன்பு விளக்கேற்றி வைத்து 'ஸ்லோகங்களை' சொன்னேன். பௌர்ணமியில் சத்ய நாராயணா பூஜை செய்தேன். சத்ய சாய் பாபா பூஜை செய்தேன். தினமும் சாப்பிடாமல் உண்ணாநோன்பும் இருந்தேன். இப்படி ஒருவேளை கூட சாப்பிடாமல் ஒரு வாரம் வரை இருந்ததும் என் கணவர் கண்டித்துச் சாப்பிட வைத்தார். அதன் பிறகு தினமும் ஒரு வேளை மட்டும் 'உப்பு' இல்லாமல் சமயபுரம் மாரியம்மனை வேண்டி சாப்பிட்டேன்.

என் வேண்டுதல், தெய்வ பக்தி, தியாக உணர்வால் என் பிள்ளைக்கு நல்லபடியாக இருதய ஆபரேஷன் நடந்து நன்றாகச் செயல்பட்டு வருகிறான். என் கணவருக்குக் கண் ஆபரேஷன் நடந்த போதும் தீவிர விரதங்களை கையாண்டேன். நல்லபடியாக ஆபரேஷன் முடிந்ததும் நடந்தே திருப்பதி சென்று வந்தேன். உடலை வருத்திச் செய்யும் தியாகத்திற்கு கடவுள் நிச்சயம் நல்லதையே செய்வார்."

பேட்டி - படங்கள்: **விஜயா கண்ணன்**

சுக்கை வறுத்துப் பொடி செய்து, சலித்து வைத்துக்கொண்டு, குழந்தைகளுக்குத் தயிர் சாதம் ஊட்டும் போது சிட்டிகை கலந்தால், புளிப்புத்தட்டாமல் எளிதில் ஜீரணமாகும்.

**ஆர். பார்வதி**





# -வது திருமண நாள் கொண்டாடிய அபூர்வ தம்பதிகள்

**திருமணமாகி அறுபது வருடங்கள் பூர்த்தியாகி விழா கொண்டாடுபவர்களுக்கு 'வாழ்த்து அட்டை' அனுப்பலாம் என்று கடைகளில் தேடிப் பார்த்தால் அப்படி ஒன்று கிடைக்காது. பெரும்பாலும் இருபத்தைந்து வருட, ஐம்பது வருட திருமண நிறைவு வாழ்த்து அட்டை கிடைக்கும். அறுபது வருட வாழ்த்து அட்டை கிடைக்காது. இப்படி ஒரு அபூர்வமான நிறைவான வாழ்க்கை வாழ்ந்து வரும் திருமதி ஜீவரத்தினத்திடம் பேசினோம் :**

**ஜீவரத்தினம் காலஞ்சென்ற பிரபல வித்வான் கும்பகோணம் பிடில் ராஜமாணிக்கம்பிள்ளை அவர்களின் மூத்த மகள். அப்பா சாமி போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டராக இருந்து ரிடையர் ஆனவர்.**

''உங்களுடைய திருமணம் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள்...''

''எங்கள் திருமணம் 1935 ஆம் வருடம் வைகாசி மாதம் முப்பது அன்று நடந்தது. ஐந்து நாட்கள் திருமண விழா. முதல் நாள் நிச்சய தார்த்தம். இரண்டாம் நாள் பந்தக்கால் நடுவது. மூன்றாம் நாள் மாப்பிள்ளை அழைப்பு. நான்காம் நாள் கல்யாணம். ஐந்தாம் நாள் மாப்பிள்ளை விருந்து. ஐந்து நாட்களுக்கும் கச்சேரி. அரியக்குடி ராமானுஜ ஐயங்கார் உட்பட பிரபல வித்வான்களும் கச்சேரி செய்தார்கள். திருமண விழாவா, இன்னிசை விழாவா என்ற சந்தேகம் கும்பகோணத்தில் உள்ளவர்களுக்கு எழுந்தது. அப்பா பிரபல வித்வானாக இருந்ததால் அவரிடம் பெரு

## விட்டேனாபார் சப்பாத்தி!

இரண்டு பெரிய வெங்காயத்தைப் பொடியாக அரிந்து வாணலியில் கடுகு தாளித்து வதக்கினேன். முதல் நாள் மீந்திருந்த சப்பாத்திகளை மிக்ஸியில் பொடியாக்கி வெங்காயத்துடன் கலந்து சிறிது உப்பும், மிளகாய்த் தூளும் கலந்து பச்சைக் கொத்துமல்லியைப் பொடியாக அரிந்து அதில் தூவிப் பரிமாறினேன். ரொம்ப நன்றாக இருப்பதாகக் கூறினார்கள். பழைய சப்பாத்திகளை விடாமல் இப்படிச் செய்வதால் இதற்கு 'விட்டேனா பார்' என்று பெயரும் வைத்தோம். - சாரதா

---

மதிப்பு வைத்திருந்த பல வித்வான்களும் திருமணத்திற்கு வந்திருந்தார்கள். எனக்குக் கல்யாணமான போது வயது பதினைந்து. அவருக்குப் பதினாறு. எஸ்.எஸ்.எல்.சி. படிச்சுக்கிட்டிருந்தார். கல்யாணமாகி ஒன்றரை வருஷம் கழிச்சுத்தான் எங்களுக்கு சாந்தி முகூர்த்தமே நடந்தது."

இந்த வயதிலும் அவரது முகத்தில் ஒரு வெட்கம் தெரிந்தது.

அப்பாசாமி அவர்களிடம் ஒரு குறும்புத்தனமான கேள்வியைக் கேட்டோம் -

**"கல்யாணமான உடனே சாந்தி முகூர்த்தம் நடக்கலைங்கிற வருத்தம் உங்களுக்கு இருந்ததா?"**

"படிப்பு கெட்டுப் போகக் கூடாதுன்னு 'அதை' பெரியவங்க தள்ளி வச்சாங்க. சாந்தி முகூர்த்தம் லேட்டா நடந்தாலும் சந்ததிகளுக்குக் குறைவில்லை. நாலு பையன்கள், ஐந்து பெண்கள்."

சொல்லிவிட்டுச் சிரிக்கிறார்.

**"அந்தக் காலத்திலே உங்களுக்குத் தனியா பேசப் பழக என வாய்ப்பு உண்டா?"**

"அப்படி எல்லாம் ஒண்ணும் கிடையாது. ராத்திரி தூங்க ஏதோ 'காமிரா' அறைன்னு வீட்டிலே ஒரு மூலையிலே இருட்டா ஓர் அறை இருக்கும். அந்த அறையிலே நுழைவதற்கும் தயங்கித் தயங்கித்தான் நுழைவோம். இப்போ வயசான காலத்திலே மகனது வீட்டில் தனியா பெட்ரூம் கிடைச்சிருக்கு..."

திருமதி ஜீவாவிடம் -

**"இந்தக் காலத்துப் பெண்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"**

"அந்தக் காலத்தில் தாத்தா அப்பாவுக்குப் பயந்து பயபக்தியுடன் கட்டுப்பாடாக வளர்ந்தார்கள். இந்தக் காலத்தில் படிப்பை முக்கியமாகக் கருதி பெற்றோரை விட்டுத் தனியாக, உலக அறிவைப் பெற்று துணிச்சலும், தைரியமும் படிப்பும் வந்துவிட்டபடியால் தன் வாழ்க்கையைத் தானே அமைத்துக் கொள்கிறார்கள். தவறு இல்லை."

**"பெண்களின் சமத்துவம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"**

"கணவனை எதிர்த்துப் பேசுவதுதான் சமத்துவம் என்று நான் நினைக்கவில்லை. என்னதான் படிப்பு படித்தாலும், எந்த உத்தியோகத்தில் இருந்தாலும் ஓரளவுக்குப் பொறுமையுடன் கணவனின் குறைகளைச் சகித்துக் குடும்பம் நடத்தினாலே உறவு முறியாமல் இருக்கும். இந்தியாவில் ஆண்களின் மனநிலைமை மாற இன்னும் ஐம்பது ஆண்டுகளாவது பிடிக்கும். இப்போது பிறக்கும் ஆண் குழந்தைகளை வீட்டு வேலை செய்யச் சொல்லிப் பழக்கி வந்தால் எதிர்காலத்தில் பெண்களின் கஷ்டங்களைப் புரிந்து கொண்டு மனைவிக்கு உதவி செய்வார்கள். அவங்க (என் கணவர்) அந்தக் காலத்திலேயே எனக்கு வீட்டு வேலைகள் செய்யறதிலே உதவி செய்வார்கள். துணி துவைக்கிறது, வெந்நீர் அடுப்பு போட்டு வெந்நீர் கொதிக்க வைப்பது, குழந்தைகளைக் குளிப்பாட்டி விடுவது, இதுபோல இன்னும் பல வேலைகளைச் செய்வாங்க."

**"இளம் தலைமுறையினருக்கு என்ன சொல்கிறீர்கள்?"**

"போதைப் பொருள் பழக்கம், குடி, சீட்டாட்டம் எல்லாம் வேண்டாம். இந்தப் பழக்கம் இருந்தால் எவ்வளவு சம்பாதித்தாலும் போதாது. வாழ்க்கையில் பொழுதுபோக்கு ஓர் அம்சம்தான். பொழுது போக்குவதே வாழ்க்கையாகாது. டி.வி. பார்ப்பதைக் குறைத்துக் கொண்டு வேறு உபயோகமான காரியங்களில் நேரத்தைச் செலவிட வேண்டும்."

அவர்களிடம் மனநிறைவான வாழ்த்தைப் பெற்றுக் கொண்டு அந்தத் தம்பதிகள் இன்னும் பல ஆண்டுகள் நீடூழி வாழ ஆண்டவன் அருள் செய்யும்படி வேண்டிக் கொண்டு விடைபெற்றோம்.

— **கமலநாதன்**



# குழந்தைகளின் தனித்தன்மையைக் கண்டு கொள்ளுங்கள்!

அழித்து,
அழித்து வரைந்து
மானின் துள்ளும்
அழகை இயற்கையின்
சூழலோடு தன் வரைபடத்தில் கண்முன்
கொண்டுவர முயலும் பையனைப்
பார்த்து...

மூச்சிரைக்க மீண்டும், மீண்டும் ஓடி பழைய 'ரிகார்டை' முறியடித்து அதலெடிக்கில் வீராங்கனையாக வரவிரும்பும் மகளைப் பார்த்து...

சதுரங்கத்தில் காய்களை
எதிராளி இப்படி
நகர்த்தினால்
அடுத்த
இயக்கம்
நமக்கு
எப்படி வெற்றி
யைத் தரும் என்று சதா
சிந்தனையில் ஆழ்ந்திருக்கும்
பெண்ணைப் பார்த்து....

பொதுவாக இவர்களின் பெற்றோர் கள் அறிவுரை என்னவாக இருக்கும் தெரியுமா? "இந்தக் கிறுக்கலையும், ஓட்டத்தையும் ஓர் ஓரமாக வைத்துவிட்டு உருப்படியாய்ப் படிக்கிற வழியைப் பார். இவை உனக்குச் சோறு போடாது. கல்வி ஒன்றுதான் அனைத்திற்கும் நிரந்தரம்."

இதே அறிவுரையை
ஒரு குற்றாலீஸ்
வ ர னி ன்





# அன்னையர் தேவை

"நாங்கள் சின்னஞ்சிறு அரும்புகள்
பூத்துக் குலுங்க இருக்கும் புத்தம் புதுமலர் அரும்புகள்
நல்ல வாசமுள்ள மலர்களாக மலர விரும்பும் குழந்தை அரும்புகள்
ஆனால் அன்பும், ஆதரவும் அளிக்க எங்களுக்கு அம்மா இல்லை.
கொஞ்சி விளையாட, அரவணைக்க, பரிவோடு உணவு ஊட்ட அம்மா இல்லை.
அம்மா வேண்டும் - ஆசை அம்மா எங்களுக்கு வேண்டும் என்று நாங்கள் மிகவும் ஏங்குகிறோம்."

**- அன்பைத் தேடும் குழந்தைகள்.**

தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை, தாயின் அன்புக்கு ஈடு இணை வேறெதும் இலலை என்பது நாம் அறிந்த உண்மை. அந்தத் தாயின் அன்பு கிடைக்காமல் ஆயிரக்கணக்கான குழந்தைகள் இவ்வாறு ஏங்குகின்றன.

அன்புக்கும், பாசத்துக்கும் ஏங்குகின்ற அந்தக குழந்தைகளுக்குத் தாயாக நீங்கள் ஏன் ஆககககூடாது? ஓர் உன்னதத் தாயாக. அந்தக் குழந்தைகளை அன்புடனும் பாசத்துடனும், குடும்பச் சூழ்நிலையில், வளர்க்க வேண்டும் என்ற விருப்பமும் லட்சியமும் தங்களுக்கு இருந்தால், அதை நிறைவேற்ற, இதோ எங்கள் குழந்தைகள் இல்லங்கள் சிறந்த வாய்ப்பளிக்கின்றது.

கோவை மாவட்டம், மதுக்கரையில் 20 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள எங்கள் குழந்தைகள் இல்லம் ஒவ்வொன்றும் பெரியதாகவும், மிக அழகுடனும், எல்லா வசதிகளுடனும் அமைக்கப்பட்டுள்ளது.

குழந்தைகளைப் பரிவுடன் வளர்க்க விருப்பம் உடைய தங்களைப் போன்ற பெண்களுக்கு இது மிகவும் உகந்த பணியாகும். அமைதி நிறைந்த, இயற்கை அழகுடன் கூடிய சூழ்நிலையில், மனநிறைவையும் நிம்மதியையும் தரும் பணி இது.

அன்னையர் பணிபுரிவோர்க்கு இருப்பிடமும், உணவும், ஊதியமும் அளித்து அவர்களை குழந்தைகள் குடும்பத்தில் முக்கிய ஆதாரமாக ஏற்றுக் கொண்டு, அவரது வாழ் நாள் முழுவதும் மிகுந்த பாதுகாப்பை அளிக்கிறது எங்கள் அமைப்பு.

திருமணம் செய்து கொள்ளும் எண்ணம் இல்லாதவர்/கணவனால் கைவிடப்பட்டவர் அல்லது கணவனை இழந்தவராக 25 வயதுக்கு மேல் 35 வயதுக்கு உட்பட்டவராக தாங்கள் இருந்து பத்தாம் வகுப்பு அல்லது அதற்கும் மேற்பட்ட படிப்பு படித்தவராகவும், தனக்கென்று குழந்தைகள் ஏதும் இலலாதவராகவும், குழந்தைகள் பணியில் ஈடுபாடு உடையவராகவும் தாங்கள் இருந்தால் முழு விபரங்களுடன் கீழ்க் கண்ட முகவரிக்கு விண்ணப்பிக்கவும்.

**எம்.இ.சி.டிரஸ்ட்**
**தபால் பை எண்.6**
**மதுக்கரை (அஞ்சல்)**
**கோவை - 641 105.**

தாயாரோ, விஜயலக்ஷ்மியின் அம்மாவோ சொல்லியிருந்தால் ஒரு நீச்சல் வீரனையும், சதுரங்க வீராங்கனையையும் இவ்வுலகம் இனம் கண்டிருக்குமா?

முடியாதுதான். சரி, இவர்கள் மட்டும் எப்படித் தங்கள் குழந்தைகளின் தனித் திற மையை இனம் கண்டு, வெற்றி நிலைக்கு அவர்களைக் கொண்டு வந்தனர்? கேள்வி களை அவர்களிடமே கேட்டபோது....

**மாநில மற்றும் அகில இந்திய அளவில் நீச்சல் போட்டியில் பல பரிசுகளைப் பெற்ற குற்றாலீஸ்வர னின் தாயார் திருமதி சிவகாமி :**

"எங்கள் வீட்டில் இதற்குமுன் நீச்சல் வீரர் இல்லை. குற்றாலையும் அவனது அண்ண னையும் கோடை விடுமுறையில் பொழுது போக்கிற்காக உட்லண்ட்ஸில் நீச்சல் பயில அனுப்பி வைத்தோம். அங்கு குற்றாலின் ஈடு பாட்டையும் திறமையையும் பார்த்த பயிற்சி யாளர் அவனை மேலும் இதில் தேர்ச்சி பெறும் அளவிற்குப் பல பயிற்சியாளர்களிடம் அனுப்பி நீச்சல் பற்றிய அனைத்து நுணுக்கங் களையும் அறியச் செய்தார். நீச்சலில் குற்றா லுக்கு இருந்த ஆர்வத்தை உணர்ந்த நாங் கள் தடைசொல்லாமல் மாநில மற்றும் அகில இந்தியப் போட்டிகளில் அவனைப் பங்கு கொள்ள வைத்ததோடு மட்டுமல்லாமல் உலக அளவில் சாதனை புரிய மாநில அரசாங்கத் தின் உதவியையும் பெருமுயற்சிக்குப் பிறகு பெற்றோம்.

புரோட்டீன் மற்றும் கார்போஹைடிரேட் சக்தி அதிக அளவுள்ள உணவினை அடிக் கடி கொடுப்பதிலிருந்து, போட்டி நடக்கும் தருணம் அவன் டென்ஷன் அடையாமல் இருக்கும்வண்ணம் அனைத்தையும் பார்த்துப் பார்த்துச் செய்ய வேண்டிய பெரும் பொறுப்பு பெற்றோருடையதாகும். அப்படியும் 1994 இங்கிலீஷ் கால்வாயைக் கடக்க இருக்கும் போது குற்றாலீஸ்வரனுக்கு டென்ஷனில் காய்ச்சல் வந்துவிட, இவனைவிட இரண்டு மாதமே மூத்த வயதுடைய பையன் கடந்த தைப் பல முறை எடுத்துரைத்து சமாதானப் படுத்தி அனுப்பி வைத்ததைப் பெரிய சாதனை யாகக் கருதுகிறேன்."

12 வயதிற்குள் பல அவார்டுகளையும் பரிசுகளையும் தன்னுடைய நீச்சல் திறமைக் காகப் பெற்றிருக்கும் குற்றாலீஸ்வரன் படிப் பிலும் படுசுட்டியாம். "இருப்பினும் நீச்சல் துறையிலேயே உங்கள் மகன் தீவிரமாக ஈடுபட அனுமதிப்பீர்களா?" என்றும் நாம் கேட்டபோது,

"இவ்வகை விளையாட்டுகள் ஓரளவு அங்கீ காரம், புகழ் ஆகியவற்றைப் பெற்றுத் தந்தா லும் கிரிக்கெட், கால் பந்தாட்டம் போல பணத்தையும் செல்வாக்கையும் இதில் பெற முடியாது. அதுமட்டுமல்லாமல் பயிற்சி, உணவு, போட்டி நடக்கும் களத்திற்குப் போக வர செலவு என்று எங்கள் அந்தஸ்திற்கு மீறிச் செலவழித்தாலும் ஒரு சிறந்த நீச்சல் வீரனை உருவாக்க வேண்டும் என்கிற முனைப்பில் இவைகளை நாங்கள் பொருட் படுத்துவதில்லை. தற்போதைய அரசாங்கம் இம்மாதிரி விளையாட்டுத் துறையினரின் முன்னேற்றத்தில் அதிக அக்கறை காட்டு

---

***விட்டின் சிறிய ஹாலில் உள்ள பரண் மேல் உப யோகமில்லாத பாத்திரங்கள், அட்டைப் பெட்டிகளை வெளியே அசிங்கமாக தெரியாமலிருக்க சுவரின் இரு முனைகளிலும் ஆணி அடித்து கம்பி கட்டி அதில் பூப்போட்ட திரைச் சீலைகளால் மறைத்து விட்டால் வரவேற்பறை அழகாகத் தோன்றும்.***

***- வி. புவனேஸ்வரி***



கிறதுதான். இருந்தாலும் நீச்சல் துறையை மட்டும் நம்பி வாழ்க்கைப் பாதையை அமைத்துக் கொள்வது கடினம். ஆனால் இதில் பெற்ற சான்றிதழ்களும் பரிசுகளும் பிற்காலத்தில் அவனுக்கு விருப்பப்பட்ட துறையில் முன்னேற உதவும் என்பதால் தேர்வு சமயத்தில் நீச்சல் போட்டிகள் வைத்தாலும் பள்ளி முதல்வரிடம் சென்று அனுமதி பெற்றுவிடுவேன்" என்கிறார்.

**கிருஷ்ணசாமி மெட்ரிகுலேஷன் பள்ளியில் +2 படித்து வருபவரும், சதுரங்க ஆட்டத்தில் அகில இந்திய அளவில் முதல் இடத்தைப் பெற்றவருமான குமாரி விஜயலக்ஷ்மியின் அம்மா ராணி சுப்பையா :**

"எங்கள் குழந்தையை ஏதாவது துறையிலே சாதனையாளராக முன்னேற வைக்க வேண்டும் என்று முதலிலேயே திட்டமிட்டிருந்தோம். 'இண்டோர் கேம்ஸ்' ஆன சதுரங்கத்தில் இவளின் அதிக ஈடுபாட்டினைப் பார்த்த போது எங்களுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. சுமார் நாலரை வயதிலிருந்தே அவள் பேச்சு மூச்சு எல்லாமே சதுரங்கம்தான். அவளை மேலும் இவ்விளையாட்டில் ஊக்குவிக்கும் வகையில் செஸ் புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பது, மனோதத்துவரீதியில் எதிராளிகளின் செயல்பாட்டினைக் கணிப்பது, டென்ஷன் அடையாமல் அமைதியாக ஆடுவது எப்படி என்பதுவரை படிப்படியாகத் திட்டமிட்டு அவளைத் தயார் செய்தோம். காலை பல் தேய்ப்பதிலிருந்து இரவு படுக்கப் போகும்வரை எந்தப் பேச்சும் எங்கள் வீட்டில் செஸ் பற்றியதாகத்தான் இருக்கும். சதுரங்கத்தில் அவளது முன்னேற்றத்தைப் பற்றியே எங்கள் குறிக்கோள் அமைந்திருந்ததால் உறவினர் வீட்டு நல்லது கெட்டதிற்குக் கூட கலந்து கொள்ள முடியாமல் போய்விடுவதுண்டு. சதுரங்கத்தில் அவளது ஆர்வம் குறையாமல் இருக்கும் அளவிற்கு எங்களது செயல்கள் இருக்கும்வண்ணம் பார்த்துக் கொள்வோம்.

உணவு, டென்ஷன் அடையாமல் அவளைப் பார்த்துக் கொள்வது என் பொறுப்பானால், சதுரங்கத்தைப் பற்றிய அறிவுரை, எதிராளியின் மனோதத்துவத்தைப் பற்றிய நுணுக்கங்கள் என்று இவையெல்லாம் அவள் தந்தையின் பொறுப்பு. விஜி சதுரங்கத்தில் ஓரளவு பெயர் பெற்றதற்கு எங்களது திட்டமிட்ட செயல்களும் ஒரு காரணமாகும்.

பொதுவாக ஒவ்வொரு குழந்தையிடமும் ஒரு தனித்தன்மை, ஒரு குறிப்பிட்ட துறையில் அதீத ஆர்வம் நிச்சயமாக இருக்கும். இதனை அவர்களின் செயல், பேச்சுகள் மூலம் பெற்றோர்கள் எளிதில் கண்டு கொள்ளலாம். அத்துறையில் அவர்களை ஊக்குவிக்கும் வகையில் பெற்றோர்களின் செயல்கள் இருப்பின் பல அமுதாக்களும், குற்றாலீஸ்வரன்களும், விஜயலக்ஷ்மிகளும் உருவாவது மிக எளிதான காரியமாகிவிடும்.

**— கீதா மோஹன்**

---

*எண்ணெய், வனஸ்பதியில் தயாரித்த பண்டங்களைச் சாப்பிட்டாலே சிலருக்குக் கடுமையான நெஞ்சு எரிச்சல், ஏப்பம் உண்டாகும். தூக்கம் வராது. கவலையை விடுங்கள், கையில் சீரகம் இருக்கையிலே! ஒரு டீஸ்பூன் சீரகம், சுவைக்குச் சிறிது சர்க்கரை சேர்த்து, அரையும் குறையுமாக மென்று விழுங்குங்கள். தொடர்வது சுகமான நித்திரை. ஷுகர் பேஷண்டா, சர்க்கரைக்குப் பதில் உப்பு. ஹை பிளட் பிரஷரா, உப்பும் கூடாது. வெறும் சீரகம்தான். சீரகம் அது சீராக்கும் அகத்தை!*

*- வி. ராதாகிருஷ்ணன்*



# நவமணியும்




பொன், முத்து, பவழம், இரத்தினம், மரகதம், கோமேதகம், வைரம், வைடூரியம், புஷ்பராகம், மாணிக்கம் இவை அணிகலன்களாக அமைந்தவை. பூமியின் அடித்தளத்தில் பிற உலோகக் கலவைகளுடன் கனிமமாக பல ஆண்டுகளாக உயர் அழுத்தம் மற்றும் அதிவெப்பநிலைகளுக்கு உட்பட்டு பின்னர் பிரித்தெடுத்து பெறப்படுவது பொன். கடல் வாழ் உயிரினங்களில், சிப்பி போன்றவற்றின் கடினமான உடலுறைக்கும் அந்த உயிரினத்தின் மென்மையான உடற்பகுதிக்கும் இடையில் மணல் போன்ற கடினப் பருக்கை ஒன்று தற்செயலாக புகுந்துவிட அதனால் ஏற்படும் அரிப்பை நீக்கிக் கொள்ள பல ஆண்டுகளாக தொடர்ந்து அந்த உயிரினம் வெளிப்படுத்தும் ஒருவித கசிவின் இறுக்கமே முத்தாக அமைகிறது. கடல் வாழ் நுண்ணுயிர்கள் மற்றும் கடற்பொருட்கள் அலைகளினால் நிலத்தருகில் கடலின் ஒரு பகுதியில் தொடர்ந்து அலைக் கழிக்கப்பட்டு, திரண்டு விளைவது பவழம். பொன்னைப் போலவே நிலத்தின் அடித்தளத்தில் உயர் அழுத்தம், அதிவெப்ப நிலைகளுக்கு உட்பட்டு பரிணாமம் அடைந்த நிலக்கரியின் திரிபே வைரமாகும்.

நாகப்பாம்பு தன்னுடைய விஷத்தை வெளியிடாமல் தன்னுள்ளேயே தேக்கி பலகாலம் காத்து வந்தால் அதுவே மாணிக்கமாக திரண்டு விடும் என்று கருதப்படுகிறது. ஆனால், நாகப்பாம்பி லிருந்து அப்படியொரு பொருள் திரண்டு நமக்குக் கிடைக்கிறது என்பது நடைமுறை யில் இல்லை. சிகப்பு நிறம் கொண்டதாகக் கருதப்படும் மாணிக்கமும், அதே நிறம் கொண்ட இரத்தினமும் ஒன்றே என்றும் சிலர் கூறுவர்.

இரத்தினம், மரகதம், கோமேதகம், வைடூரியம், புஷ்ப ராகம் இவையனைத்தும் ஸ்படிகங்கள் என்றும் வகைப்படுத்திக் கூறப்படுகின்றன. இவை ரிஷிகேசம் போன்ற இமயமலைப் பகுதிகளில் அடர்ந்த காடுகளில் தாவரங்களுக்கிடையிலிருந்து கிடைப்பதாகக் கூறப்படுகிறது. இவற்றுள், இரத்தினம்-சிகப்பு, மரகதம்- பச்சை, கோமேதகம்- மஞ்சள், வைடூரியம்- நீலம், புஷ்பராகம்- இளஞ்சிகப்பு நிறங்களு டையனவாகக் கருதப்படுகின்றன.

இவை நீங்கலாக நிறமற்ற பளிங்கு போன்ற சுத்த ஸ்படிகமும் மற்றும் தேன் வண்ணம், பால் வண்ணம், மை வண்ணம், சாம்பல் வண்ணம் என்று பல நிறங்களிலும் வகைகளிலும் ஸ்படிகங்கள் உண்டு. (இவை யனைத்துமே உண்மையான பளிங்குகள் (ஸ்படிகங்கள்) தானா என்று எளிதில் கண்டு கொள்ள ஒரு வழியுண்டு. ஒரு இருட்டறை யில் ஒரு ஸ்படிகத்தை மற்றொரு ஸ்படிகத் துடன் தீக்குச்சி ஏற்றுவதுபோல்- உரசினால் அந்த ஸ்படிகம் என்ன நிற முடையதோ அந்த நிற ஒளிக்கதிர்கள் பளிச்சென்று வெளிப்படுவதைக் காணலாம். உதாரணமாக, சுத்த ஸ்படிகங்கள் இரண்டு உரசப்பட்டால் வெண்ணிறத் தீப்பொறிகளும், மரகதங்கள் உரசப்பட்டால் பச்சைப் பொறிகளும் வெளிப்படும் (கண்ணாடி, பிளாஸ்டிக், வெறுங் கற்கள் முதலியவற்றில் மற்றுமே. மெருகு ஏற்றப்பட்ட போலி ஸ்படிகங்களில் இப்படி உரசினால் ஒளிக்கதிர் வீசுவ தில்லை.)

மேலே கூறப்பட்ட பொன், நவமணிகள் அனைத்தும் பல காலமாக மிக அருமைப் பட்டு கட்டிக்காத்து சேமித்து வைத்த திரட்சிப் பொருள்களாகும். இவை எளிதில், நிறம், குணம், எடை, தன்மைகளில் மாறுதலின்றி பல காலம் அப்படியே நிலைத்து நிற்பவை. ஓரளவுக்குக் கடல் சங்குகளும் இப்படி திரட்சி, நிறம், குணம், எடை முதலியவற்றில் மாறாமல் நிலைத் திருப்பவையே. (பவழம் மட்டும் நீண்ட கால வட்டத்தில் சிறிது சிறிதாகக் காற்றில் கரைந்து, எடை, பருமன்களில் மட்டும் குறைவதைக் காணலாம்) இந்த மாறாத தன்மைகளே ஒரு வகையில் இந்த மணிகளுக்கு அதிக மதிப்பைத் தருவதாக அமைகிறது.

கனிமத்திலிருந்து பிரித்தெடுத்த சுத்த பொன்னுக்கு நிகராக எதையுமே கூற முடியாத அளவுக்கு அது மிக மிக உயர்ந்து விளங்குகிறது. கலப்பேதுமில்லாத

சுப்ரமணியம்!





## நவராத்திரி டிப்ஸ்

❖ சிலர் வீடுகளில் கொலுவிற்காக சிமெண்ட்டால் ஆன ரெடிமேட் குளம் செய்து வைத்திருப்பார்கள். கொலு முடிந்த உடன் அந்தக் குளத்தில் சிறிது மணலும், மண்ணும் கலந்து கொட்டி கொத்துமல்லி, வெந்தயம் இவற்றை மாற்றி, மாற்றி விதைத்து வீட்டு சமையலுக்குப் பயன்படுத்தலாம்.

❖ நவராத்திரி கொலு வைத்துள்ள அறையில் கொலு படிகட்டுக்குப் பக்கவாட்டுச் சுவர்களில் வாடாமல்லி, சாமந்திப் பூக்களை அங்கங்கே செலோ டேப்பால் ஒட்டி வைத்து அலங்கரித்தால் மிகவும் அழகாக இருக்கும். இரண்டு வகைப் பூக்களும் சீக்கிரம் வாடாது.

❖ கடலைப் பருப்பு, பட்டாணி, வெள்ளைக் கொத்துக் கடலை, பச்சைப் பயறு போன்ற சுண்டல்கள் செய்யும் போது அவற்றுடன் சிறிது இஞ்சியைத் தூவிப் போட்டு வதக்கினால் மிகவும் வாசனையுடன் சுவையாக இருக்கும். தினமும் சுண்டல் எல்லார் வீடுகளுக்கும் சென்று சாப்பிடுவதால் ஏற்படும் வயிற்றுக் கோளாறுகளுக்கும், ஜீரணத்திற்கும் இஞ்சி சிறந்தது.

—ஆர். ஜானகி.

---

பொன்னை கனகம், பசும்பொன், செம்பொன், பத்தரை மாற்றுத் தங்கம் என்றெல்லாம் கூறுகிறோம். கலப்பற்ற சுத்தப் பொன்னில் களிம்பு தோன்றுவதில்லை. இப்படி, மாற்றற்று, களிம்பு ஏறாத, நிலையான ஒளியுடன் விளங்குவதாலும் இதைவிட உயர்ந்த பொருள் ஒன்று இல்லை என்ற காரணத்தாலும் பொன்னை தனக்குவமையில்லாத இறைவனுக்கு ஓரளவுக்கு ஒப்பிட்டுக் கூறுகிறோம். எனினும், 'மாற்றறியாத செழும் பசும் பொன்னே' என்றுதான், பொன்னினும் 'இனிய,' மிக உயர்ந்தவனாகவே இறைவனைக் குறிக்கிறோம்.

மிக உயர்ந்த பொருளெனினும், பொன்னை எளிதில் உருக்கி, மிகச் சன்னமான கம்பியாகவோ, அல்லது மிக மெல்லியதான தகடாகவோ, மற்றும் வேண்டிய வடிவம், நுணுக்கங்களுடன் கூடிய அணிகலன்களாகவோ அமைக்க முடியும். எனவேதான், மிக உயர்ந்தவனாக இருந்தும், அன்பர்களுக்கு மிக எளியவனாக இருக்கும் இறைவனுக்கு உவமையாக பொன்னைக் கூறுகிறோம். எனினும், இன்ன தன்மையன் என்று கூறவே முடியாத இறைவனை 'பொன்னேயான' என்று குறிப்பதில்லை. பொன் போன்றவன், என்றுதான் உவமிக்க முடியும். 'பொன்னார் மேனியனே' என்றுதான் சொல்ல முடியும்.

சிதம்பரம் என்று பொதுவாகச் சொல்லும்போது அது தில்லை என்ற ஊரையே குறிக்கும். இத்தில்லையிலுள்ள கோயிலுக்குச் சிற்சபை அல்லது சிற்றம்பலம் அல்லது சிதம்பரம் என்று பெயர்.

நடராஜர் தாண்டவமூர்த்தமாக விளங்கும் கருவறை மேடை, பொற்சபை, கனக சபை, பொன்னம்பலம் என்று கூறப்படுகிறது. பொற் சபையின் மேல் அமைந்துள்ள கூரை நாம் சராசரி ஒரு தினத்தில் சுவாசிக்கும் எண்ணிக்கையான 21,600 இலக்கம் கொண்ட பொன் ஓடுகளால் வேயப்பட்டிருக்கிறது. அதே எண்ணிக்கையிலான பொன் ஆணிகளும் பொருத்தப்பட்டுள்ளன.

இப்படி நம் அன்றாட வாழ்க்கை நடைமுறையை ஒட்டியே கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. அக்கோயில்கள் இறைவனது உன்னதமான தன்மைகளை விளக்கும் வண்ணம் பொன்னாலான கருவறை, விக்கிரகம், ஆபரணங்கள் மற்றும் நவமணிகளாலான அணிகலன்கள், ஸ்படிகங்களில் வடிக்கப் பெற்ற இலிங்கம் ஆகியவை கொண்டதாக அமைந்துள்ள தன்மை வியக்கத்தக்கது. இறைவனது திருவடிகளை பொற் பாதங்களென்றும், அவன் மேற்கொள்ளும் நடனம் பொற்பதக் கூற்று என்றும், அவனுக்கு உபசாரமாக அமைந்த அபிஷேக நீராட்டுக்

சூரிய தசாங்கம் பொற்சுண்ணம் என்றும், அவனை அமரச் செய்யும் ஊசல் பொன்னூசல் என்றும் குறிக்கப்படுவதின் கருத்தாழம் சிந்திக்க வேண்டும்.

பொன்னைத் தவிர நவமணிகளையும், சிறப்பாக நாகத்தினிடமிருந்து, பெறுதற்கரிய மாணிக்கத்தையும் கொண்டு இறைவனை உவமித்துக் கூறுவதும் உண்டு. "மன்னே மாமணியே மழபாடியுள் மாணிக்கமே" எனும்போது தன் குணங்களில் மாறாது நிலை பெற்றுள்ள (மன்னே), மாமணியே என்று பாடிய சுந்தரர் மாணிக்கமே என் றல்லவா இறைவனை விளக்க முற்படுகிறார்!

இனி, மற்ற சில மணிகளைப் பார்ப்போம். வைரம், சூரிய ஒளி அல்லது ஒளி மிக்க விளக்கின் முன் மிகவும் பிரகாசமாக ஒளிர் விட்டுக் காணப்பெறும். அடிப்படை கருமை நிறத்திலேயே பெருமளவு காணப்படும் கரி வகையினின்றும் பிறந்திருந்தும், வைரம் மிகவும் ஒளிக் கதிர்களை வண்ண வண்ணமாக பிரதிபலிக்கும் ஆற்றல் பெற்றது. இந்தத் தன்மை 'இருளிலிருந்து ஒளி பிறந்தது' என்ற கூற்றினை நமக்கு நினைவு கூர்வதாக அமைகிறது. எப்பொழுது? சூரியன் முன் வைக்கும் போது! தனக்கென அதற்கு ஒளி கிடையாது. ஆன்ம உணர்வும் இறைவனோடு சம்பந்தப்பட்டால்தான் உணரும் சக்தி பெறும்.

கடினத் தன்மைக்கு வைரத்துக்கு மேலான எந்தப் பொருளையும் கூற முடியாது. வைரத்தைக் கொண்டு வேறு எந்தப் பொருளையும் தேய்க்கவோ, கிழிவிடவோ, அறுக்கவோ முடியும். எனினும் அதை மிக அதிக வெப்பத்திலிட்டால் எரிந்து கரியாகவே மாறிவிடும்!

சுத்த ஸ்படிகம் எந்தப் பொருளின் பக்கலில் வைக்கப்படுகிறதோ அந்தப் பொருளின் வண்ணத்தைப் பிரதிபலித்து, தானே அவ்வண்ணமாக தோற்றமளிக்கும். மரகதம், நீலம், இரத்தினம் இவையும் தம் பக்கலிலுள்ள பொருள்களின் வண்ணத்துடன் முறையே தமக்குரிய பச்சை, நீலம், சிகப்பு வண்ணத்துடன் கலந்து வழங்குவது குறிப்பிடத்தக்கது.

பொன்னைப் போலவே, முத்து முதலிய நவமணிகளும் எளிதில் நிறம், குணம், நிலை, முதலியன மாறாது பலகாலும் நீடித்திருப்பது அவற்றின் தனிச் சிறப்பு என்று மேலே பார்த்தோம். பொன்னை வேதித்து(புடமிட்டு) நீறாக்கி (தங்க பஸ்மம் ஆக்கி) ஒரு சிறந்த மருந்தாக பயன்படுத்துகிறோம். உடல் வளத்துக்கு மட்டுமின்றி, காசம், நுரையீரல் மற்றும் பிற சுவாச உறுப்புகளின் வியாதிகளை குணப்படுத்தும் ஆற்றல் மிக்க ஔஷதமாக அதை பயன் படுத்துகிறோம். இதே போல், முத்து பஸ்மம், பவழ பஸ்மம் முதலியவைகளும் சிறந்த மருந்துகளாக பயன்படுகின்றன.

பொன், மற்றும் நவமணிகளை நாம் அணிகலன்களாக அணிவது அலங்காரத்துக்கு மட்டுமல்ல என்பதை நினைவு கூர வேண்டும். அவை நமது உடலுக்கு ஒட்டிய வண்ணம் சேர்ப்பதாலேயே நமக்கு உடல் வளம், வனப்பு பெருகுவதுடன் அவை நம் உடலுறுப்புகளில் நரம்புகளைத் துல்லியமாக தூண்டி, துடிப்புடனும், ஆற்றலுடனும் செயல்பட உதவுகின்றன. பொதுவாக கழுத்து, மார்புப் பாகங்களில் இவ்வணிகலன்கள் அணிவதால் பிராணன், இரத்தம் மற்றும் இவ்விடங்களில் அமைந்துள்ள அநாஹத, விசுத்தி, சக்கரங்களும் சீருடன் செயல்பட பெரிதும் உதவுகின்றன. தலையில் அணியப்பெறும் ஜடை பில்லை, சந்திர சூரியபில்லைகள், கொண்டை பில்லை, பாவாடைபொட்டு முதலியன மூளை, நரம்பு மண்டலங்களுடன் சஹஸ்ராதார, ஆக்ஞா சக்கரங்களையும் திறம்பட செயல் படுத்த உதவுகின்றன. கம்மல், மாட்டல் போன்ற காதணிகள், மூக்குத்தி, புல்லாக்கு முதலியவை அவற்றிற்குரிய உறுப்புகளை நன்றாக இயக்க உதவுவதுடன், நல்ல சுவாசம், நல்ல பேச்சு, நல்ல செய்தி, முதலிய

---

ஒரு அழகான பட்டுப் புடைவையின் தலைப்புப் பாகத்தை கொலுப்படிக்கு மேல் 'பேக் ட்ராப்' போல தொங்க விட்டால் உங்கள் கொலுவுக்குக் கிடைக்கும் 'செட் அப்'பே தனிதான்!

-உஷா



# கரூர் P.R.C. கார்மெண்ட்ஸாரின்

## புதுமை திட்டம் நெ. 3ன்

## "புதிய இணைப்புத் திட்டம்"

1. "இப்புதிய இணைப்புத் திட்டத்தில்" ஒரே ஒரு முறை செலுத்தப்படும் துகை ரூ. 1500/-
2. இத்துகைக்கு, ஏழாவது ஆண்டு முடிவில் ரொக்கமாக திரும்பப் பெறும் துகை ரூ. 4600/- இத்துகைக்கு எங்கள் நிறுவனத்தின் Repayment Assured Card உடனடியாக வழங்கப்படும்.
3. ஏழு ஆண்டுகளில் பரிசுப் பொருட்களாகப் பெறும் துகையின் மதிப்பு ரூ. 2940/- ஆக மொத்தம் நீங்கள் இத்திட்டத்தின் மூலம் பெறும் துகை ரூ. 7,540/ (ரூ. 4600 + ரூ. 2940 = ரூ. 7540/-)

### திட்ட விபரம்

1. ரூ. 1500- ஐ D.D. அல்லது M.O. மூலம் "P.R.C. கார்மெண்ட்ஸ்" என்ற எங்கள் நிறுவனத்திற்கு செலுத்துங்கள்.
2. பணம் கிடைக்கப் பெற்றவுடன் முதல் தவணையாக, ரூ. 420/-மதிப்புள்ள கீழ்கண்ட பொருட்களில் உங்களின் விருப்பத்திற்கும், தேவைக்கும் ஏற்றவகையில், எங்கள் செலவில் பதிவுப்பார்சல் அல்லது கூரியர் சர்வீஸ் மூலம் உங்கள் விலாசத்திற்கு அனுப்பி வைக்கப்படும் மீதியுள்ள ஆறுதவணைகளும் இதே போன்று ஆண்டுக்கு ஒரு முறை வீதம் அனுப்பி வைக்கப்படும்.

### பொருட்களின் விபரம்

**பெண்களுக்கு**

1. சுடிதார் செட் } எல்லா வயதினருக்கும்
2. நைட்டீஸ் } ஏற்ற அளவுகளில்
3. சிம்மீஸ்
4. உள்பாவாடைகள்

**ஆண்களுக்கு**

5. பாலியஸ்டர் வாயில் வேஷ்டிகள் (8முழம்)
6. கைலிகள் (2-00 மீட்டர்)
7. பனியன்கள் மற்றும் T. Shirts

குறிப்பு :

1. இதற்கான விலை மதிப்பு பட்டியல் அவ்வப்பொழுது அனுப்பி வைக்கப்படும்.
2. எங்கள் நிறுவனம் அளிக்கும் அனைத்து பரிசுப்பொருட்களும் தரமிக்கவை ஆகும்.
3. புதுமைத்திட்டம் நெ.3ல் (30.06.1995) முடிய பயன் பெற்றுவரும் உறுப்பினர்களின் எண்ணிக்கை : 3274

பங்கு கொள்வீர்! பயன் பெறுவீர்!!

பணம் அனுப்ப வேண்டிய முகவரி

## P.R.C. கார்மெண்ட்ஸ்

26, பிரதட்சணம் ரோடு, 'ஏ' பிளாட், கரூர் - 639 002.
திருச்சி மாவட்டம், போன் : 21946

எங்கள் நிறுவனம் 1984 -ல் பாரதப் பிரதமரின் படித்த இளைஞர்களுக்கான சுயவேலைவாய்ப்பு திட்டத்தின் கீழ் கரூர் கிளை **கனரா வங்கியின்** பொருளாதார உதவியுடன் துவக்கப்பட்டு செயல்பட்டு வருகிறது.

குறிப்பு :

- ★ நீங்கள் செலுத்தும் துகை முழுமையாக 68 ஆண்டுகளாக மக்கள் சேவையில் ஈடுபட்டிருக்கும் கரூர் 'தி லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிட்' ல் டெபாசிட் செய்யப்படும்.
- ★ மேற்படி டெபாசிட் துகையிலிருந்து எங்கள் நிறுவனத்தின் நடைமுறை மூலதனத்திற்காக (Working Capital) வங்கியிலிருந்து கடன் வசதி பெற்றுக்கொள்ளப்படும்.
- ★ இத்திட்டத்தில் இந்தியாவில் உள்ள அனைவரும் பங்கு பெறலாம் வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்கள் இத்திட்டத்தில் பங்குபெறலாம் பரிசு பொருட்கள் மற்றும் இதர கடித தொடர்புகள் இந்தியாவில் உள்ள விலாசத்திற்கு மட்டுமே அனுப்பி வைக்கப்படும் D.D. கரூரில் மாற்றத்தக்க வகையில் அனுப்பவும்.

# கரூர் P.R.C. கார்மெண்ட்ஸாரின்

## புதுமை திட்டம் நெ. 3ன்

## "புதிய இணைப்புத் திட்டம்"

### GIFT MATERIALS - PRESENT PRICE WORTH - PER PIECE

ITEM NO. :

1. CHUDIDHAR SET : (Suitable for woman above 15 year of age)
   a. Rs. 350.00 per set - 1st Quality
   b. Rs. 275.00 - do - 2nd Quality

2. NIGHTIES : Plain and Printed Materials :
   Size : 80 to 95 Cms. Rs. 65.00 105 to 120 Cms. Rs. 85.00 and 130 to 140 Cms. Rs. 120.00

3. SHIMMIES : Cotton Materials :

| | Size : 60 to 65 Cms. Hip : 65 Cms. | 70 to 75 Cms. Hip : 70 Cms. | 80 to 90 Cms. Hip : 75 Cms. | 95 to 105 Cms. Hip : 90 Cms. |
|---|---|---|---|---|
| a. 1st Qlty. | Rs. 37.00 | Rs. 45.00 | Rs. 50.00 | Rs. 55.00 |
| b. 2nd Qlty. | Rs. 25.00 | Rs. 30.00 | Rs. 35.00 | Rs. 40.00 |

4. LILLY INSKIRTS :

| | Normal Size Hip : 88 Cms. | Free Size Hip : 102 Cms. | Available heights |
|---|---|---|---|
| a. Lilly Delux | Rs. 55.00 | Rs. 65.00 | 90,95,100 &105 Cms |
| b. Lilly | Rs. 42.00 | Rs. 50.00 | 90,95,100 & 105 Cms |

5. DHOTHIES : (3.70 Mtrs) : (Product of M/s. Premier Mills. Coimbatore) :
   a. PREM KING (Polyester) : Rs. 165.00 per single
   b. CHAKKARAVARTHY (Chiffon) Rs. 185.00 -do-
   c. SURYAVARSHI - do - Rs. 140.00 -do-

6. LUNGIES (2 Metres) :
   a. 1st Quality : Rs. 85.00 (b) 2nd Qlty : Rs. 60.00, and (c) 3rd Qlty Rs. 55.00

7. BANIANS (Product of M/s. The Karur knitting Co., karur) :

| a. PRESTIGE - Super Fine - ISI : | 75-80 Cms. | 85-90 Cms. | 95-100 Cms |
|---|---|---|---|
| RN - Sleeve - less | Rs. 33.00 | Rs. 35.00 | Rs. 38.00 |
| RNS - With Sleeves | Rs. 36.00 | Rs. 38.00 | Rs. 41.00 |

| b. SAFFIRE (for CHILDREN) | 45-55 Cms. | 60-70 Cms. |
|---|---|---|
| RN - Sleeve - less | Rs. 15.00 | Rs. 18.00 |
| RNS - With Sleeves | Rs. 16.00 | Rs. 20.00 |

   c. T. SHIRTS : TIK - PIK :
   Medium,Large & Extra Large (Average Price) Rs. 180.00 Per piece.

குறிப்பு :

1. மேலே குறிப்பிடப்பட்டுள்ள Item No. 1 - லிருந்து 4 - வரை தங்களுக்கு தேவைப்படும் சரியான அளவுகளை குறிப்பிட்டு எழுதினால் அதன் படி தயாரித்து அனுப்பி வைக்கப்படும்.
2. பரிசுப்பொருட்களின் மதிப்புத்துகை ரூ. 420/-க்குள் இதில் குறிப்பிடப்பட்டுள்ள பொருட்களில் எது வேண்டுமானாலும் பெற்றுக்கொள்ளலாம். ரூ. 420/-க்கு மேற்பட்ட துகைக்கு வித்தியாச துகை செலுத்தி பொருட்களை பெற்றுக்கொள்ளலாம்.
3. இந்த பொருட்களின் மதிப்புத்துகை மார்கெட் விலையை அனுசரித்து மாறுதலுக்கு உட்பட்டது.



ஒரு தட்டில் க்ரீஸ்ஸால் கோலம் போட்டு அதன் மீது கலர் பொடிகளைத் தூவி சிறிது நேரம் கழித்து தட்டோரத்தில் ஓரிரு ஸ்பூன் களாக தண்ணீர் விட்டு வரவும். (எச்சரிக்கை! நடுவில் கோலத்தின் மேல் விட்டால் கோலம் கலைந்து விடும்.) தண்ணீருக்கடியில் கலையாத கோலம் ரெடி!

— உஷா

வற்றை மட்டும் அளித்து தீய சக்திகளை தடுத்து விடவும் உதவுகின்றன. இந்தச் செய் தியை அவ்வளவு எளிதாக நாம் ஏற்றுக் கொள்ளுவது கடினமெனினும் அதுதான் உண்மை.

இவை தவிர, உருத்திராக்ஷம், யானையின் தந்தம் முதலியவைகளையும் அணிகலன் களாக அணிகிறோம். உருத்திராக்ஷம் (சிவமணி), சிவச்சின்னமாக விளங்குவது டன், உடலுக்கு நன்மை தரும் அணிகலன் என்பது குறிப்பிடத் தக்கது. உருத்திராக்ஷ மும், தந்தமும், மணிகளைப் போலவே பலகாலம் மாறாத தன்மைகள் பெற்றுள்ளன என்பதையும் நினைவில் கொள்ள வேண் டும்.

இப்படி, புறத்தேயன்றி நம்முள்ளேயும் பல மணிகள் உள்ளன. இவைகளில், நாம் உண்ணும் உணவிலிருந்தும் மற்றும் சுவாசிக் கும் பிராணன், விண்வெளியிலிருந்து பெறப் படும் சூரிய ஒளி, பிரபஞ்ச சக்திகள் இவை களிலிருந்தும் வெவ்வேறு வகையான சக்திகள் பெறப்பட்டு தேக்க நிலையில் சேமித்து வைக்கப்படுகின்றன. இச்சக்தி கேந்திரங்களை சக்கரங்கள் என்று கூறுவர். இவற்றுள் முக்கியமானவை ஆறு. இவற்றை ஆதாரச் சக்கரங்கள் என்பர். இவை, மூலா தாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநா ஹத, விஷுத்தி, ஆக்ஞை என்பன. இவை யன்றி நம்முள் எண்ணிறந்த பிற சக்கரங்கள் உள்ளன. சுருக்கமாகச் சொன்னால், உட லின் ஒவ்வொரு உறுப்பும் ஒரு சக்கர மாகவே, ஒரு ஊற்றுக் கண்ணாகவே, திகழ் கிறது. மண்ணீரலில் இன்சுலின், குடலில் என்ஸைம்கள், நரம்புகளில் ப்ரோடினேஸ், கண்களில் லாக்ரிமோஸ், நாவில் சாலைவா, இரத்தத்தில் ஹிமோகுளோபின், ஆண், பெண் ஜனன உறுப்புகளில் விந்து, சுரோணி தம் என பலவகை சக்திப் பொருட்கள் சேமித்து வைக்கப்படுகின்றன. ஆயினும், இவையனைத்துமே பெரும்பாலும் அன்றாட உலக வாழ்க்கைக்குரிய செயல்பாட்டுத் தேவைக்காகவே செலவிடப் படுகின்றன. எனவேதான் அவற்றை நாம் மணிகளென்று கூறுவதில்லை.

மனம் உள்முகப்பட்டு, தன்னையும், தனக்காதாரத் தலைவனையும் மட்டும் சிந் திக்கும்போதும் மற்றும் தியான நிலையி லிருக்கும்போதும் வெவ்வேறு சக்கரங்களில் உள்ள சக்திகள் செலவினம் குறைந்து, சேமித்து வைக்கப்பட்டு அதி உன்னதமான நிலைகளுக்கு நம்மை கொண்டு செல்லும். முக்கியமாக நம்மை இறையநுபவத்துக்கு ஏற்ற வகையில் பண்படுத்தும் மிக உயர்ந்த தாகக்கருதப்படும் சக்கரம் உச்சிக்கு மேலுள்ள சஹஸ்ராதாரம் ஆகும். இதன் செயல்பாடுகளை புரிந்து கொள்வது எளிதல்ல. ஆயினும், புரிந்து கொண்டு, செயல் முறைக்கு அவைகளின் ஆக்கங்களை பயன்படுத்தினால் பல நன்மைகள் கை கூடும்.

உண்மையில் ஒவ்வொரு ஆண் மகனும் தனக்குரிய இல்லாளுடன் இணைந்து இல்லறம் நடத்தும்போது, புறத்தே பொன், நவமணிகள் மற்றும் தமக்குள்ளே அமைந் துள்ள ஆதார சக்கரங்கள் எனும் மணி களின் ஆற்றல்களுடன் சேர்ந்தே இருவரும் பயனடைகிறார்கள். டெஸ்டோஸ்டி ரான் எனும் சுரப்பி ஆண்களின் முகம் தாடி, மார்பு, கைகால்கள் முதலிய பாகங் களில் முடி வளரப் பெற்று அவர்கட்குரிய கடினத் தன்மையான குணங்கள் மேலோங்கி செயல்பட உதவுகிறது. ஈஸ்ட்ர ஜன் போன்ற சுரப்புகளால் பெண்களின் உடலமைப்புகள் பொலிவுடன் விளங்கு கின்றன. ஆக ஆண், பெண் இருபாலரும் அவரவருக்குரிய கடின, மென்மையான குணங்கள் வெளிப்பட அவரவர்களிலேயே உரிய உறுப்புகளின் செயல்பாடு உண்டு. இருப்பினும், பொன், நவமணிகள் போன் றவை அவற்றை நல்ல முறையில் ஊக்கு

விக்க பெரிதும், உதவுகின்றன என்பது தெளிவுபடும்.

சக்கரங்களின் சக்திகளை புறத்தே செல விடாது, கட்டிக் காத்து உள்முகப்படுத்தும் போது மனம் கட்டுப்பட்டு, அலைவு தொழிந்து, ஒரு முகப்பட்டு உயரிய பலனை அளிக்கும். இப்படி பண்பட்ட, சக்தி வாய்ந்த மனதை நாம் மனோன்மணி என் கிறோம். அது போலவே பல எண்ணங்கள் சிந்தையிலிருந்து வெளிப்பட்டு அலைவதைத் தவிர்த்து கட்டுப்படுத்தப்பட்ட சிந்தையினை சிந்தாமணி என்று கூறுவோம். முதிர்ந்த ஞானம் ஒருவருக்கு உண்டானால் அதை ஞானமணி எனலாம். உடலின் உன்னத மான இடம் சிகை. சஹஸ்ராதார சக்கரஸ் தானம். இது சிறந்து விளங்கினால் சிகாமணி என்கிறோம்.

மூங்கிலின் கணுக்களில் திரட்சியாகப் பெறுவது கழைமுத்து. இவை தவிர புயல் முத்து (பனித்துளி அல்லது பனிக்கட்டி), கரி முத்து (யானையின் தந்தம் அல்லது அதன் கந்துகமதத்தின் திரட்சி), கடிமுத்து (கரும்பு போன்றவற்றின் கணு), வளைமுத்து (சங்கு), கடல் முத்து (நத்தையிலிருந்து கிடைக்கும் நல்முத்து), அரவு எனும் அழல்முத்து, பாம்பிலிருந்து பெறப்படும் தீ வண்ணம் போன்ற செந்நிற மாணிக்கம் என்று ஏழு வகை முத்துக்கள் பற்றி அருணகிரிநாதர் தம் முடைய ஸ்ரீமுஷ்ண திருப்புகழில் குறித் துள்ளார்.

பொன் மற்றும் மணி முதலியவற்றை மாலைகளாகத் தொடுத்து அணிகலன்களாக மட்டுமின்றி ஜப மாலைகளாகவும் பயன் படுத்துகிறோம்.

நாகப் பாம்பினிடமிருந்து பெறப்படும் மணி இரத்தினம் என்று கூறப்படினும் அது உறங்கிக் கிடக்கும் பாம்பின் வடிவமைந்த குண்டலினி சக்தியாகும். யோகப் பயிற்சி யினால் பிராண சக்தியின் துணை கொண்டு சுஷும்னா வழி மேலெழுப்பப்பட்டு மேலை வெளியாகிய சஹஸ்ராதார சக்கரத்தில் செயல்படுத்தப்படும் சக்தி. சிவனை (சிவத்தை) தியானத்திலிருத்தி இந்த (குண் டலினி) சக்தியை நாம் பெறுகிறோம் என் பதை அருணகிரிநாதர் 'நாகமணிகின்ற நாத நிலை கண்டு நாடியதில் நின்று தொழு கேனே' என்று தம் திருப்புகழில் பாடுவார்.

இப்படி, மணிகள் தடத்த பொருள்களாக மட்டுமின்றி, நுட்பமான மனம், சித்தம், போக சக்திகளாகவும் திகழ்கின்றதை நாம் கண்டோம். கம்பீரமான நாதம் எழுப்பக் கூடியது **கண்டாமணி**. மேலும் ஒருவர் சொல்லும் பயனுள்ள சொற்கள், ஆழ் கருத்துக் களடங்கிய சொற்கள், இறைவனை பற்றிய பாமாலைகளாலான சொற்கள் முதலியவை மணிகளாகவே கருதப்படுகின் றன. மும்மணிக்கோவை, நான்மணி மாலை முதலியன இவற்றிற்கு உதாரணங்களாகும். உருக்கமானதும், மிக உயர்ந்ததெனவும் கருதப்படும் திருவாசகத்தை வழங்கிய திருவாதவூரரை நாம் மணிவாசகர் அல்லது மாணிக்க வாசகர் என்றே அழைக்கிறோம். **ஞானமணி, கவிமணி, காவிய மணி, அருண் மணி** என்ற சொற்களின் அமைப்புகள் இக்கருத்தை மேலும் தெளிவு படுத்தும்.

தேவர்களும் அசுரர்களும் திருப்பாற் கடலில், மேரு மலையை மத்தாகவும், இறைவனே கச்சபம் (கூர்ம)மாகவும் இருந்து, தன் கடினமான முதுகில் தாங்க, வாசுகி எனும் பாம்பை கயிறாகவுமிட்டு கடைய, அமுதமும், விஷமும் வெளிப்படுகின்றன. இவ்விஷத்தை சிவன் எடுத்து உண்ண, அது அவருடைய கண்டத்தில் நிறுத்தப் பெற்று அதனால் அது (கண்டம்) நீல கண்டமாகி விடுகிறது. அதுவே நீல மணி! இது புராணக் கதை. இதன் அடிப்படை தத்துவமாவது: (கச்சபம்) கூர்மம் ஆமையாக உவமிக்கப் படும். மூலாதாரத்தை நிலையாக வைத்து, அதன் மேல் சுஷும்னா எனும் முதுகுத்தண்டை மேருமலையாக உருவகப்

பொம்மைகளை கொலு வைத்த பின்னும் ஓரிரு உடையாத பொம்மைகளைத் தனியாக வைத்துக் கொள்ளுங்கள். கொலு பார்க்க வந்து விட்டு "அந்த பொம்மையை எடுத்துத் தா..." என்று அழுது அடம் பிடிக்கும் வாண்டுகளின் கைகளில் கொடுத்து சமாதானம் செய்ய இவை உதவும்.

– உஷா



டிபனுக்குப் பூரி செய்திருந்தேன். நிறைய மீந்து விட்டது. மறுநாளும் குழந்தைகள் அதே டிபன் வேண்டாம் என்று தகராறு செய்தனர். யோசித்தேன். அவர்கள் விளையாடச் சென்ற சமயம் எல்லாப் பூரிகளையும் மிக்சியில் போட்டு நைசாக அரைத்து (பூரிகள் கரகரப்பாக இருந்தன) சர்க்கரையும் ஒரு பெரிய கப் எடுத்து நைசாக அரைத்து இரண்டையும் ஒன்றாகக் கலந்து முந்திரி பருப்பு வறுத்துப் போட்டு, ஏலக்காயும் பொடி செய்து போட்டு ஒரு கரண்டி நெய்யை நன்றாகச் சூட வைத்து ஊற்றி சிறு சிறு உருண்டைகளாகப் பிடித்து டேபிளில் அழகாக வைத்து விட்டேன். குழந்தைகள் உள்ளே வந்தவுடன் 'ஆஹா லட்டு! என்று ஒரே குஷியுடன் சாப்பிட பத்து நிமிடங்களில் தட்டு காலி! இது பேரு என்னம்மா? இவ்வளவு சுவையாய் இருக்கே?'' என்று துளைத்து எடுத்து விட்டனர். இதுவா ''ஜில்ஜில் லாடு'' என்று ஒரு பெயரைச் சொல்லி சமாளித்தேன். பூரிலாடு என்றால் ''பூ இவ்வளவுதானா?'' என்று அலட்சியமாய்ச் சாப்பிட மாட்டார்களே!



— தங்கம்

பொன், முத்து, பவழம், ஸ்படிகங்கள், உருத்திராக்ஷம் போன்ற மணிகள், நம் ஐம்பொறிகள் மற்றும் அவற்றிற்கான மணிகள், மனம், புத்தி, சித்த மணிகள், ஆதாரச் சக்கரமணிகள், கலை, காவிய மணிகள், ஆடை, ஆபரணங்கள் முதலியவற்றை சிந்தித்தோம். இனி, தேவதாம்சங்களுக்கெல்லாம் மேலானதாகக் கருதப்படுவது பிரஹ்மம் என்பது வேத வழிக் கருத்து. நன்மையையே தரவல்ல இறைவனது தன்மையை சு+பிரஹ்மம் அல்லது சுப்ரஹமம் எனலாம். அதுவே மேலானதாக விளங்குகின்றது என்ற கருத்தில் சுப்ரஹ்மண்யம் என ஆகிறது. ஆக, **சுப்ரஹ்மணியம்** எனும் மிக உயர்ந்த தத்துவத்துக்குமேல எதுவுமேயில்லை. இங்கே சுப்ரஹ்மண்யம் என்பது சுப்ரஹ்மண்யம் என நாம் குறிக்கும் முருகப் பெருமானின் மேலானஞானம் மற்றும் அருள் சக்திகளுக்கான குணம், பண்பு, தன்மைகளே யாகும். சிவம் என்பது சிவனுக்குரிய தன்மை; அதுபோல சுப்ரஹ்மண்யம் என்பது சுப்ரஹ்மண்யனின் உயர்ந்த தன்மை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். இந்த அரிய தெய்வ சக்தியை,

"சுப்ரஹ்மண்யம் சுப்ரஹ்மண்யம் சிவ சிவ சிவ சிவ சுப்ரஹ்மண்யம்" என்று சதா தியானம் செய்து உய்வோமாக!

படுத்தின பிங்கலை, இடகலைகள் கொண்டு, (தேவர்கள், அசுரர்கள்) தம் நடு நாடியினை சுத்தி செய்தி (வாசுகி) இயக்க, தீக்கருமங்களின் செயல்பாடு(விஷம்) மற்றும் நற்கருமங்களின் நலன்கள் (அம்ருதம்) வெளிப்பட அதில் விஷத்தன்மைகளை இறைவனே ஏற்றுக் கொண்டு நற்கரும பலன்களை ஆன்மாக்களுக்கு உதவுகிறான் என்பதாகும்.

பண்பிற் சிறந்த பெரியவர்கள் தம் 60,70,80,90 வயதுகளை எய்திய போது அவர்களுக்குப் **பொன்விழா, முத்து விழா, பவழ விழா, மணிவிழா** என்று விழா எடுத்து அவர்களது நற்பண்புகளை, செயலாக்கங்களை நினைவுகூர்ந்து அவரது நல்லாசியைப் பெறுவது தமிழர்களின் நற்பண்பாடு ஆகும்.

கோயிலிலுள்ள விமானம், விக்கிரங்கள் முதற்கொண்டு, உபயோகத்திலுள்ள பூஜைக்குரிய பாத்திரங்கள், ஆடை, ஆபரணங்கள், முதலிய யாவையும் உயர்ந்த பொருட்களால் ஆனவையாக இருத்தல் வேண்டும். பொன், மணிகள், சங்கு, உருத்திராக்ஷம், பட்டு, பருத்தி, நார்மடி முதலியவை உயர்ந்தனவாகவே இருக்க வேண்டும். நிலையாக நின்று விளங்கக் கூடிய பொன், ஸ்படிகம் ஆகியவற்றால் விக்கிரகங்கள் அமைக்கப்படுகின்றன. இதே கருத்திலேயே பல ஆயிரம் ஆண்டுகளாக இறுகியிருந்த கருங்கல், சலவைக்கல் போன்றவற்றிலும் விக்கிரகங்கள் மற்றும் கோயில் அமைப்புகளும் கூட செய்யப்படுகின்றன.

**- டாக்டர் எஸ். ஆர். ஜெயவேலு**



# அன்னையின் அரவணைப்பில் குழந்தை வளரும்...
# அன்னை பூமியின் அரவணைப்பில் உங்கள் பணம் வளரும்.

அனுபவ் குட் எர்த் யூனிட்ஸ்

**அறிமுகம்**

**சிறப்பம்சங்கள்**

- மிக குறைந்தபட்ச, ரூ. 3,000/- முதலீடு.
- வருடத்திற்கு, வரிவிலக்குடன் கூடிய உத்தரவாதமான 20% விவசாய வருமானம் - 5 வருடங்களுக்கு, பின்தேதியிட்ட 'செக்'குகளாக.
- மொத்த முதலீடும் 5 வருடங்களுக்குப் பிறகு, பின்தேதியிட்ட 'செக்'காகத் திருப்பித் தரப்படும்.
- 20 வருடங்களுக்குப் பிறகு, குறைந்தபட்சமாக ரூ. 75,000/- மதிப்பீடு செய்யப்பட்ட 0.85 க்யூபிக் மீட்டர் (30 க. அடி) தேக்குமரம் போனஸ்.

**200% வருமானம் பின்தேதியிட்ட செக்குகளாக**

ரூ. 3,000 கொடுத்து அனுபவ் குட் எர்த் யூனிட் ஒன்றில் முதலீடு செய்தால், 27.9 ச.மீ. (300 ச. அடி) பரப்புள்ள நிலம் ஐந்தாண்டுகளுக்கு உங்களுக்குக் குத்தகைக்கு தரப்படும். இந்நிலத்தில் பயிராகும் பொருள்கள் மூலம் உத்தரவாதமான 20% வருட வருமானம் உங்களுக்குக் கிடைக்கும் - ரூ. 600/- வீதம் ஐந்து பின்தேதியிட்ட செக்குகளாக உங்கள் முதலீடான 3,000 ரூபாயும் பின் தேதியிட்ட செக்காகத் திரும்பக் கிடைக்கும்.

**100% வரிவிலக்கு பெறும் விவசாய வருமானம்**

பழங்களும், காய்கறிகளும் பயிரிட உங்கள் குத்தகை நிலம் பயன்படுத்தப்படும். எனவே உங்கள் வருமானம் முழு வரிவிலக்கு பெறுகிறது.

**ரூ. 75,000 தேக்கு மரம் போனஸ்**

நீங்கள் முதலீடு செய்யும் ஒவ்வொரு அனுபவ் குட் எர்த் யூனிட்டுக்கும், 20 ஆண்டுக்கால முடிவில், ரூ. 75,000 குறைந்த பட்சமாக மதிப்பீடு செய்யப்பட்ட, 0.85 கன மீட்டர் (30 க. அடி) தேக்குமரம் உங்களுக்குக் கிடைக்கும்.

- அனுபவ் குட் எர்த் யூனிட்டுகளை எளிதாக இன்னொருவருக்கு மாற்றிக் கொள்ளலாம்.
- எந்தக் காலத்திலும் முதலீடு செய்பவர் திட்டத்திலிருந்து விலகிக் கொள்ளலாம்.
- எல்லா விசா/மாஸ்டர் கார்டுகள் ஒப்புக் கொள்ளப்படும்.
- திட்டம் 'A'க்கு மட்டுமே தவணை முறை வசதி. ஒரு அனுபவ் குட் எர்த் யூனிட்டுக்கு, மாதம் ரூ. 800/- ஆக 4 மாதத்திற்குச் செலுத்த வேண்டும்.



**அனுபவ் ஃபினான்டேஷன்ஸ் லிமிடெட்**

முதலீட்டைப் பயிரிடுங்கள்

11, சோமசுந்தரம் தெரு, தி. நகர், சென்னை-600 017.
☏போன்: 8254155, 8282833, 8282829. ☏பேக்ஸ் 044-8284967.

பம்பாய் ● டெல்லி ● கல்கத்தா ● பெங்களூர் ● கொச்சி ● ஹைதராபாத்

| திட்டம் | யூனிட் எண்ணிக்கை | முதலீட்டுத் தொகை (ரூ) | 5 ஆண்டுகளுக்கு ஆண்டு தோறும் உத்தரவாத வருமானம் (ரூ) | 5 ஆண்டு முடிவில் திரும்பப் பெறும் தொகை (ரூ) | போனஸ் | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | தேக்குமர எண்ணிக்கை | உத்தரவாத தேக்குமர அளவு (க.மீட்டர்) | எதிர்பார்க்கப்படும் வருமானம் (20 வருட முடிவில்)** (ரூ) |
| A | 1 | 3,000 | 600 | 3,000 | 1 | 0.85 (30 க.அடி) | 75,000 |
| B | 5 | 15,000 | 3,000 | 15,000 | 7 | 5.95 (210 க.அடி) | 5,25,000 |
| C | 10 | 30,000 | 6,600 | 33,000 | 14 | 11.89 (420 க.அடி) | 10,50,000 |
| D | 30 | 90,000 | 21,000 | 1,05,000 | 45 | 38.23 (1350 க.அடி) | 33,75,000 |

** 20 வருடங்களுக்குப் பிறகு எதிர்பார்க்கப்படும் விலையான கனமீட்டருக்கு ரூ.88,300/- (ரூ. 2500/- க அடிக்கு) என்ற அடிப்படையில் கணக்கிடப்பட்டது.

DISCOVER A DIAMOND ART GALLERY

# SUGAL & DAMANI

*Enter a dazzling world of
diamonds at SUGAL & DAMANI,
the exclusive showroom for
diamond jewellery.
Hand - picked diamonds
of superior quality and lustre
set in exquisite designs,
western and ethnic,
to suit the tastes of
both men and women*

Where Diamonds speak the Language of art



SUGAL AND DAMANI JEWELLERS

36, Cathedral Road, Madras - 600086. Tel.: 8259514 Fax: 846676

Anugrah 2125/95




சந்தனம்
ரெக்ஸோனாவை
தொட்ட போது,
மேனியிலே
பூத்தது பட்டு உணர்வு.

இதோ, சந்தனம் சேர்ந்த புதிய ரெக்ஸோனா. பட்டுப் போன்ற உணர்வும், சந்தனத்தின் நறுமணமும் உள்ளது. இது இயல்பான வழியிலே மேனிக்கு தருகிறது பட்டு மெருகிடும் மென்மை. மேலும் இப்போது ரெக்ஸோனா இரு வடிவிலே... உங்கள் அபிமான தேங்காய் எண்ணெய் சேர்ந்த ரெக்ஸோனா மற்றும் ரெக்ஸோனா சந்தனம்.

புதிய

# ரெக்ஸோனா

நற்குணமுள்ள சந்தனம்
சேர்ந்தது.

ந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

SUPPLEMENT TO MANGAYAR MALAR SEPTEMBER '96
REGISTERED NO. TN MS (S) 231
Registered as Newspaper in Sri Lanka

# இதயம் நல்லெண்ணெய்

## நானும் ஒரு கில்லாடி தான் ...

என்ன சார்...
என்ன அப்படிப் பார்க்கறீங்க?
என்னடா வீட்டுக்காரியை
ஆபீசுக்கு அனுப்பிச்சிட்டு இவன்
சமையல் பண்ணிக்கிட்டு
இருக்கானேன்னா?



இன்னைக்கு வீட்ல விசேஷங்க.
எங்க கல்யாண நாள், அவனுக்கு லீவு
கிடைக்கலை. நான் ஆபீசுக்கு லீவு
போட்டுட்டு என் நளபாகத்தை
ஆரம்பிச்சிட்டேன். சமையலிலே
நானும் ஒரு கில்லாடி தான்.
இருக்கவே இருக்கு
இதயம் நல்லெண்ணெய்.
அதுல சமையல் செஞ்சா சுவையும்
மணமும் பிரமாதம்.

இதயத்திற்கு இதமானது **இதயம் நல்லெண்ணெய்**

இதயம் நல்லெண்ணெய் இரத்தத்தில்
கொலஸ்ட்ரால் அளவைக் குறைக்கிறது.

DELHI DISTRIBUTOR
M/S. PANDIAN STORES, 137, Shasthri Market, Moti Bagh,
New Delhi - 110 021. Ph. : 6877557 & 6111079

HYDERABAD DISTRIBUTOR
M/S. IDHAYAM SALES AGENCY, 15-2-406, Siddiambar Bazaar, III Floor,
Land Mark Centre, Room No.5, Hyderabad - 500 012. Ph. : 510525



Silverspoon

